அமுதம்—137
உரிமை பதிவு
முதற் பதிப்பு: ஜூன், 1957

இந் நூல் 'மூன்று பெண்கள்' என்ற தலைப்பில்
1951-ம் ஆண்டு "தமிழ் நாடு" ஞாயிறு
மலரில் தொடர்ந்து வெளி வந்தது.

விலை ரூ. 3-40

நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனாம்பேட்டை, சென்னை-18.

# மனக் கொழுந்துகள்

## 1. உடன் பிறந்தார் சுற்றத்தார்

''கொடுத்து வைத்த குடும்பம்!''

யாரைக் கேட்டாலும் ரங்கசாமியின் குடும்பத்திற்குக் கிடைக்கும் பட்டம் இதுதான். கொடுத்து வைத்த குடும்பம் என்று பலராலும் புகழ் பெற்ற குடும்பமாகிவிட்டது. ரங்கசாமி அண்ணன் என்றாலும், அவன் தம்பிக்குத்தான் குடும்பத்தில் பொறுப்பு. குடும்பத்திற்குக் கொடுத்து வைத்த குடும்பம் என்ற பெயர் கிடைத்தது போலவே, ரங்கசாமியும் கொடுத்து வைத்தவன் என்ற புகழ்ப் பெயரை எய்தினான்.

ரங்கசாமியின் தகப்பனார் சாதாரண வாழ்க்கையை ஆரம்பித்தவர். திருச்சி நகரின் மிக நெருக்கடியான காந்தி மார்க்கெட்டில் அவர் பெட்டிக் கடை வைத்த முதலாளி. சிம்னி விளக்கில் தீப்பற்ற எடுத்துக் கொடுக்கும் சிறிய, வெற்றிலை-பாக்கு-வாசனைப் புகையிலை-பீடி-சிகரெட் விற்கும் நபராக இருந்தார். பலதுளி பெரும் வெள்ளமாக ஓடி அவர் வாழ்க்கையில் ஒளி பிறக்கவில்லை. அவர் வாழ்வுப் பாதையில் அதிருஷ்டதேவதை தேடி வந்து குறுக்கிடவில்லை.

அதற்குப் பதில் இரண்டாம் உலக மகாயுத்தம் குறுக்கிட்டது. பெட்டிக்கடை முதலாளி வாடிக்கைக்காரர்களுடன் போர் புரிந்தார்.

பெட்டிக்கடை முதலாளி பிரபுவாக மாறும் வாய்ப்புக் கிடைத்தது, வருகிறவர் போகிறவர்களுக்குப் பீடி சிகரெட் எடுத்துக் கொடுத்த கையிலே கரன்ஸி நோட்டுகள் கசங்கின. வெங்காயக் கிட்டங்கிகள், அரிசி கிட்டங்கிகள், வாழைக்காய் ஏற்றுமதி இப்படித்தான் அவர் ஆரம்பித்தார். திடீரென்று யுத்த அரக்கனின் ஆவேசம் வளர வளர, திருச்சியை அடுத்து வந்து தங்கும் ராணுவ முகாம்களில் அவரது சேவை தேவைப்பட்டது. பெட்டிக் கடைக்குப் பூட்டு விழுந்தது. கை வண்டிக்காரர்கள் அவர் சொல்லுக்குச் செவி சாய்த்தது போய், லாரி டிரைவர்கள் காத்துக் கிடந்தனர். பொருள் களின் சேமிப்பைவிட அவை பல இடங்களிலும் எல்லாருக்கும் கிடைக்கும்படி செய்யும் விநியோகத் தொண்டாற்றினார்.

யுத்தத்தின் தேவையான பொருள்கள் குவியவும், இடம் மாற வும் அவரது குரலுக்கு ராணுவ நிர்வாகிகள் காத்துக் கிடந்தனர். தொழில் மும்முரங்கள் அவரை வாட்டிப் பிழிந்தன. பாங்கியில் கணக்கு, பக்கத்தில் எடுபிடி ஆட்கள், கணக்கு வழக்குப் பார்க்க மனித யந்திரங்கள் எல்லாம் தாமே தேடி வந்து அவர்மேல் மோதின. பிரபல கண்டிராக்டர் என்ற பேரும் புகழும் சர ணடைந்தன. யுத்தத்திற்கு என்னென்னவோ தேவை மக்காச் சோளம், மரத்தூள், உப்பு, மண், புடலங்காய், புளியங்கொட்டை ஏதோ பல மண்ணாங்கட்டிகள் தேவை. பெருவாரியான சரக்கு களுக்கு இவர் பொறுப்பு; அல்லது பிறர் பொறுப்பேற்ற சரக்கு களை இடம் விட்டு இடங்கொண்டு வந்து சேர்க்கும் வாகன வசதியை இணைப்பது, இவ்வாறு இவர் சேவை பெருகிற்று.

காந்தி மார்க்கெட்டுக்கு அருகிலே வரகனேரியில் இருந்த ஆதி அரண்மனையின் பரப்பு அவருடைய உடல் நுழையக்கூடப் போதாமல் போகவே, பிரம்மாண்டமான வீடு கட்ட, நினைத் தார். நினைவைச் செயலாக்கப் பல சிப்பந்திகள் நிற்கிறபோது என்ன குறைச்சல்? அவர் எண்ணங்கள் நினைவுகள் பற்பல கட்டங்களாக மாறின. அவர் உதட்டசைப்பு பல ஆயிர ரூபாய் மதிப்புள்ளது, என்றாயிற்று. சுற்று வட்டாரத்தில் புகழ், கொடி விடுகிறது. பணம் வந்தாலும் வரகனேரியில் பழைய பட்டம் பெட்டிக் கடைக்காரர் என்ற பெயர் போகவில்லை. பழமையை உதற, புதிய இடம் புதிய ஊர் இதுவே சரியான வழியெனக்

கண்டார். திருச்சியில் கண்டோன்மென்டில் புதிதாகக் கட்டப் பெற்ற வீட்டிற்குக் குடியேறினார்கள். அக்கம் பக்கத்தார் அந்தக் குடும்பத்திற்கு, "கொடுத்து வைத்த குடும்பம்" என்றே கௌரவம் கொடுத்தும் பேசினார்கள்.

புதுப் பணத்தினால் அவருக்கு ஏற்பட்ட ஆசைகள் பல. அதிலே ஒன்று தாமே மோட்டார் ஓட்ட வேண்டும் என்பது. விலையுயர்ந்த மோட்டார் வாங்கினார், கற்றுக்கொள்ள மதுரை—திருச்சி ரஸ்தா மார்க்கத்தில் போனபோது அவரது துர் அதிர்ஷ்டம் அறுபது மைல் வேகத்தில் எதிர் வந்தது. பணத்தின் ஒரு பகுதியான மோட்டார், எமன் ரூபம், எடுத்ததைப் போன்று அவரைப் பிணமாக்கிற்று. உடன் இருந்த மோட்டார் ஓட்டி தன் வாக்கு மூலத்தில் "ஐயா புதிசாக மோட்டார் ஓட்டக் கத்துக்கிட்டாங்க, எதிரே பார வண்டி வந்தது. 'பிரேக்' என்ற நினைப்பில் ஆக்ஸிலேட்டரை அழுத்திப்புளிய மரத்தைத் தாக்கிவிட்டு மோட்டாரில் அடிபட்டார்" என்றான்.

ரங்கசாமியின் தகப்பனார் காலமான சமயம், திருச்சியில் ராணுவத்துக்குத் தேவையான பொருளை, சப்ளை செய்வதோடு சென்னையிலும் அவர்களுக்கு ஒரு கிளை ஸ்தாபனம் இருந்தது. திருச்சியிலுள்ள பங்களாவைப் பணமாக மாற்றிக்கொண்டு சென்னைக்கே தேனாம்பேட்டையிலுள்ள பங்களாவிற்குப் போகவேண்டிய நிலைமை வந்தது. பெட்டிக் கடைக்காரரின் இரு குமாரர்களும், தங்களது பூர்வீகச் சொத்து, மனப்பான்மை, இவை மறந்து பரம்பரைத் தனவந்தர்கள் போல மாறிவிட்டார்கள். பணத்திற்கல்லவா அத்தனை அரிய சக்தியிருக்கிறது! சென்னைக்குக் குடியேறிய அந்தக் குடும்பம் ஒரு வருஷ காலத்தில் வியாபாரத்துறையில் முன்னேற்றம் அடைந்தது.

கொடுத்து வைத்த இந்தக் குடும்பத்திலே ரங்கசாமி அண்ணன், வேலய்யா தம்பி, இருவரும் வயசு வந்த காளைகள். மணப் பருவத்தை நெருங்கிக்கொண்டு, வயதடைந்த பெண்ணைப் பெற்ற பலபேருடைய கண்ணில் சிக்கியிருந்தார்கள். ஆனால் ரங்கசாமிக்குப் பிரபல சினிமா நடிகை மிருதுலதாமீது சிந்தனை, ஏக்கம்; மணந்தால் அவளை மணப்பது, இல்லை பிரம்மச்சாரி என்ற முடிவு செய்திருந்தான். தன் பணத்தின் வசீகரத்தால் அவள் நட்புக்கு வழி செய்து நாளாரம்பத்தில் அவள் அன்புக்குத் தன் மனதையும்

உடலையும் உரை கல்லாக்கிக்கொண்டு வந்தான். தம்பி வேலைய்யா வுக்கும் அவன் தாயாருக்கும் இந்த விஷயம் காதில் விழும். தடை சொல்ல பயம்; குடும்பத்தின் தலைவன் என்ற கௌரவம் குறுக்கிட்டது. மிருதுலதாவுக்கும் ரங்கசாமிக்கும் கல்யாணமே ஆகி விட்டது என்ற புரளி கூட ஏற்பட்டது.

சில விசிறிகள் "கேள்வி—பதில்" பகுதியில் கேட்பார்கள். நம் மிருதுலதாவை மணக்கப்போவது ரங்கசாமியா? யார் இந்த ரங்கசாமி? என்றார்கள். பதில் எழுதும் ஆசிரியர்கள், "நண்பர்கள்" என்று சொன்னார்கள். அவள் படம் இல்லாத வீடு இல்லை. அவள் புகழ் பாடா ரசிகன் இல்லை. ஆண் பெண் என்ற பலருடைய அன்பையும் கொள்ளை கொண்ட நட்சத்திரம். எந்த முனிவனும் உள்ளம் கலங்கி ஒரு கணம் தன்னை மறக்கும் வசீகரத் தோற்றம் கொண்டவள். காவியக் கண்களை யார்தான் மறந்தார்கள். தங்களிடமே காதற் கதைகள் பேசுவதாகப் பிரமை தரும் கண்கள் அவை. உருவப் பொலிவில் மட்டுமின்றி அவள் சாகஸங்கள் சரித்திரப் பிரசித்தி பெற்றவை. திரைப்படக் கலைக்காகக் கற்ற தந்திரங்களை, குதிரையேற்றங்களை கையாளுவாள். கத்தி வீச்சைத் திரையில் பார்த்தோர், அவள் கண்வீச்சைக் காண நடுவீதியில் ஏங்குவார்கள்.

சில சமயம் சென்னை நகரத்தின் ஜன நெருக்கடியான வீதிகளில் மோட்டார் ஓட்டிக்கொண்டு தனியே போகும் சாமர்த்தியம் உள்ளவள் மிருதுலதா. குதிரையில் கூட ஏறிப்போவதைக் கண்டதாகச் சில ரசிகர்கள் பேச்சுக் கிளம்பும், மற்ற நட்சத்திரங்கள் ரசிகப் பெருமக்களின் நெருக்கடிக்குப் பயந்து பதுங்கிக் கிடந்தது போல அவள் இருக்கவில்லை; அவள் எங்கும் வருவாள். இன்பமாய்ப் பேசுவாள். தான் ஒதுக்கப்பெற்ற பெரிய மனுஷி, பிரபல நட்சத்திரம் என்றில்லாமல் பல பொதுக் காரியங்களில் சாதாரண நபரைப்போல வந்து உட்கார்ந்துவிடுவாள். இதனால் இன்னும் அவள் பெருமை பரவிற்று.

இத்தனை கீர்த்தியும் கொள்ளை கொள்ளும் அழகும் வாய்ந்த பெண்ணையே ரங்கசாமி விரும்பினான். இதில் தவறு என்ன? பெண்ணை ஆணும், ஆணைப் பெண்ணும் விரும்புவது இயற்கை. ஆனால் பணம் ஒன்றையே முதலாகக் கொண்ட ரங்கசாமியின்

இதயத் தடாகத்திலே அந்த மிருதுலதா மொட்டு அலை மோதிக் கொண்டிருந்தது. மொட்டின் மலர்ச்சி, அதன் சுகந்தம் தனக்கே என்று ரங்கசாமி மனப்பால் குடித்தான். மிருதுலதாவின் இதயம், அவள் மனப்போக்கு, என்ன? பெண் இதயத்தின் ஆழத்தை உலகத்தில் உழன்றவர்களால் காண முடியாதபோது உலக அநுபவம் சிறிதுமற்ற அவன் உள்ளம் கண்டுவிடக்கூடுமா?

மிருதுலதாவின் வசீகர வடிவத்திற்கும் வாய் நிறைந்த புன்னகைக்கும் வணங்காத தலைகளெல்லாம் வணங்கி வந்தன. அவளுடைய நண்பர் என்று சொல்லிக்கொள்வது பெரிய இடங்களில் மௌசாக இருந்தது. இந்தமாதிரி மிருதுலதாவின் அன்புக்குப் பாத்திரமாகிவிட்ட ரங்கசாமி அவளையே மணக்க ஆசை கொண்டதில் வியப்பில்லைதான். அவனை இன்ப ஜ்வரம் பிடித்துக் கொண்டது.

தமிழ் நாட்டிலே மணமாகவேண்டிய பண வசதியுடைய சீர் திருத்தக் காளைகள் பலரும், மிருதுலதாவின் கண்ணசைவிற்குக் காத்திருந்தனர். அவர்களில் தானொருவன் என்பதை ரங்கசாமி எங்கே கண்டான்? தம்பி வேலய்யா சாடையாக எச்சரித்திருந்தான். தாயார் காமாட்சியம்மாளும் அதை ஆமோதிக்கும் குரலில் இருந்தாள், வாய்விட்டுப் பேச பயம்.

இந்த எச்சரிக்கை நடந்து ஒரு வாரம் ஆயிற்று. ரங்கசாமி போகவில்லையென்றோ, போவேன் என்றோ பதில் சொல்லவில்லை. ஆனால் ரங்கசாமியைத் தேடிக்கொண்டு மிருதுலதா வந்திருந்தாள். தன் அறைக்குள்ளிருந்து வேலய்யா பார்த்தான். மின்னல் ஒன்று புன்னகை புரிந்து, மேனி குலுங்க, தன் அண்ணன் அறைக்குள் நுழைகிறது. அதன் பெயர் மிருதுலதா!

"இங்கே அவள் வந்துவிட்டாளா? நான் அண்ணனைப் போகக் கூடாது என்றேன், அவள் வருகிறாள். விளக்கை நாடி விட்டில் வரும்; விட்டிலை நாடி விளக்கு வருகிறது. எல்லாம் பணம்'' என்ற சிந்தனையில் ஆழ்ந்தான் தம்பி. அவன் சிந்தனையைத் தடைப்படுத்தின, எதிர் அறைக்குள்ளிருந்து வந்த சிரிப்பலைகள்.

கூர்ந்து கேட்டான் வேலய்யா. இருவர் சிரிப்பும் ஒன்றோடொன்று ஐக்கியமாயின. விட்டு விட்டுப் பிரிந்தன. அவளுடைய சதங்கையொலிச் சிரிப்பிலே, கலீர் கலீர் என்ற பேச்சிலே அடக்க

மும் பெருமிதமும் இல்லை. இடம்பமும் பகட்டுமே தூக்கலாக இருந்தன. அவளுடைய அன்புக்குத் தான் எவ்வளவு பிரம்மாண்ட மான பிரவாகம், காட்டாற்று வெள்ளம்போல் எங்கோ சாடி மணலோடு சுவறிப்போகும் தன்மையை நினைவில் எழுப்பும். அத்தனையும் நடிப்பு, வேஷம். இதை அண்ணன் புரிந்துகொள்ள வில்லையே என்று மனம் நொந்தான் தம்பி வேலைய்யா.

சில விநாடிகளில், அந்த அறைக்குள் பேசிய மின்னல் நடந்து வந்து காரில் ஏறிற்று. அவள் போயும் அவள் விட்டுச் சென்ற சென்டின் மணம் சுற்றிக்கொண்டு நின்றது. மின்னல் கண்ணைப் பறித்ததும் இமைக்குள் ஒரு இருள்திரை படருமே. அப்படித்தான் வேலைய்யா உணர்ந்தான். கடமையைச் செய்ப வர்கள் கருத்தைச் சொல்லப் பின்வாங்க மாட்டார்கள். வயதையும் அறிவின் முதிர்ச்சியையும் கூட மறந்து, சகோதர பாசத்தால் அண்ணன் அறைக்குள் நுழைந்தான்.

வாசலுக்கு எதிராக இருந்த மேஜையிலே மிருதுலாதவின் உயரிய 'போஸ்' கண்ணாடிச் சட்டத்திற்குள் அடைபட்டுக் கண்ணை கவர்ந்தது. வேலைய்யா கனைத்துக்கொண்டான். சோபாவிலே அழுத்தலாக அமர்ந்திருந்த ரங்கசாமி, "என்ன காரியம்?" என்று கேட்டான்.

"நான் சொல்கிறேன் என்று தவருக நினைக்கக் கூடாது அண்ணுச்சி."

"என்ன? பீடிகை பலமாக இருக்கிறது. கிருஷ்ணபரமாத்மா கூட இத்தனை பீடிகையுடன் அருச்சுனனுக்கு உபதேசித்திருக்க மாட்டார்."

"நமக்குள் குடும்பத்தில் பாரதப் போர் வேண்டாம். இந்த வீட்டை குருக்ஷேத்திரமாக்கிவிடவும் வேண்டாம். நான் வந்த காரியம் தங்களுக்குத் தெரியும் அந்தக் குப்பச்சி."

"குப்பச்சியா?" என்று கோபத்தை அடக்கிக்கொண்டான் ரங்கசாமி. போன வாரம் நடந்த புத்தி போதனையில் மிருதுலதா வின் இயற்கைப் பெயர் குப்பச்சியோ ராக்காயியோ என்று நகைத் தபடி சொல்லியிருந்தான். தம்பி இன்று மீண்டும் சொல்லுகிறுன்.

"நான் சொல்லும் குப்பச்சி யில்லை—ராக்காயி ஏதோ ஒரு பெயர் ஆதியில் இருக்க வேண்டும். இந்த மிருதுலதாவிற்கு."

"நீதான் அவளுக்குப் பெயரிட்ட பாட்டன். அவளை மிருதுலதா என்பதைத் தவிர எது சொன்னாலும் எனக்குக் கோபம் வருமா." ரங்கசாமியின் குரலில் தமையன் என்ற அதிகார வெறி இருந்தது. வேலெய்யாவின் இதயத்தில் அன்பு ஊற்றெடுத்தது, வெறித்துப் பார்க்கும் வேட்டை நாய் முயல் குட்டியைப் பார்ப்பது போன்று அண்ணன் தம்பியைப் பார்க்கிறான்.

"அண்ணாச்சி, உங்களைவிட நான் வயதில் சின்னப்பயல். இருந்தாலும் உங்கள் செய்கையை நான் ஆதரிக்க முடியாது."

"நீ ஆதரிக்க முடியாது. உன் ஆதரவில் வாழ்கிறேனா?"

"ஐயோ அண்ணாச்சி. என் வார்த்தையைத் தப்பர்த்தம் செய்கிறீர்கள். உங்கள் செய்கையை நான் ஒப்ப முடியாது. நான் வயதில் சிறியவன்."

"புரிந்தது. புத்தியில் சின்னப் பயலாகிய எனக்குப் புத்தியில் பெரியவராகிய நீ, இல்லை தாங்கள், போதனை செய்கிறீர்கள்." ரங்கசாமி கொடூரமாகச் சிரித்தான்.

"நான் சொல்ல வந்ததைச் சற்றுக் கேட்க வேண்டும்."

"என் செய்கையை நீ ஆட்சேபனை செய்கிறாய். மிகவும் சந்தோஷம். தம்பிக்கு என் மீது பொறாமை!" சொல்வதைச் சற்று விளையாட்டாகச் சொன்னான். "என் மீது பொறாமை" என்ற சொல் வேலெய்யாவின் நெஞ்சைத் தீய்த்தது.

"பொறாமையில் பிறந்த துவேஷப் பேச்சன்று அண்ணாச்சி· உங்கள் மீது கள்ள அன்பும், சகோதர பாசமும் முக்கியமாகக் குடும்பக் கடமையும் காரணங்கள்."

"குடும்பத்தின சர்வாதிகாரி இப்போது பேசுகிறார். புரிந்து கொண்டேன். நான் சர்வாதிகாரியின் ஆக்ஞைக்குக் கட்டுப்பட வேண்டும்."

"நான் சொல்வதை வீணாக அனர்த்தம் செய்யவேண்டாம். தங்கள் கண்ணிலும் கருத்திலும் தவறாகப்பட்டாலும் அதை நியாயமாகக் கொள்ளவேண்டும்."

"என்ன சொல்லுகிறாய்?"

"அண்ணாச்சிக்கு இந்தத் தம்பி சொல்லப்போகும் விஷயம் என்னவெனத் தெரியும். இருந்தாலும் தம்பியின் வாய் வார்த்தையாகச் சொல்லிக் காதாரக் கேட்பதில் உங்களுக்கு மகிழ்ச்சி."

எரிச்சலாக, "சொல்லேன்" என்றான் தமையன்.

"நம்முடைய குடும்ப நலனுக்காக மட்டுமன்று, உங்கள் சொந்த நன்மைக்காகவும் நலத்திற்காகவும் சொல்லுகிறேன்"

கள்ளம் தோய்ந்த சிரிப்பு ரங்கசாமியின் கன்னத்திலே குழிந்தன. "வேலய்யா உனது மனதை அறிந்தேன் என் நன்மை வேறு, உன் நன்மை வேறு. ரொம்ப சந்தோஷம்," என்றவன் சிரித்துக்கொண்டு விஷமத்தனமாகக் கண்ணடித் தபடியே சோபாவில் அமர்ந்தான். தமையன் தம்பியைப் பார்த் துச் சொல்லும் சொல், 'உன் நன்மை வேறு என் நன்மை வேறு.' இந்த சொல்லின் விஷமத் தன்மையை ஒடிந்த மனத்தோடு உணர்ந் தாலும், தான் கொண்ட கொள்கையை முடித்துவிடும் ஊக்கத் தோடு நிமிர்ந்து நிற்கும் கர்ம வீரனைப் போன்று, "அண்ணச்சி என்னைப்பற்றித் தாங்கள் என்ன சொன்னாலும் சரி, நீங்கள் அந்த மிருதுலதாவை மறந்துவிடுவதே மேல்". தயக்கம் தோய்ந்த குரலில் சொன்னான் தம்பி.

தனக்குள்ளாக, 'மறக்க வேண்டும்' என்று சொல்லியபடியே தம்பியை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கண்களில் கோபம் கொப்பளித்தது.

"ஆமாம்" என்றான் சற்று அழுத்தமாக.

"ஓகோ நீ காதலிக்கிறாயா? தம்பி. நீ மிருதுலதாவைக் காதலிக்கிறாயா? என்னை வாபஸ் பெறச் சொல்லுகிறாய்."

ரங்கசாமி இடக்காகக் கேட்டு வாய் மூடுமுன், "சீ அந்த நாயை நான் காதலிக்கிறேன்!" என்று எக்காளமாகச் சிரித்தான். அதிலே வெறுப்பின் எதிரொலி, அலட்சியத்தின் பிரதிபலிப்பு இருந்தது. மிருதுலதாவை நாயுடன் உவமை கூறும் தைரியம் தம்பிக்கு எப்படி வந்தது? இதை ரங்கசாமியின் 'மூளை கேட்டது உணர்ச்சியோ பிறிட்டுக் கிளம்பிற்று. அடக்கிக் கொண்ட ரங்க சாமி சாவதானமாகப் பேசினான்.

"நாய் ரொம்பவும் நன்றியுள்ள பிராணி. அன்பின் சொரூபம். நாயைவிட நன்றிக்கு உரிய பிராணி எது? தம்பி இந்த நாயின் உவமை உன்னைவிடச் சரியாக யார் சொல்லக் கூடும்? மிருது லதாவின் உள்ளம் என் காலடியில் கிடக்கும் நாய் உள்ளம் கொண்டது. எஜமான விசுவாசம் உள்ளது. என்னிடம் உயிரை

வைத்துள்ள அன்பின் சொரூபம். ஆமாம் என் மனப்படியும் உன் மனப்படியும் அவள் நாய்.''

எதிராளியைக் கோபமாகத் திட்டுவதைவிட பரிகாசமாகப் போற்றுவதே, தூற்றுவதில் சிகரமடையும் வழி. அண்ணன் இதைக் கைப்பிடிக்கவே வேலெய்யா திடுக்கிட்டான். பின் வாங்கவும் பேசவும் தடைப்பட்ட சமயம், 'போஸ்டு' என்ற குரல் கேட்டது.

வேலெய்யா தபாலை வாங்க வந்தான். இரண்டொரு கடிதங்கள் வந்திருந்தன. அவனுடைய தாய் மாமன் கையெழுத்துத் தெரியவே அதைப் பிரித்தான்.

''மாமா அவர்கள் கிராமத்திலிருந்து வருவதாக எழுதியிருக்கிறார்கள் அண்ணாச்சி.''

''ஒன்றும் குறைச்சல் இல்லை. உனக்குத்தானே எழுதியிருப்பார்.''

எதிர்பாராத விதமாக மீண்டும் ஒரு தாக்குதல் விழுந்தது. மாமனார் வருவதையும் அண்ணன் ரசிக்கவில்லை. சொல்லவந்த காரியத்தை ஆணித்தரமாகச் சொல்லிவிட எண்ணியவன், ''அண்ணாச்சி தாங்கள் என்னைப் புரிந்து கொண்டாலும் சரி, இல்லை தவறாக எண்ணினாலும் சரி. தாங்கள் அந்த மிருதுலதாவை மறந்துவிடுவதே'' என்ற தம்பியை இடை மறித்து பேசினான் ரங்கசாமி.

''உனக்கு எத்தனை முறை சொல்ல அவள் என் உயிர்.''

''உயிர் உங்களுடையது அண்ணாச்சி. அவளுடைய பிடிக்குள் அகப்பட்டால் உடம்புதான் மிஞ்சும்.''

''இது என் உடம்பு, பிறர் கவலைப்பட வேண்டியதில்லை.''

''ஆமாம், அந்த உடம்பின் உடன் பிறப்புத்தான் இந்த உடம்பு!''

ரங்கசாமிக்கு ஆத்திரம் பொங்கிற்று. குடும்பத்தை நிர்வகிக்கும் காரணத்தால், அந்தப் பழக்கத்தின் உரிமையால் தன்னை விரட்டுகிறான் என்ற எண்ணம் மனதில் உறுத்திற்று. 'உன்னை அடக்கியாளப் பார்க்கிறான். அதுவும் உன் தம்பி; அண்ணனைக் கட்டுப்படுத்துவது தவறென்று பேசிற்று, ரங்கசாமியின் உள்ளம். அண்ணனின் உள்ளம் விசுரூபம் எடுத்தது.

"உடன் பிறப்பு இருக்கட்டும் உன் புத்தி போதனை எனக்குத் தேவையில்லை."

"கண்மூடித்தனமாகக் காதல் கொள்பவர்கள் பின்னர் தங்கள் மடமையை நினைத்து நினைத்து அழுவார்கள்."

"தம்பீ ஈ...ஈ" என்றிறைந்தான். பதறிவிட்டான், வேலையா. அந்த அறையே கிடுகிடுத்தது. புயல் ஓய்ந்த மாதிரி இருந்தது அவ்வளவு உரத்த குரலில் கத்தினான். கண்களிலே கோபத்தால் நீர்த்துளிகள் தேங்கி நின்றன. வேலையா முகத்தை உயர்த்தாது கடைக் கண்ணை உயர்த்திப் பார்க்கவே பயம் குடிகொண்டது. அண்ணன் உடம்பு கோபத்தில் வெட வெடன ஆயிற்று. குரலிலே ஆத்திரம் ஏற்றிக் கத்தினான்.

"தம்பி, காதலுக்கு உள்ளானவர்கள், உடல் பொருள் ஆவி மூன்றையும் கொடுக்கிறார்கள் என்று நீ பார்த்திருப்பாய், கேட்டிருப்பாய். மிருதுலதாவின் மனம் எல்லோருக்கும் தெரியும் பளிங்கன்று. எனக்குத் தெரியும் மாணிக்கம் அது. ரத்தினத்தின் தரம், ரத்தினத் தொழிலாளிக்குத்தான் தெரியும். நட்சத்திரத்தின் பெயரும் இடமும் வான சாஸ்திரிக்குப் புரியும். சுருதியின் பெருமை பாடகனுக்கும், சட்டத்தின் நுணுக்கம் வக்கீலுக்கும்..."

"போதும் போதும் தோலின் பெருமை, செருப்புத் தைக்கிற தொழிலாளிக்கும்..."

அடுத்த விநாடி வேலையா வேறு உவமை சொல்லுமுன் அவன் கன்னத்தில் ஐந்து விரல்கள் பதிந்தன. மிருதுலதாவை இழிவு படுத்திய அந்த வாய், ஒரு சொல் கூடச் சொல்லமுடியாமல் திணறிற்று. அடிபட்ட இடத்தைத் தடவினான் தம்பி. அடித்து நின்ற அண்ணன், "பேசாதே, போ என் அறையைவிட்டு" என்று கர்ஜித்தான். தம்பி சொல்லிய தோலின் பெருமை என்னும் உவமை அவனை உன்மத்தன் ஆக்கிற்று. வெறியனாக நின்றான். அண்ணன் மூர்க்கத்தனமாக அறைவான், அதுவும் கன்னங்களில் விரல் பதிய அடிப்பான் என்று எதிர்பார்க்கவில்லை. அடிபட்டு, வர வர வலிதெறித்தது.மெல்லிய சிவந்த கன்னத்தில் எரிச்சல்பரவிற்று.

"அண்ணைச்சி அன்புக்குத்தான் நான் தம்பி. அடிக்கு நான் தம்பியன்று." இந்தச் சொல்லைத் தேங்கி நிற்கும் கண்ணீர்த் துளிகள் சிதறுவண்ணம் காப்பாற்றிக்கொண்டு பேசினான். கோழை

போல அழ எண்ணமில்லை. பெருகி வந்த கண்ணீர் இமையோரங்களில் தத்தளித்தன. அடக்க அடக்க ஆத்திரம் விம்மலாகப் பெருகிற்று, ரங்கசாமி ஏறிட்டுப் பார்த்தபோது தம்பியின் கண்களிலிருந்து இரு கண்ணீர்த் துளிகள் கன்னத்தில் விழுந்தன பார்க்கவே உடல் சிலிர்த்தது தம்பியைச் சிறு பிராயத்தில் கூட இப்படி அடித்ததில்லை ஆனால் தனது காதல் விவகாரத்தில் குறுக்கிட்டதால் கண்டிக்கவேண்டுமென்ற தீர்மானத்திற்குள் எண்ணம் வந்து வட்டமிட்டது. மறுகணம் சகோதர பாசம் போட்டியிடும். தம்பியைப் பார்க்கச் சக்தியற்ற முகத்தைக் கையால் மறைத்துக் கொண்டு படபடத்த உடலேயும் துடிதுடித்த கையையும் கட்டிக் கொண்டு சோபாவில் அமர்ந்தான்.

வேலேய்யா நின்றவன் நகராது சொன்னான். குரலிலே வேண்டுகோள்; சிறிது கண்டிப்புத் தொனித்தது.

"மரியாதைக்காக, மூத்தோன் என்ற கௌரவத்திற்காகப் பார்த்தேன் அண்ணாச்சி. தாங்கள் இரண்டு தவறுகளைச் செய்தீர்கள். குற்றத்தை உணராது உதைப்பவன் முட்டாளாக இருக்க வேண்டும். தன் தமையன் என்ற காரணத்தால் நான் எதையும் மறந்துவிடுகிறேன். மீண்டும் கேட்கிறேன். அந்த நடிகை மிருதுலதாவின் நட்பு உங்களுக்கு வேண்டாம். ஆபத்து,மறந்துவிடுங்கள்."

வேலேய்யாதான் அடிபட்ட கோபம், அண்ணன் தவற்றினை உணரும் வேளை இரண்டையும் ஐக்கியப்படுத்தி, மேலும் மேலும், புத்திசொன்னான். அவன் சொற்கள் நொந்த புண்ணிடைப் பட்ட, தீயாக வேதனை தந்தன. ஆனால் பணிந்து போக நினைத்த ரங்கசாமியின் கோபம் மகுடி கேட்ட நாகம்போல் சீறிற்று. மிருதுலதாவைக் குறை சொல்லும்போது அவன் மனப் புற்றுக்குள் அது உடலை நிமிர்த்திக்கொண்டது; சீறிக்கொள்ளும் கோபமும் பாம்பும் ஒன்றே. எதுவாயினும் தான் சாக மருந்துண்ணும் பிறவிகள்.

திடீரென்று, "நிறுத்து வேலேய்யா, உன் யோசனைகளை இன்று முதல் நீ மூட்டைகட்டி வைத்துவிடு. என்னிடம் உபதேசம் செய்ய வேண்டாம்" என்று கடுமையாகச் சொன்னான்.

"மாற்றானுக்கு உபதேசிக்கும் மத குரு அல்ல நான். உங்கள் தம்பி. ரத்த பாசம் என்னைப் பேசச் சொல்கிறது. தான் ஆடாவிட்டாலும் தன் சதை..."

தம்பியின் தொண தொணப்பு வண்டின் ரீங்காரம் போல அவன் காதில் வட்டமிட்டது. வண்டு மலர்த்தோட்டத்தில் ரீங்காரமிட்டால் அநுபவிக்கலாம். படுக்கையறையில் சுற்றி வந்தால் அநுபவிக்க மனம் வருமா? தன் காதல் பூங்காவிற்குள் தம்பியின் உபதேசச் சொற்கள் நுழையக்கூடாது என்று முடிவு கட்டினான் ரங்கசாமி.

"அண்ணாச்சி மேலும்......"

பேச ஆரம்பிக்குமுன் இரு காதுகளையும் விரல் நுனியால் அடைத்துக்கொண்டு, எதிர் திசையில் திரும்பி புறமுதுகு காட்டினான். செவிசாய்க்கப் பிரியமில்லை என்பதோடு முகத்திலும் விழிக்க மனமில்லை என்பதை வெளிக் காட்டியாயிற்று.

தம்பி வேலய்யா இதைத் தோல்வியாக எண்ணுகிறவன் அன்று. அவன் கர்மவீரன். செயல் பிரதானம். காரியம் தலைக்கு மேல் போய்விடுவதற்குள் மூளையில் கிள்ளவே துடி துடித்தான். தமையன் மனம் மேலும் வருந்த, பச்சாதாபம் கொள்ள வேண்டும் என்ற நினைப்பில் "அண்ணாச்சி நான தவறாகப் பேசியிருந்தால் மன்னியுங்கள்" என்று சொல்லிவிட்டு குருக்ஷேத்திர அறையிலிருந்து வெளியே வந்தான்.

ஐந்து நிமிஷம் சென்றது.

தம்பி போய்விட்டான் என்று தெரிந்த, ரங்கசாமி சோபாவில் நேராகத் திரும்பி உட்கார்ந்து விரல்களைக் காதைவிட்டு எடுத்தான். பெருமூச்சு விட்டபடியே "சை, பெரிய சனியனாக இருக்கிறானே இந்தப் பயல்." என்று வாய்விட்டுச் சொல்லியவன் மனச் சாந்திக்குப் புகைக்க ஆரம்பித்தான். சுருள் சுருளாகப் புகை மண்டலம் சுருண்டது.

அந்தப் புகை மண்டலத்திலே மிருதுலதாவின் நிலவு முகமும் தம்பியின் கருமேகம் போன்ற சொற்களும் புலனாயின. நிலா முகம் சிரித்தது. அண்ணன் இதயத்திலே தாங்க முடியாத துவேஷமும் தம்பியின் உள்ளத்திலே அளவு கடந்த அன்பும் சுரந்துகொண்டிருந்தன.

"ஏண்டா ரங்கு, நீ என்ன பேயா பிசாசா? இப்படி விரல் பதிந்து வீங்கும்படியா அடிப்பது?" என்று கேட்டுக்கொண்டே தாயார் காமாட்சியம்மாள் அந்தக் குருக்ஷேத்திர அறைக்குள்

நுழைந்தாள். தன் மனவானில் நிலாவெரித்துக்கொண்டிருந்த மிருதுலதாவின் சந்திரவதனத்தை மறந்து, எதிரே ஏறிட்டுப் பார்த்தான்.

ஒரு நாளும் கோபப்படாத தாயார் எதிரே நின்ருள்.

# 2. தாழம்பூ வந்தது

கலைக் கோயில்!

மயிலாப்பூர் பஸ் ஸ்டாண்டைவிட்டு மார்பலம் மார்க்கமாக வரும் நபர்களை சுட்டிக்காட்டும் கலைக் கோயில் அந்தப் பங்களா. வாசலிலே பள பளவெனப் பொறிக்கப்பெற்ற தகட்டிலே '**கலைக் கோயில்**' என்ற எழுத்து ஒரு புறம். மற்ருெரு புறம் நடிகை மிருதுலதா என்ற எழுத்துக்கள். 'இன்' என்ற பக்கத்திலும் 'அவுட்' என்ற பக்கத்திலும் 'கலைக் கோயில்' 'நடிகை மிருதுலதா' என்ற எழுத்துக்கள் பலருடைய கண்ணையும் கருத்தையும்கவர்ந்தன

'இதுதான் சார் நம்முடைய மிருதுலதா பங்களா' என்று பெருமிதமாகத் தெரிந்தவர் தெரியாதவருக்கு பஸ்ஸில் போகும் போதோ, நடந்து செல்லும்போதோ உற்சாகத்தோடு சொல்லுவார். உள்ளூர் வாசிகளும் அயலூர் அசடுகளும் அந்தக் கலைக் கோவில் என்ற எழுத்துக்களை உச்சாடனம் செய்யாமற் போனல் அவர்கள் நடிகர்களாகத்தான் இருக்கவேண்டும். நடிகர்கள் அல்லாத யாவரும் ஒரு முறை அந்தக் கலைக் கோயிலின் வாசற் கதவுகளைக் கழுத்தைத் திருப்பிப் பார்க்காமல் போகமாட்டார்கள். வேலைய்யா சென்னை வாசியாக இருந்தும் அந்தப் பாதை வழியே பலமுறை வந்தும் உள்ளே நுழைந்தவன் அல்ல.

நாலைந்து தினங்கள் மிகவும் தீர்மானித்து முடிவு கட்டிக் கலைக் கோயிலின் கேட்டுகளை கடக்க முயன்ருன். ஏறிவந்த மோட்டார் சைக்கிளின் டப டப சப்தம் கேட்டு, "யாரது? நிறுத்துங்கள்" என்று ஒரு முரட்டுக் குரல் மஞ்சள் அரளி வேலிக்குப் பின்னிருந்து வந்தது. வாசலில் நின்ற கூர்க்கா அநுமதித்தும் உள்ளே போக வொட்டாது தன்னைத் தடை செய்த அந்த மனிதனைப் பார்த்தான் வேலைய்யா. பருத்த தொந்தி, மஸ்லின் சட்டைக்குள் படுத்திருந்தது. முகத்திலே கடா மீசை செம்மறியாட்டுக் கொம்புபோலச் சுருள் விட்டு நிற்க, தன் சதையின் பாரத்தைச் சமாளிக்க இடசாரி வல

சாரி தோள் அசைத்து முட்டுக்குமேலே கட்டிய அந்தச் சாய வேட்டி ஆசாமி வந்தான். மிருதுலதாவுக்கு, இவன் என்ன உறவு? சிந்தித்தான் வேலய்யா.

"யார் நீங்கள்?" என்றான் வந்தவன்.

"நான் மிருதுலதா அம்மாவைப் பார்க்க வந்தேன்."

"மிருதுலதா அம்மாவைப் பார்க்க வேண்டுமானால் கண்ணை மூடிக்கொண்டு உங்கள் மோட்டார் சைக்கிளில் போக வேண்டும். நேரே எம பட்டணம்" அவுட் வாணம்போல அவன் சிரித்தான். அந்தச் சிரிப்பிலே கள்ளங் கபடு இல்லை. வெகுளி இருந்தது. பார்வைக்குப் பயங்கரமாக இருந்தவன், பேச்சில் வெகுளியாய் வெளிப்படையாய் இருக்கவே வேலய்யா தன் பேட்டிக்கு வெற்றி ஏற்படலாம் என்ற நினைப்பு ஓடிற்று.

"அம்மாவைப் பார்க்க வந்தீங்களா?" என்று அன்பாகக் கேட்டான் மீசை ஆசாமி.

"ஆமாம்."

"பத்திரிகைக்காரங்களா நீங்கள்?"

"வேறு யாருமே உங்கள் அம்மாவைப் பார்க்கக் கூடாதா?"

"பத்திரிகை நிருபரா இருந்தா உடனே பார்க்கலாம். மற்றவர் களானால், அம்மா வரச்சொன்னபோது வரணும்."

"நான் பத்திரிகை ஆசாமி யில்லை."

"வந்த காரணம் சொல்லுங்களேன்."

"நீ யாரப்பா? உன்னிடம் பேச வரவில்லை."

"நான், உங்கள் பேச்சை நிறுத்து எடைபோட்டு அனுப்பினால் தான் அம்மா உங்களைப் பார்ப்பாங்க. இல்லை திரும்பிப் போக வேண்டியதுதான். எதுக்கும் வாங்க. போய் வெளி வராந்தா விலே உட்காரலாம். என்னை அறியாமல் ஒரு ஈ, ஒரு காக்கை இங்கே நுழைய முடியாது."

மோட்டார் சைக்கிளை ஓரமாக நிறுத்தி, பங்களாவின் வராந்தா வில் உட்கார்ந்தான் வேலய்யா. தன்னுடைய பங்களாவிற்கு எந்த வகையிலும் பின்வாங்கவில்லை. பங்களாவின் அழகிய தோற்றத்தை அலசிய சமயம் நோட் புஸ்தகம் ஒன்று கொண்டு வந்து, "இதிலே உங்கள் விலாசம் பெயர் எழுதுங்கள்" என்றான் குண்டப்பா.

"நான் யாரென்று சொன்னால் போதாதா?"

• "போதாது."

"அடேயப்பா எவ்வளவு கெடுபிடி."

"இது சினிமா நட்சத்திரத்தின் வீடு. அதிலேயும் மிருதுலதா அம்மா வீடு."

'என் பெயர், வேலையா.நான் வந்த விபரம் சொல்லுங்கள்."

"எழுதுவதானால் எழுதுங்கள். அப்படியே எழுதினாலும் அம்மா குறிப்பிடும் நாளில் குறிப்பிட்ட மணிக்குத்தான் சந்திக்க முடியும்."

குண்டப்பா இப்படிச் சொன்னதும் சர்க்கார் காரியாலயங்களில் நடக்கும் தாமத அமுலும் நினைவிற்கு வந்தது. தன் அண்ணாச்சியின் பெயரைச் சொன்னால் அந்த ஆசாமி குலாம் ஆகலாம். யோசனை வந்ததும் அதைத் தள்ளிவிட்டான். இன்னாருடைய தம்பி என்று சொல்வதை அவமானமாக நினைத்தான். தன் பெயர் விலாசம் குறிக்கவும், இஷ்டமில்லை. குறிப்பில் எழுதாமல் போனால், சந்திக்க முடியாது. சந்திக்க எண்ணம் கொண்டு தனது விலாசம் பெயர் குறித்தான்.

"கொடுங்க, ஒருவேளை அம்மா இருந்தா கேட்டுப் பார்க்கிறேன்."

குண்டப்பா போய்விட்ட பின்பு, வேலையா எதிரே தெரிந்த சிறிய சிமெண்டு குளத்திலே பிறந்த மேனியாய் நிற்கும் வெள்ளியச் சிலையொன்றைப் பார்த்தான். யானையொன்று துதிக்கையால் அச் சிலைக்குத் தண்ணீர் கொட்டிக் கொண்டிருப்பது போல் உருவாக்கப்பட்டிருந்தது. கல் யானையின் மத்தகத்திலே மீன்கொத்திக் குருவி யொன்று சிறகடித்துப் பறந்து வந்து உட்கார்ந்தது. இந்தச் சிமெண்டுக் குளத்தில் மீன் ஏது? அசட்டுப் பறவை! என்று வேலையா எண்ணிய சமயம் இவர்கள் பேச்சு வார்த்தையை உட்பக்கம் நின்று கேட்ட மிருதுலதா, "குண்டப்பா" என்றாள். சாய வேட்டிக் குண்டப்பா தன் சதையை இடசாரி வலசாரி தூக்கி "அம்மா" என்று தாயின் குரல் கேட்ட கன்று போல ஓடினான்.

"இவன் பெயர் குண்டப்பாவா? சரியான பெயர்" என்று மீன்கொத்திப் பறவையைப் பார்த்தபடியே தனக்குள் சொல்லிக் கொண்டான் வேலையா.

வீட்டுக்குள் பேச்சுக் குரல் கொடுத்தாள் மிருதுலதா. "அது யார் தெரியுமா? குண்டப்பா, நம்முடைய ரங்கசாமி இருக்கிறுரே, அவரது தம்பி. உள்ளே என் ஆபீஸ் அறைக்குள் அழைத்துச் செல்" என்றதும் குண்டப்பா ஆச்சர்யப்பட்டான். சிரித்துக்கொண்டே பதில் சொன்னன்.

"ரங்கசாமி ஐயா தம்பியா? அதைச் சொல்லக் கூடாது! சொல்லியிருந்தா டிபன் கொடுத்திருப்பேன். வந்தவரு புதுப் பொண்ணு மாதிரி இருக்கார்."

"போய் வரச்சொல்."

தவழும் குழந்தை நடக்கக் கற்ற வேகத்தில் ஓடுகின்ற அழகில் குண்டப்பா வந்தவன், "அட நீங்க இன்னுருன்னு ஒரு வார்த்தை சொல்லக் கூடாது என்ன ஆளு போங்க" என்று அசட்டுச் சிரிப்பாக அஷ்டகோணல் உடம்போடு சொன்னன் குண்டப்பா.

"நான் என்றைக்கு வரவேண்டும்?"

குண்டப்பா பதில் சொல்லும் முன்னதாக, "நட்சத்திரம் குடி இருக்கும் வீட்டில் நாள பார்க்க வேண்டுவதில்லை, நமஸ்காரம்" என்று தாமரை மொட்டுப் போன்று மெல்லிய நீண்ட மருதாணிச் சாயம் ஏறிய விரல்களைக் குவித்தாள். அவளுடைய பேசும் கண்களைப் பார்க்க அஞ்சியவன் போன்று தலை தாழ்த்தியே வேலைய்யா வணக்கம் செலுத்தினன். புன்னகை தவழ, மெல்லிய பட்டாடை உடலில் நெளிய, கூந்தல் தோளிலே அலை புரளத் துவளும் கொடியாக எதிரே நின்ருள் மிருதுலதா. பேச்சற்றுப்போன வேலைய்யாவை, "வாருங்கள் இந்த அறைக்கு" என்ருள். வெண்கலப் பதுமையின் பின் செல்லும் சிற்பாசிரியன் போன்று நடந்த வேலைய்யாவின் கண்களில், கண்ணுடி போல அவள் உடுத்தியிருந்த சல்லாச் சேலையும் வாரி முடிபோட்டிருந்த கூந்தல் அழகும் தெரிந்தன. அவள் பூசியிருந்த செண்டின் மணம் உள்ளத்தையும் உடலையும் எங்கோ தூக்கிச் சென்றது. அறைக்குள் வந்ததும் வெகு உபசரணையாக "இங்கே உட்காருங்கள்" என்று சோபாவில் உட்கார்ந்தாள். உட்கார்ந்தாளா? அலட்சியமாகப் போய் அதிலே விழுந்தாள். சோபாவில் அவள் இருக்கும் லளிதம், நடந்த ஒய்யாரம் எல்லாம் நடிப்பாகவே இருந்தன

மெல்லிய மிருதுவான குரலில் "தாங்கள் யார்?" என்ருள். சொகுசுக் கண்கள் அவனை வட்டமிட்டன. சுந்தரப் புன்னகை அவனைச் சுற்றி வந்தது. அவள் பேச்சில் களங்கமே யில்லை. முகத்தில் ஆச்சர்யமோ விழிகளில் அதிர்ச்சியோ இல்லை. வேலய்யா அவளுடைய குழந்தை மனத்துப் பேச்சிலுள்ள வசீகர சக்தியை அறிந்தான்.

"என்னைத் தெரியவில்லை என்று சொல்லுகிறீர்கள்?"

"நாம் சந்திப்பது இதுவே முதல் தடவை, அதாவது இந்த ஜன்மத்தில்."

"எனக்கு ஜன்மாந்திர நம்பிக்கை உண்டோ இல்லையோ. எங்கள் பங்களாவிற்கு வந்தீர்கள்."

"எத்தனையோ பங்களாவிற்குப் போகிறோம். வருகிறோம். சந்திக்கிறவர்கள் அவ்வளவு பேரும் நினைவில் இருக்கிருர்களா."

அவள் சிரித்தாள். விஷந் தோய்ந்த சிரிப்பு. பிறர் மனதை ஆழம் காணும் முறையில் சிரித்தாள்.

"நான் ரங்கசாமியின் உடன் பிறந்த சகோதரன். தம்பி".

ஒன்றும் அறியாத அப்பாவி போல, "எந்த ரங்கசாமி? மாம் பழக் கடை ரங்கசாமியா? ஓகோ ஏதாவது நடிகர் வேலைக்குச் சிபார்சு செய்யச் சொல்லுகிறீர்களா?" என்று மறைமுகமாகக் கிண்டல் செய்தாள். வேலய்யாவுக்கு ரோஷம் பிறந்தது.

"என்னைப் பார்த்தால் நடிகன் போலவா இருக்கிறது?"

"ஏன் நடிகர்களும் மனித ஜன்மத்தில் சேர்க்க வேண்டிய பிரகிருதிகள் தாமே, ஆகாயத்திலோ கடலுக்குள்ளோ இருந்து வந்த அதிசய ஜீவன்கள் இல்லையே."

"நடிகர்கள் கூட்டத்தில் தயவுசெய்து என்னைச் சேர்க்க வேண்டாம். நான் எந்தப் படத்திலும் நடிக்கச் சிபார்சு தேடி வரவில்லை"

"உங்கள் முகவெட்டும், கண்ணும், எடுப்பான நாசியும் பரந்த மார்பும்...அசல் நடிகர்களில் எத்தனை பேருக்கு இருக்கிறது சொல் லுங்கள்." அங்க வர்ணனைகளை உற்று நோக்கியபடி குறும்புக் கண் கொண்டு சிரித்தாள்.

சொல்லிவிட்டு அவள் சிரித்ததும் ஏறிட்டுப் பார்த்தான். மெல்லிய செங்கிறப் பட்டுப் பையைத் திறந்து வெண் முத்துக்களைக்

வீட்டுக்குள் பேச்சுக் குரல் கொடுத்தாள் மிருதுலதா. "அது யார் தெரியுமா? குண்டப்பா, நம்முடைய ரங்கசாமி இருக்கிறாரே, அவரது தம்பி. உள்ளே என் ஆபீஸ் அறைக்குள் அழைத்துச் செல்" என்றதும் குண்டப்பா ஆச்சர்யப்பட்டான். சிரித்துக்கொண்டே பதில் சொன்னான்.

"ரங்கசாமி ஐயா தம்பியா? அதைச் சொல்லக் கூடாது! சொல்லியிருந்தா டிபன் கொடுத்திருப்பேன். வந்தவரு புதுப் பொண்ணு மாதிரி இருக்காரு."

"போய் வரச்சொல்."

தவழும் குழந்தை நடக்கக் கற்ற வேகத்தில் ஓடுகின்ற அழகில் குண்டப்பா வந்தவன், "அட நீங்க இன்னாருன்னு ஒரு வார்த்தை சொல்லக் கூடாது என்ன ஆளு போங்க" என்று அசட்டுச் சிரிப்பாக அஷ்டகோணல் உடம்போடு சொன்னான் குண்டப்பா.

"நான் என்றைக்கு வரவேண்டும்?"

குண்டப்பா பதில் சொல்லும் முன்னதாக, "நட்சத்திரம் குடி இருக்கும் வீட்டில் நாள பார்க்க வேண்டுவதில்லை, நமஸ்காரம்" என்று தாமரை மொட்டுப் போன்று மெல்லிய நீண்ட மருதாணிச் சாயம் ஏறிய விரல்களைக் குவித்தாள். அவளுடைய பேசும் கண்களைப் பார்க்க அஞ்சியவன் போன்று தலை தாழ்த்தியே வேலைய்யா வணக்கம் செலுத்தினான். புன்னகை தவழ, மெல்லிய பட்டாடை உடலில் நெளிய, கூந்தல் தோளிலே அலை புரளத் துவளும் கொடியாக எதிரே நின்றாள் மிருதுலதா. பேச்சற்றுப்போன வேலைய்யாவை, "வாருங்கள் இந்த அறைக்கு" என்றாள். வெண்கலப் பதுமையின் பின் செல்லும் சிற்பாசிரியன் போன்று நடந்த வேலைய்யாவின் கண்களில், கண்ணாடி போல அவள் உடுத்தியிருந்த சல்லாச் சேலையும் வாரி முடிபோட்டிருந்த கூந்தல் அழகும் தெரிந்தன. அவள் பூசியிருந்த செண்டின் மணம் உள்ளத்தையும் உடலையும் எங்கோ தூக்கிச் சென்றது. அறைக்குள் வந்ததும் வெகு உபசரணையாக "இங்கே உட்காருங்கள்" என்று சோபாவில் உட்கார்ந்தாள். உட்கார்ந்தாளா? அலட்சியமாகப் போய் அதிலே விழுந்தாள். சோபாவில் அவள் இருக்கும் லளிதம், நடந்த ஒய்யாரம் எல்லாம் நடிப்பாகவே இருந்தன.

மெல்லிய மிருதுவான குரலில் "தாங்கள் யார்?" என்றாள். சொருசுக் கண்கள் அவனை வட்டமிட்டன. சுந்தரப் புன்னகை அவனைச் சுற்றி வந்தது. அவள் பேச்சில் களங்கமே யில்லை. முகத்தில் ஆச்சர்யமோ விழிகளில் அதிர்ச்சியோ இல்லை. வேலய்யா அவளுடைய குழந்தை மனத்துப் பேச்சிலுள்ள வசீகர சக்தியை அறிந்தான்.

"என்னைத் தெரியவில்லை என்று சொல்லுகிறீர்கள்?"

"நாம் சந்திப்பது இதுவே முதல் தடவை, அதாவது இந்த ஜன்மத்தில்."

"எனக்கு ஜன்மாந்திர நம்பிக்கை உண்டோ இல்லையோ. எங்கள் பங்களாவிற்கு வந்தீர்கள்."

"எத்தனையோ பங்களாவிற்குப் போகிறோம். வருகிறோம். சந்திக்கிறவர்கள் அவ்வளவு பேரும் நினைவில் இருக்கிறார்களா."

அவள் சிரித்தாள். விஷந் தோய்ந்த சிரிப்பு. பிறர் மனதை ஆழம் காணும் முறையில் சிரித்தாள்.

"நான் ரங்கசாமியின் உடன் பிறந்த சகோதரன். தம்பி".

ஒன்றும் அறியாத அப்பாவி போல, "எந்த ரங்கசாமி? மாம் பழக் கடை ரங்கசாமியா? ஓகோ ஏதாவது நடிகர் வேலைக்குச் சிபார்சு செய்யச் சொல்லுகிறீர்களா?" என்று மறைமுகமாகக் கிண்டல் செய்தாள். வேலய்யாவுக்கு ரோஷம் பிறந்தது.

"என்னைப் பார்த்தால் நடிகன் போலவா இருக்கிறது?"

"ஏன் நடிகர்களும் மனித ஜன்மத்தில் சேர்க்க வேண்டிய பிரகிருதிகள் தாமே, ஆகாயத்திலோ கடலுக்குள்ளோ இருந்து வந்த அதிசய ஜீவன்கள் இல்லையே."

"நடிகர்கள் கூட்டத்தில் தயவுசெய்து என்னைச் சேர்க்க வேண்டாம். நான் எந்தப் படத்திலும் நடிக்கச் சிபார்சு தேடி வரவில்லை"

"உங்கள் முகவெட்டும், கண்ணும், எடுப்பான நாசியும் பரந்த மார்பும்...அசல் நடிகர்களில் எத்தனை பேருக்கு இருக்கிறது சொல்லுங்கள்." அங்க வர்ணனைகளை உற்று நோக்கியபடி குறும்புக் கண் கொண்டு சிரித்தாள்.

சொல்லிவிட்டு அவள் சிரித்ததும் ஏறிட்டுப் பார்த்தான். மெல்லிய செந்நிறப் பட்டுப் பையைத் திறந்து வெண் முத்துக்களைக்

கொட்டியது போன்றிருந்தது. செம்பவள உதட்டுக்குள்ளே வெண்மையான அழகிய பற்கள் கண்ணாடி போன்று மின்னின, வேலைய்யா திகைத்தாலும் தன் மனச் சஞ்சலத்தை வெளிக் காட்டாது சாமர்த்தியமாகப் பேசினாள்.

"பிற நடிகர்களின் தேக சௌந்தர்யத்தை அளக்கும் கலைஞர் களுக்கும் நடிகர்களுக்கும் எனக்கும் ஒரு வித்தியாசம்."

"என்ன?" என்று எக்காளமாகக் கேட்ட மிருதுலதா, உடலை வளைத்து ஆவல் நிறைந்த முகத்தோடு முன்னே சாய்ந்தாள்.

"உண்மையில் என்னால் நடிக்கவே முடியும். அதனால் தான் என்னைச் சினிமா நடிகர்களோடு ஒப்பிட வேண்டாம் என்று சொல்லுகிறேன்."

மிருதுலதாவுக்கு உள்ளூர இந்தப் பதில் சுருக்கென்றது. மேலாகச் சிரித்துச் சமாளித்துக்கொண்டே, "பேஷ் பேஷ் அப்படி யானால் ரங்கசாமியின் தம்பி என்பதும் நடிப்புத்தானே?" என்று மடக்கினாள்.

"இப்போது ரங்கசாமியை இன்னார் என்று தெரிந்துகொண் டீர்கள்; மகிழ்ச்சி."

மிருதுலதா அகப்பட்டுக் கொண்டாள். மட்டந்தட்டப் பட்டும் ஒரு விநாடி கண் சிமிட்டாமல் பார்த்துக்கொண்டு, "நான் கேட்க வேண்டிய கேள்வியல்லவா அது?" என்றாள்.

"யாரையும் மடக்கிவிடலாம் என்று நினைக்கிறவர்கள் தாங்களே என் போன்ற அப்பாவிகளிடம் மடங்கிப் போவதும் உண்டு."

வேலைய்யாவுக்குத் தன் வெற்றியில் தனியான சந்தோஷம்.

"மூத்தது மோழை. இளையது காளை யென்ற விஷயத்தில் நீங்கள் கெட்டிக்காரர் தாம். நாம் டிபன் சாப்பிட்டுவிட்டு—குண்டப்பா டிபன் கொண்டுவா—உம் மேலே பேசலாம்."

"உண்ட வீட்டிற்கு இரண்டகம் செயயக்கூடாது பாருங்கள். அதனால் இங்கே சாப்பிட முடியாது."

"அதென்ன இரண்டகம்? கரண்டகத்தின் தாயாதியா?"

"மன்னிக்கவும். தயவுசெய்து ரங்கசாமி, என் அண்ணாச்சி வாழ்க்கையில் தாங்கள் பிரவேசிக்க வேண்டாம். இது என்னு டைய வேண்டுகோள்."

"ஒன்றும் புரியவில்லையே."

"அப்பட்டமாகச் சொன்னால், மணந்தால், தங்களையே மணப்பது, இல்லையென்றால் பிரம்மச்சாரியாக வாழ்வது என்று அவர் தீர்மானித்திருக்கிறார்."

மிருதுலதா கல கலவென அந்த அறையே அதிரும்படி சிரித்தாள். எதற்காக அப்படி உரத்துச் சிரிக்க வேண்டும்? ஒரு வேளை தன்னை முட்டாள் ஆக்குகிறாளா என்ற ஐயம் எழுந்தது. இருக்கலாம், நடிகையல்லவா?

"தமிழ்நாட்டிலும் கடல்கடந்த தேசத்துத் தமிழர்களில் சிலரும் சுமாராக ஒரு கோடி வாலிபர்கள் என்னை மணப்பதாகக் கனவு காண்கிறார்கள். மணக்கச் சித்தமாக இருப்பதாகக் கடிதங்கள் மூலமாகவும் நேராகவும் பத்திரிகை வாயிலாகவும் எழுது கிறார்கள்."

அவள் சிரித்துக்கொண்டே சொன்னாள். வேலைய்யா சட்டென "என்னையும் அந்தத் திருக்கூட்டத்தில் ஒருவனாக நினைத் துப் பைத்தியமாக்க வேண்டாம். அண்ணன் செய்கையை நான் கண்டிக்கிறேன். தாங்கள் உடன்படுவது தவறு என்றும் வேண் டிக்கொள்கிறேன்" என்றான்.

"வேண்டிக்கொள்வானேன்?"

"எச்சரிக்கை செய்கிறேன் என்பது அவ்வளவு நாகரிகமாய் இருக்காது."

"ஓகோ தமையனைத் தான் வேண்டிக் கொள்ளலாம். எச்சரிக்கை செய்யலாம். என்னையும் அப்படி நினைப்பது...நான் என்ன சொல்லுகிறது?"

வார்த்தை கிடைக்காமல், கருகருவென நெளிந்த கூந்தலை மார் பக்கத்திலே ஒரு கற்றை தூக்கிப் போட்டுக் கோதி விட்டுக் கொண்டிருந்தாள். அந்த வேளை மோட்டார் ஒன்று வந்து வெளி யில் நிற்பதும், அதிலிருந்து இறங்குகிற ஆள் இன்னொரென்றும், வந்தவரைக் கூப்பிட்டு எதிர் அறையில் இருக்கும்படி கட்டளை யிட்டாள். குண்டப்பா வந்திருப்பவரின் பெயரை உச்சரிக்க ஆரம்பித்ததும் சுட்டு விரலால் வாயை மூடி "உஸ். போ, எதிர் அறையில் உட்கார வை," என்றாள். குண்டப்பா இடசாரி வலசாரி யாகத் தன் உடம்பைத் தூக்கி ஓடினான்.

வந்தது யாரென்று வேலைய்யா அறியவில்லை. யாரோ பார்க்க வந்திருப்பதால், "நான் சொன்னதைத் தயவுசெய்து சிந்தியுங்கள்: நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இரு சாராருடைய நன்மைக்குமே நான் சொல்லுகிறேன்" என்று சொல்லிஎழுந்தான்.

"இது என் மண வாழ்க்கையைப் பொறுத்த விஷயம். அதனால் நான் அவசரப்பட்டு உங்களுக்கு வாக்குறுதி கொடுக்க முடியாது. நாம் இன்னொரு முறை சந்திக்கலாம்."

"சந்திக்கும்பொழுது என் மனப்பூர்வமான முடிவு கிடைக்குமென எதிர் பார்க்கிறேன்." என்று சொல்லிய வேலைய்யா நகர்ந்தான். மிருதுலதா சொன்ன பதில் எவ்வளவு நயவஞ்சகம் நிறைந்தது என்பதை வேலைய்யா அப்போது உணரவில்லை. எதிர் அறையில் இருந்த நபர் ரங்கசாமி. அவன் காதில் விகற்பமாக விழவேண்டுமென்பதற்காகவே "இது என் மண வாழ்க்கையைப் பொறுத்த விஷயம், அதனால் நான் அவசரப்பட்டு உங்களுக்கு வாக்குறுதி கொடுக்க முடியாது. நாம் இன்னொரு முறை சந்திக்கலாம்" என்று சொன்னாள் மிருதுலதா.

மிருதுலதாவுடன் பேசிவிட்டு வெளியே வரும் நபரை அடுத்த அறையில் இருந்தபடியே ரங்கசாமி பார்த்தபோது ஸ்தம்பித்து உட்கார்ந்தான். தன்னருமைத் தம்பி வேலைய்யாவுக்கு இங்கே என்ன அலுவல்? ஏன் வந்தான்? கோபக் கனல் புகைய ஆரம்பித்தது. இடம், அயலிடம் என்பதை நினைத்து மனசிற்குள்ளேயே அமுக்கிக்கொண்டான். இல்லாவிடில் கன்னத்தில் விரல் பதிய அடித்தது போலில்லாமல் எலும்பையே நொறுக்கியிருப்பான்.

வேலைய்யா விடைபெற்று, ஏதோ பலத்த யோசனையோடு தமையன் ஓட்டிவந்துள்ள தன் வீட்டு மோட்டாரைக் கூடக் கவனிக்காமல், தனது மோட்டார் சைக்கிளில் ஏறினான். டப டப தொடர்ந்தது. வேலைய்யா வெளி கேட் தாண்டியதும் "குண்டப்பா" என்றாள் மிருதுலதா.

பித்தனைப்போல் இருந்த ரங்கசாமியிடம் வந்து, "அம்மா உங்களை கூப்பிடறாங்க" என்றான் குண்டப்பா.

கூண்டுக்குள்ளிருந்து சர்க்கஸ் வளையத்தில் ஆட்டம் போட வரும் புலிபோல உணர்ச்சிச் சுழிப்புகளை உள்ளடக்கி வருந்தியழைக்கும் வாய் நிறைந்த புன்னகையுடன் வந்தான் ரங்கசாமி.

"மன்னிக்கவேண்டும். நண்பர் ஒருவர் வந்து பேசிக்கொண்டிருந்தார்; குண்டப்பா, டிபன் கொண்டுவரச் சொல்—உங்களுக்கு காபியா டீயா?" என்றாள் புன்னகை பொலியும் முகத்தோடு.

"ஏதோ ஒன்று" என்றான் ரங்கசாமி. அவன் குரலில் வழக்கம் போலுள்ள உற்சாகமில்லை.

"எங்கள் வீட்டில் தயாரிக்கும் இரண்டு பானங்களுக்கும் வித்தியாசம் இல்லை யென்றீர்களோ?" என்று கூறிச் சிரித்தாள்.

"நானுகக் கற்பிக்கவில்லை, மிருதுலதா."

"டிபன் சாப்பிட்டுவிட்டு மன்னிக்கவும் மிஸ்டர் ரங்கம். எனக்கு ஒரே தலைவலி இன்று நான் கடற்கரைக்கு வரவில்லை" என்று பீடிகை போட்டாள்.

குண்டப்பா எவர்சில்வர் தட்டில் டிபன் கொண்டு வந்து வைத்தான். கடற்கரைக்கு உல்லாசச் சவாரி போக நினைத்து வந்தவன் ஏமாற்றம் அடைய நேர்ந்தது. அதுவும் தம்பியால் நேர்ந்த தடையா? ஏமாற்றம் கனலாக நெஞ்சில் மூண்டது. ஒப்புக்குக் காப்பி குடித்துவிட்டு மௌனமாக இருந்த வேளை இருவர் கண்களும் அடிக்கடி சந்தித்தன. சந்தித்த சமயம் குனிந்து கொள்வார்கள். மிருதுலதாவுக்கு எரிகிற தீயை எப்படி ஏற்றித் தள்ள வேண்டுமென்று தெரியும். அந்த வித்தையைத்தான் அவள் மௌனம் சாதித்து விசிறிக்கொண்டிருந்தாள்? நெஞ்சம் அனலாகக் கொதிக்க ரங்கசாமி ஏமாற்றம் நிறைந்த முகத்தோடும் மனத்தோடும், "நான் போகிறேன் மிருதுலதா" என்றான்.

"போய் வாருங்கள்" என்று எழுந்து வழக்கம் போல விடை கொடுக்கவில்லை. ஒய்யாரமாக இருந்த இடத்திலேயே விடை கொடுத்தாள்.

ரங்கசாமி கார் போனதும் மிருதுலதா தன் சாமர்த்தியத்தை யெண்ணி உரக்கச் சிரித்துக்கொண்டாள். மிருதுலதா சாகஸங்களின் பொக்கிஷ தேவதை என்பதை ரங்கசாமி எண்ணுமல், குரோத புத்தியைத் தன் தம்பி மீது திருப்பினான்.

மைலாப்பூரிலிருந்து வெகு நேரம் சென்ற பின்னர் சோர்ந்த மனத்தோடு தேனும்பேட்டையிலுள்ள தன் பங்களாவிற்குள் நுழைந்தசமயம் அவனை வரவேற்கச் சில புதியகுரல்கள் காத்திருந்தன. காரிலிருந்து அவன் இறங்கிய சமயம் "அடேடே நம்ம பெரிய

மாப்பிள்ளையா, எங்கே போயிட்டீங்க நீங்க?'' என்று அவனது தாய்மாமனார் வாஞ்சையோடு கட்டிக்கொண்டார். மாமனாரின்கிராமியத் தோற்றம் அவனுக்கு அருவருப்பாக இருந்தது. அதிலும் மிருதுலதா கடற்கரை வர மறுத்த சமயம், அவர் குரல் இன்னும் கர்ண கடூரமாக இருந்தது. மிகவும் வெறுப்போடு, ''ஆமாம், சௌக்கியந்தானே?'' என்று கேட்டுக்கொண்டு நடந்தான். நின்று பேசக்கூட முடியவில்லை.

நின்றுகூடத் தன்னிடம் பேசாத மருமகனைப் பார்த்திருந்த பெரியவர் "ஆமாம், ரங்கசாமி, நான் என்ன பட்டிக்காடு. உன் அப்பா இறந்த அன்று வந்தவன். அதுவும் திருச்சி வீட்டில் உங்களைப் பார்த்தேன். உருவத்தில் தம்பியும் அண்ணனும் ரொம்ப மாறிவிட்டீர்கள். உருவத்தை விட உன் 'தம்பியின் உள்ளம் மட்டும் இன்னும் மாறவில்லை'' என்றார். அப்போதுதான் வேலைய்யா அவரை ரயிலடிக்குப் போய் அழைத்து வந்திருந்ததால் அந்த நன்றியை மறக்கவில்லை. பெரியவர் சொல்லிக் காட்டினார்.

· தாய் மாமன் பேச்சைக் கேட்காமலேயே தன்னறைக்குள் நுழைந்த சமயம், அறையில் மற்றொரு வாசல் வழியே வந்த தாயார், "அட, வாம்மா, இதுதான் உன் பெரிய அத்தான். ஏண்டாப்பா ரங்கா, உன் மாமாவைப் பார்த்தாயா? மாமாவுடன் ஆவுடையும் வந்திருக்கிறாள்'' என்று தன் கையோடு இழுத்தாள். ஆவுடை என்ற பெயரைச் செவி மடுத்ததும் நாராசம் பாய்ந்தது போல இருந்தது. ஆனால் அவன் ஏறிட்டுப் பார்த்தபோது. பெயரில் என்ன இருக்கிறது என்று சமாதானம் செய்துகொண்ட சமயம் அன்பும் கருணையும் தோய்ந்த குரலில், "சௌக்கியமா பெரிய அத்தான்'' என்று கேட்டாள். மாமனாரிடம் பாராமுகமாக வந்து விட்ட ரங்கசாமிக்கு இந்த இனிய இன்பக் குரலிடம் பாராமுகம் காட்ட முடியவில்லை.

"ஏம்மா-இவள்-ஆவுடை இல்லை அஞ்சலை எப்போ வந்தாள்?'' என்று கேட்டான். மனம் விட்டு ஆனந்தமாகக் கேட்டான்.

"அப்பா எழுதிய கடிதம் நீங்கள் பார்க்கவில்லையா? அத்தான்?''

நாலைந்து தினத்திற்கு முன் அந்தக் குருக்ஷேத்திர அறையில் போர் ஆரம்பிக்குமுன் தம்பி வேலைய்யா கடிதம் வந்தது பற்றிச்

சொன்னது நினைவுக் கிற்ருக மனதில் எழுந்தது. "ஆமாம் கடிதம் வந்தது" என்று சமாளித்தான்.

"நீங்கள் ஏன் ரயிலடிக்கு வரவில்லை, பெரிய அத்தான்?" என்று சிறு குழந்தையின் மழலை மொழியில் ஆவுடையம்மாள் கேட்டாள். அக்குரல் கடல் காற்றின் மெல்லிய கிளுகிளுப்பை உடலில் பரப்பிற்று. தன் மாமனுரின் தோற்றத்தையும் அவர் மகளின் தோற்றத்தையும் சிந்தித்த ரங்கசாமிக்கு ஒரு உவமை புலனுயிற்று.

அதிக முள்ளும், கவர்ச்சியற்ற பசுமையும் நிறைந்த தாழைச் செடியில், குருத்துவிட்ட செக்கச் சிவந்த செந்தாழம்பூ அவள்!

"இதுதான் பெரிய அத்தான் ரூம்; வாம்மா, உன்னுடைய சின்ன அத்தான் வேலு ரூம் காட்டுகிறேன் வா. போகலாம்." என்று காமாட்சியம்மாள் அந்தச் செந்தாழம்பூவை தன் அருகணைத்து அழைத்துச் சென்ருள்.

செந்தாழம்பூ போவதைப் பார்க்க வேண்டும்போல் ரங்கசாமியின் உள்ளத்தில் ஆசை மூண்டது. சன்னலைத் திறந்து பார்த்துக்கொண்டிருந்தான். தாயார் அருகணைத்துத் தம்பியின் அறைக்குள் அழைத்துச் சென்றதும், விரக்தியுடன் திரும்பினுன். அவனுடைய மேஜையில் கலகலத்த சிரிப்பு நிறைந்த முகத்தோடு மிருதுலதாவின் பேசும் கண்கள், "என்னைப் பார் என் அழகைப் பார், இந்த உயரிய போஸ் என்ன? எப்படி?" என்று கேட்பதாகப் பிரமை யடைந்தான்.

மிருதுலதாவின் படத்தையே உற்று நோக்கினுன் ரங்கசாமி.

## 3. பெரிய அத்தானைக் காணோம்

உலகப் போக்கிலே பிச்சைக்காரர்கள் முதல் பிரபுக்கள் வரை எதிராளியின் மனவோட்டத்தை அறிவதிலேயே பெரும் பகுதியைச் செலவழிக்கிருர்கள். புருஷன் மனதைப் பூர்ணமாக அறிய முடியாமல் மனைவியும், மனைவியின் மன விசித்திரத்தை அறிய முடியாமல் புருஷனும் செத்து மடிவது இயல்பு. வாங்க வருபவன் மனதை விற்கிறவனும், விற்பவன் தன்னை ஏமாற்றக் கூடாதேயென்று வாங்குபவனும், ஒருவருக்கொருவர் மன ஆழம்

பார்ப்பதை நாம் காண்கிறோம். இந்தமாதிரி மனதின் தளத்தை அறிய ரங்கசாமி தீர்மானித்து ஒரு முடிவுக்கு வந்தான்.

தன் தம்பிமீது இருந்த ஆத்திரத்தில் கொன்று பழிவாங்க நினைத்தாலும், அதைச் சாமர்த்தியமாக, அன்றே கொல்லாமல் நின்று கொல்ல ஆசை பிறந்தது. காதல் நோய்க்குள் அகப்பட்டவர்களுக்குத் தம் மனத்திற்கு எதிரிடையாகப் போகிறவர்கள். தாய் தகப்பன் முதல் யாவரும் விரோதிகளாகவே தோன்றுவது இயல்பு. தகப்பனாரின் ஆதிக்கத்திற்கு இக்குடும்பத்தில் சந்தர்ப்பமில்லை. தாயோ விதவை. சிறு பிராயத்தில் ரங்கசாமியின் தகப்பனார் பெட்டிக்கடை, வெற்றிலை பாக்குக் கடை வைத்திருந்த நாளில் எருத் தட்டி வியாபாரம் செய்து நாலு காசு சம்பாதித்து பின் திடீரென யுத்த தேவதையின் கண் விழிப்பால் சாணி தட்ட வந்த கையிலே, பாலும் பழமும் விழுந்த சமயம் பாவி எமன் புருஷனைப் பறித்துக்கொண்டு போய்விட்டான். ரங்கசாமியின் மனதிற்கு எதிராக ஒரு காரியமும் காமாட்சியம்மாள் செய்பவள் அல்ல. பிள்ளையின் அதிர்ஷ்டமோ இஷ்டமோ எது சொன்னாலும் அதன் படியே தலையாட்டி வந்தாள். அடுக்களைப் பிராந்தியத்திற்கு இந்தப் பக்கம் காமாட்சியம்மாள் ஆட்சிக்கு மதிப்புக் கிடையாது. ஆனாலும் தன் பிள்ளைகள் தங்கக் கட்டி என்பதே அவளுடைய உறுதியான நம்பிக்கை.

தன் மனதிற்கு எதிராகத் தாய் சொல்லமாட்டாள் என்று எண்ணியது பொய்யாயிற்று. "ஏண்டா நீ என்ன பேயா பிசாசா? இப்படி ஐந்து விரல் பதிந்து வீங்கும்படியா அடிப்பது?" என்று கேட்டதும் ரங்கசாமி திடுக்கிட்டான். அன்றைய நிலைமையை ஒருவாறு சமாளித்தான். தாயாரும் அதிகமாக அதை மனதில் போட்டுக்கொள்ளாமல் மன்னித்துவிட்டவள் போல நடந்துவிட்டாள். ஆனால், அண்ணனை மன்னிக்கும்படி வேண்டி, இளைய மகனை எவ்வளவு தூரம் கெஞ்சி அழுதாள் என்பதை ரங்கசாமி எங்கே கண்டான்?

"போகட்டும் அம்மா. அண்ணு உரிமையுடயவன் அடித்தான், நீ எதற்காக அம்மா அழவேண்டும்?"

"உன் கன்னத்தில் பட்ட விரல்கள் என் மனதில் பட்ட ஈட்டி போல இருக்கிறதேயப்பா."

இளைய பிள்ளையிடம் இவ்வளவு அநுதாபம் பேசிய தாய்க்கு மூத்த பிள்ளையிடம் ஒரு வார்த்தைகூடக் கண்டித்துப் பேச முடியவில்லை. வேலையா தனக்கும் தமையனுக்கும் நடந்த மனத்தாங்கலை மறந்து விட்டாலும், மிருதுலதாவை நேரில் கண்டு அவள் எண்ணத்தில் மண்ணை அள்ளிப் போடத் தீர்மானித்தான். அதன்படி நடந்தது, அவ்விவரம் அண்ணனுக்குத் தெரியாது என்று நினைத்தது தான் தவறு.

ரங்கசாமிக்கு ஆறிப்போயிருந்த கோபம், தம்பியை மிருதுலதா பங்களாவில் கண்ணுக்குக் கண் பார்த்ததும் அதிகமாயிற்று. மிருதுலதா தன்னோடு வரவில்லை யென்றதும் இன்னும் அதிகமாகக் கோபம் முறுக்கேற்றிற்று. மிருதுலதா அது நாள்வரை சொன்ன சொல்லை நிறைவேற்றியவள், அன்று ஏன் மறுத்தாள்? தம்பியின் போதனையா? இவ்வாறு குழம்பியவன் மன வானத்திலே சிறு ஒளியாக அஞ்சலை யென்ற ஆவுடையம்மாள் புகுந்தாள்.

ரங்கசாமிக்குத் தம்பியின் மன ஆழத்தைக் காண ஒரு நப்பாசை பிறந்தது. ஒரு கடிதம் எழுதினான். அதை வேலையா அறைக்குள் வைப்பது, வேலையா அக் கடிதத்தைப் படிக்கும் போது சாவித்துவாரத்தின் வழியே தம்பியின் முகபாவங்களைக் கவனிப்பது என்று முடிவு செய்து அவசர அவசரமாக எழுதினான். தோட்டத்துப் பக்கம் போயிருந்த வேலையா தனதறைக்குள் நுழைய ஆரம்பிக்குமுன் எழுதிய கடிதத்தை, தம்பி அறைக்குள் வைத்துவிட்டு அடுத்த அறையில் புகுந்து சாவித்துவாரத்தில் கண் பொத்தி நின்றான். இப்படித் தன் செய்கையை யாரும் கவனிக்கவில்லை என்று நிச்சயமாக நினைத்தாலும், செய்கையை கவனிக்காவிட்டாலும், அவ்வறைக்குள் அவன் போவதை மட்டும் அஞ்சலை பார்த்திருந்தாள். அவன் செய்கையின் காரணங்களை யெல்லாம் துருவித்துருவி ஊகிக்க முடியாதவள், அப்படி ஊகிக்க வேண்டிய அவசியங்களும் புதிதாக அவ் வீட்டிற்கு வந்தவளுக்குத் தெரிய நியாயமில்லை. ரங்கசாமியை எதேச்சையாகத் தேடி அங்கு வந்தாள்.

தகாத காரியம் செய்ய ஆரம்பிக்கும் மனிதன் தன் வீட்டையே சிறையாக, பயங்கர மண்டபமாக எண்ணிவிடுகிறான். தன் நடவடிக்கைகளை பிறர் அதை அறியாமல் இருக்க வேண்டுமே

யென்று சிந்தனை செய்வதில் மட்டும் ஈடுபட்டு நிற்கும்போது, ஆவுடையம்மை எட்டிப் பார்த்தாள். அந்த அறைக்குள் பெரிய அத்தான் வரவேண்டிய காரணம்? அஞ்சலையின் காலடி யோசை கேட்கவே ரங்கசாமி திருடனைப் போல் கட்டிலுக்கடியில் பதுங்கிக் கொண்டான். மறுகணம் அந்த அறைக்குள் ரங்கசாமியின் நிழல், சுவடு ஒன்றையும் அவள் காணவில்லை; திடுக்கிட்டு ஆச்சரியத் தோடு யோசனை செய்தபடியே எட்டிப்பார்த்தபோது, பெரிய கட்டிலுக்கடியில் ரங்கசாமி ஒளிந்துகொள்ள முடியுமென்று யூகிக்க முடியவில்லை. ஏன் ஒளிந்துகொள்ள வேண்டுமென்றும் யோசிக்க வில்லை. சொந்த வீட்டுக்காரர் அயலாளான தன்னைக் கண்டு பயப்பட வேண்டியதில்லையென நினைத்தாள். ஆனாலும் மாயமாக மறைந்தது அவளுக்கு ஆச்சர்யமே.

அவள், அசல் பட்டிக்காட்டுப் பெண். கிராமத்தின் செடி கொடி போல வாளிப்பாக அழகின் சுடர் தெறிக்க வளர்ந்திருந் தாளே தவிர, நாகரிகத்தின் தேமல் அவள் உடலிலும் மனத்திலும் படரவில்லை. முக்யமாக, சந்தேகம் நெஞ்சில் நிழலாடவில்லை. மேலும் பட்டணத்திற்கு அடியெடுத்து வைத்து இரண்டு நாள் பூர்த்தியாகவில்லை; வந்தவள் அபூர்வ இளமையையும் இன்பத்தை யும் கொண்டு வந்திருக்கிருள்.

ஆவுடையம்மை பட்டிக்காட்டு உடையில் வந்தது ரங்கசாமிக் குக் கட்டோடு பிடிக்கவில்லை. நூற்றுக்கு நூறல்ல இருநூறு பங்கு பட்டிக்காடு. அவள் உடலிலே அழகின் ஜுவாலை தெரிந்தாலும் பேச்சிலே, புன்னகை வீச்சிலே, கண்ணின் நெளிவிலே பகட்டில்லை. அவள் அழகு மிருதுலதாவின் அழகுக்கு முன்னல் கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழியாகப் பட்டது. இந்த நெருக்கடியான சமயத்தில் அவளும், அவளுடைய தகப்பனும் பட்டணத்திற்கு ஏன் வந்தார்கள் என்பதைப்பற்றி அறிய அவன் அக்கறை கொள்ளவில்லை. தான் திருட்டுத்தனமாகத் தம்பியின் அறைக்குள் கண்ணேட்டம் செலுத்தப் போவதைக் கவனிக்கப் போகிருளோ என்று சந்தேகம் கொண்டதும், ரங்கசாமிக்கு ஆத்திரம் வந்தது. சிறிதளவு அவன் மனதிலே கிரு கிருப்புத் தந்த அந்த உருவத்தைக் கண்டு ஆத்திரத்தை மட்டுமல்ல, தன்னையே மறைத்துக்கொண்டு கட்டிலுக்கடியில் பதுங்கிஞன்.

வேலையா தோட்டத்திலிருந்து வாழையிலையும் காய்கறிகளும் நறுக்கிக்கொண்டு பின் வாசல் வழியாக வந்தான். காமாட்சி யம்மாள் "ஏண்டாப்பா வேலு நீதான் இதெல்லாம் செய்ய வேணுமா? வேலக்கார முனியன் எங்கே?" என்றாள். சகல பொறுப்பையும் சிறிய மகன் பார்ப்பதுபற்றித் தாயாருக்கு அநுதாபம்; மனக்கஷ்டம்.

"அம்மா காய்கறி விஷயம் இருக்கிதே, இதுபற்றி முனியனுக்கு எதுவுமே தெரியாது. இன்றைக்கு இளசு என்று விட்டுவிட்டு வந்து விடுகிற வெண்டைக்காய் நாளை முற்றலாகிவிடும். இளங் கீரைத் தண்டு நாளைப் பார்த்தால் மரம் போல இருக்கும். அதனால் நாமே அதைப் பறிக்க வேண்டும் முனியன் பறித்தால், ஒன்று முற்ற லாகப் பறிப்பான். இல்லை பூம்பிஞ்சைக் கிள்ளிவிடுவான்'' என்று சொல்லிக் கொண்டே பள பளக்கும், பசிய நிறப் பூசனிக் கொட்டைகளையும் பால் தெறிக்கும் பச்சிளம் வெண்டைக் காய் களையும் கண் சிமிட்டித் துடிப்பாக நிற்கும் கத்தரிக்காய்களையும் கூடையிலிருந்து தனித்தனியே பொறுக்கி வைத்தவன். இலைகளைக் கூறு கூறாக நறுக்கி வைத்தான். அவன் அருகே வந்து காமாட்சி யம்மாள் ஒரு கவளம் வெண்ணெயை வாயில் போட்டாள். அவனுக்குத் தாயார் கைப்பட வெண்ணெய் ஒரு நாள் விழுங்கா விட்டாலும் பொழுது விடிந்ததாகப் படாது. வெண்ணெய் விழுங் கியவன் "ரொம்ப மணமாக இருக்கிறதே இன்று'' என்றான்.

"இருக்கிறதா? ஆவுடையம்மைக்குப் பால் மோர் காய்ச்சிக் கடையத் தெரியும். இது அவள் பக்குவமடா, வேலு; இன்னும் ஒரு உருண்டை வேண்டுமா?'' என்றாள்.

"ஓகோ உன் மருமகள் கெட்டிக்காரிதான். மாமா எங்கே? உன் மருமகள் எங்கே?''

"மாமா பிள்ளையார் கோவிலுக்குப் போயிருக்கிறார்கள் முன் கட்டில் நிற்கிறாள் ஆவுடை.''

"அப்படியா? இன்றைக்கு வெண்டைக்காய் சாம்பார் போடம்மா. புடலங்காய் பிட்லே செய்.''

"செய்கிறேன். என்னை எங்கே காரியம் செய்ய விடுகிறாள். ஆவுடை தானே அத்தனை காரியங்களையும் செய்து விடுகிறாள். அவள்தான் சமையல் வேலை முழுக்க.''

"நல்ல வேளை சாப்பாட்டையும் அவளே முழுக்க முழுக்கச் சாப்பிடாமல் கவனித்துக்கொள்" என்று சொல்லிக்கொண்டே சீர்திருத்திய இலைகளைச் சுருட்டிக் கட்டினான்.

"டவுன் பக்கம் ஆவுடையம்மையை அழைத்துப் போகிறாயா? கோட்டை, ஹைகோர்ட்டு, பீச்சு, அவள் பார்க்க வேண்டாமா?"

"பார்க்க வேணும்."

"நீ கூட்டிப் போகிறாயா வேலையா."

தாயாரின் கேள்விக்குப் பதில் சொல்ல நினைத்தான். இருந்தாலும் காதில் வாங்கிக் கொள்ளாதவன் போல வெளிப் பக்கம் வந்தபோது, மிரள மிரள ஆவுடையம்மை கூர்ந்து கூர்ந்து அறைக்குள் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"என்ன அப்படிப் பார்க்கிறாய் அஞ்சலையம்மா. நீ பார்ப்பது பேயா பூதமா?"

வேலையா கேலியாகக் கேட்டான். தம்பியின் கேலிப் பேச்செனை எண்ணாமல் குத்தல் வார்த்தையாக எண்ணிக்கொண்டான், கட்டிலடியில் பதுங்கிய ரங்கசாமி. குற்றமுள்ள நெஞ்சுக்குப் பரிகாச வார்த்தை என்று தெரியவா செய்யும்? மூச்சைப் பெரு மூச்சாக விடாமல் அடக்கிக்கொண்டான்.

"இங்கே பெரிய அத்தான் வந்தமாதிரி இருந்தது. திடீரென்று மறைஞ்சிட்டாங்க."

"தில்லை வெளியிலே மறைந்த நந்தன் மாதிரியா?"

"விளையாட்டு இல்லே, சின்ன அத்தான்! நிஜமாக இங்கே வந்தாங்க கண்ணாலே பார்த்தேன். இப்போ? காண வில்லையே."

"உனக்கு எப்போதும் அவர்கள் மேலே நினைப்பு. 'பார்க்கு மிடமெங்கும் நந்தலாலா நின்றன் பச்சை நிறம் தோன்றுதடா என்ற மாதிரி...' என்று சிரிக்கப் பாடிக்காட்டினான்.

"ரொம்பப் பச்சையாக பேசுகிறீர்கள்; எனக்கு அந்தப் பாட்டுத் தெரியாதே."

"உண்மையைத்தான் சொன்னேன், அஞ்சலையம்மா. ஆனால், பாட்டின் பொருளை விளக்க இது சமயமில்லை. அண்ணன் வந்ததும் நீ அவர்களுடன் கோட்டை, துறைமுகம், பீச்சு எங்கும் சுற்றிப் பார்த்து வா."

"மோட்டாரில் என்னைக் கூட்டிக்கொண்டு போக மாட்டார்கள். நீங்கள் கூட்டிக்கொண்டு போனால்தான் உண்டு. நான் பட்டிக்காடு. என் டிரஸ் பிடிக்காது அவர்களுக்கு."

"எனக்கு வேறு காரியம் இருக்கிறது. இந்தமாதிரி ரவிக்கையும் புடவையும் அணிந்த நாட்டுப்புறத்தை பட்டண நாகரிகம் தெரிந்தவர்கள் அழைத்துப் போக வெட்கப்படுவார்கள். சரி எனக்கு மிருதுலதாவைப் பார்க்கப் போக வேண்டும். சௌகரியப் பட்டால் நாளை நீயும் மாமாவும் நானும் போகலாம்."

"அப்பாவுக்கு இந்த ஊரில் எதைப் பார்த்தாலும் ஆச்சர்யமாக இருக்கிறது. கம்பி மோட்டார் இருக்கிறதே சின்னத்தான்."

"அது மோட்டார் இல்லே. டிராம் வண்டி."

"அப்படியா? எப்படிக் கம்பியிலே ஓடுகிறதோ."

பேச்சைத் திருப்ப, "தையற்காரனை வரச்சொல்லி இருந்தேனே வந்தானோ? மாமா, ரெடிமேடு சட்டை போட்டிருப்பதைப் பார்க்கும்போது அண்ணாச்சிக்கு வாந்தி வந்திருக்கும். அதையேன் போட்டுக்கொண்டாங்க மாமா?"

"பட்டிணத்தில் சட்டை போடாவிட்டால் பட்டிக்காட்டான் என்பாங்களாம். அதனால் இரண்டு ரெடிமேட் சட்டை வாங்கினார்கள், அப்பா."

"அசல் பட்டிக்காடு என்பதை அந்த ரெடிமேடு சட்டை நிரூபித்துவிட்டது."

"நாங்கள் பட்டிக்காடுகள் தானே!" என்றாள் அஞ்சலை.

"எங்கே மாமா?"

"இங்கே தெருக்கோடியில் பிள்ளையார் கோவில் ஒன்று இருக்கிறதாம். போய்ச் சாமி கும்பிட்டு வருவதாக சொன்னார்கள்."

"உங்கள் ஊர்ப்பிள்ளையார் உங்களுக்கு முன்னதாகவே இங்கே டிக்கெட் எடுத்து வந்துவிட்டாரா? நாங்களும் மூன்று வருஷமாக இத் தெருவில் இருக்கிறோம். பிள்ளையார் கோவில் இருக்குமிடத்தைப் பார்ப்பதில்லையே."

"கோவிலைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை இருந்தால் அல்லவா, அது இருக்குமிடம் தெரியும் அத்தான்."

"அடடே நீ உங்கள் அப்பாவைப்போல் பிரசங்கம் கூடச் செய்வாயா? உன்னைக் கண்டால் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நீ சொல்வது உண்மைதான்."

"இந்த உண்மை எனக்குத் தெரிந்ததில்லை. 'மலரும் மாலையும்' படித்திருந்தால் தெரியும்."

"அது என்ன?"

"இதுகூடத் தெரியாதா? கவிமணி தேசிகவிநாயகம் அவர்கள் எழுதிய புத்தகம். அதிலே இந்தக் கருத்து வருகிறது."

"எந்தக் கருத்து?"

"கடவுள் இருக்கிற இடம் கோவில் மட்டுமல்ல. கோபுரம் மட்டுமல்ல."

"பேஷ். கடவுள் கோவிலிலும் கோபுரத்திலும் இல்லாவிட்டால் உன்னைப் போன்ற அப்பாவிகள் நெஞ்சில்தான் இருக்க வேண்டும்."

அஞ்சலை சவுக்க காலத்தில் பாடிக் காட்டினாள். இந்தப் பாட்டின் இசையை விடப் பொருள் வேலய்யாவுக்கு இனிதாக இருந்தது. அஞ்சலை சொல்லிய

உள்ளத்தில் உள்ளானடி—அது நீ
உணர வேண்டுமடி
உள்ளத்தில் காண்பாய் எனில்—கோவில்
உள்ளேயும் காண்பாயடி

என்ற கவிதையை அவள் பாடி அநுபவிக்க முயன்றபோது குரல் விரிசல் கொடுத்தது.

"பக்தி யிருக்கிறவர்களுக்குத்தான் கடவுள் இருக்கிற இடம் தெரியும்." என்று சொன்னாள். தன் தகப்பனார் சொல்லியதைக் கேட்டுக் கேட்டு வந்த வாய்ச் சொல் அது.

"எனக்குப் பக்தியே கிடையாது என்று சொல்லுகிறாய்?"

வேலய்யாவின் குரலைச் செவிமடுத்தபடியே வந்த பொன்னனைந்த பெருமாள், "யாருக்குப் பக்தியில்லை, சின்ன மாப்பிள்ளையா சொன்னது?" என்று கேட்டபடியே உள்ளே வந்தார். அவரது நெற்றியிலே அகலக் குங்குமப் பொட்டும், அதைவிடப் பெரிதான சந்தனப் பொட்டும் பட்டை பட்டையான விபூதிக்கீற்றுகளையும் துலாம்பரமாகத் தெரிந்தன. இளங்காற்றில் கூட, எழுத்தாணிக்

குடுமி பறந்தது. தொள தொளவென்ற ரெடிமேடு சட்டையும் கர்விப் பழுப்பேறிய வேஷ்டியும் சின்னச் சிட்டி முண்டும் போட்டுக் கொண்டு உருத்திராட்சம் சட்டைக்கு வெளியே எட்டிப் பார்க்கும் சிவப்பு பழமாக, நெற்றியில் நீறு தரித்த கோலத்தோடு உள்ளே வந்தார்.

"மாமா, மாமா, உங்கள் மகள் எனக்குப் பெரிய தத்துவத்தை உபதேசம் செய்துவிட்டாள்."

"என்ன காதலா?" என்றார் சிரித்தபடி.

"அதை விடப் பெரியது மாமா. கடவுள் தத்துவம். கடவுள் உள்ளத்துள்ளே இருப்பது. வெளியே காண்பது மட்டுமன்று."

"அதுதான் பரம்பொருள் விளக்கம். மேலும் கடவுள் தத்துவம் இருக்கிறதே. அதை விவரித்தால்..."

"இன்றைக்கு எனக்கு நேரமில்லை. இன்னொரு நாள் சொல் லுங்கள்" என்று தனதறைக்குள் நுழைந்தான்.

ரங்கசாமிக்குக் கட்டிலடியில் பதுங்கி இருப்பது ரொம்ப அவஸ்தையாக இருந்தது. அவஸ்தையை விட மூவரில் யார் பார்த் தாலும் அவமானம். சனியன்கள் அங்கிருந்து தொலையக்கூடாதா வென மனம் புழுங்கினான்.

கோவில் மணியடித்துக்கொண்டே ஊடே ஊடே உரத்துப் பேசி மணியின் நாதத்தைவிட கணீர் என்ற குரல் பெற்ற தன் னுடைய அண்ணாச்சியின் பக்தி நிறைந்த கோலத்தைக் கண்டு ஆனந்தங்கொண்டாள் காமாட்சி. "வாங்க அண்ணாச்சி. இந்தாம்மா ஆவுடை, அப்பாவுக்கு காப்பி பலகாரம் எடுத்து வை. உள்ளே வாங்க" என்று அழைத்துப் போனாள். தங்கையின் பின்னே பக்தி நிறைந்த தமையன் போய்விடவே அவ்விடமிருந்து அஞ்சலையும் நகர்ந்தாள்.

தங்கையின் பிரம்மாண்டமான வீட்டிற்குள் பளிங்குக் கற்களில் கால் அதிகம் படாமல் பொன்னணைந்த பெருமாள் நடந்தார். மதவக் குறிச்சி பிள்ளையார் கோவில், வடபத்திரகாளி கோவில், கிழக்கேயுள்ள வீர செளந்தரியின் கோவில்களே இவ ருடைய பாத துளிகள் பட்டபோது அதிரும்படி டக் டிக்கென கவாத்துப் பழகும் புது சோல்ஜர் போல நடப்பவர்; தஞ்சையில் பரதநாட்டியம் பயின்றவர் போல, கால்களை ஜதி போட்டு எடுத்து

வைத்தார். பொன்னனைந்த பெருமாள், தங்கையின் பொரு ளாதார அதிர்ஷ்டத்தை நினைத்து அடிக்கடி உள்ளூர மகிழ்ச்சி யடைவார். மாங்கல்ய பலத்தில் அதிர்ஷ்டக் கட்டையடைந்ததை நினைத்து அதிகம் வருந்தாமல், "அந்த வீட்டிலே தம்முடைய அரு மந்தன்ன மகள் ஆவுடையம்மாளை வீட்டு விளக்காக ஆக்கி விட்டால்?"

பெற்றவர் மனதில் இவ்வாறு சிந்தனைக் கிளை வெடிக்கும்.

அந்த நினைப்போடு அவர் காப்பி சாப்பிடப் போக, வேலைய்யா தனது அறைக்குள் நுழைந்தான். மேஜைமீது தனிப்பட இருந்த கடிதம் அவன் பார்வையில் விழுந்தது. கட்டிலுக்கடியில் கிடந்த புழுதியையும் குப்பையையும் தூய்மையான சட்டையிலே ஒட்டிக் கொண்டு, திருடனைப்போல அக்கம்பக்கம் பார்த்தபடியே எழுந்த வன் தான் எழுதி வைத்த கடிதத்தைப் படிப்பதை சாவித் துவா ரத்தின் வழியே ஆவலோடு பார்க்க ஆரம்பித்தான்.

ஆனால், எதிர் பார்த்த சம்பவம் நடைபெறவில்லை. அதற்கு எதிரிடையான காரியம் நிகழ்ந்தது.

## 4. மிருதுவின் கடிதம்

வேலைய்யாவுக்குக் கடவுள் தத்துவத்தில் அதிக மோகம் உண்டென்று வாசகர்கள் எண்ணிவிடக் கூடாது. அஞ்சலை சொல்லியதும் அவன் மூளை வேலை செய்தது. "பெரிய அத்தான் வந்தாக. திடீரென்று மறைந்திட்டாக" என்ற சொற்களைக் கேட்டதும் யூகித்துவிட்டான் வேலைய்யா. தனக்கோ பிறருக்கோ அஞ்சித் தமையன் பதுங்கி இருக்கவேண்டும். அவன் மூளையை விட, மூக்கு அதிகமாக உபத்திரவமடைந்தது. தமையனுக்கு மிகவும் பிடித்தமான ரோஸ் செண்டு மணக்கவே அடுத்த அறை கட்டிலுக்கடியில் ஆசாமி பதுங்கியிருப்பதை உணர்ந்தான். பதுங்கி யதை விளம்பரம் செய்வது போன்று ரோஸ் மணம் வீசிற்று. தன் தமையனை அவமானம் செய்ய, அஞ்சலை குறுக்கே இருந்ததால் கடவுள் தத்துவத்தை எடுத்து அலச ஆரம்பித்தான். அது வளரும் பருவத்தில் தன் மாமன், பின்னர் தாய் எல்லோரும் வந்து நழுவி விட்டார்கள். ஆனால் ரோஸ் செண்டு மணம் உறுத்திக்கொண்டே இருக்கிறது.

தன் கண்ணிலே கவர் ஒன்று பட்டதும் மேஜை அருகே சென்ருன். அது யார் கையெழுத்தென்றும் அறிந்தான்; உடனே "அண்ணுச்சி அவர்களே! தங்கள் கடிதம் பெற்றேன். தாங்கள் இதற்குள் என்ன எழுதியிருந்தாலும் சரி. தாங்கள் கொண்டு வந்து வைத்ததை யாரும் பார்க்கவில்லை. ஆனால், தாங்கள் அடுத்த அறையில் பதுங்கியுள்ள விபரத்தை ரோஸ் சென்டு அறிவிக்கிறதே" என்று வாய்விட்டுச் சொன்னான். ரங்கசாமிக்கு மேலும் மேலும் தோல்வி! சாவித் துவாரம் வழியே தம்பியின் முக பாவத்தை ஆராய்ச்சி செய்ய நினைத்தது வீணுகப் போயிற்று. குதிரை கீழே தள்ளியதோடு குழி பறிப்பதையும் சகிக்க முடியவில்லை. பரிகாசம் அல்லவா செய்கிருன் வேலய்யா.

ரங்கசாமியின் உடல் குன்றிவிட்டது. தன் அசட்டுத் தனத்தையும் தம்பியின் புத்திசாலித்தனத்தையும் உணர்ந்து, அடுத்த அறையில் நின்று தான் நோட்டம் பார்க்கவில்லை யென்பதை நிரூபிக்க மின்வெட்டு நேரத்தில் பின் பக்கத்துச் சாமான் அறை வழியே தோட்டப் பக்கம் ஓடி, அங்கிருந்து சுற்றி வந்து தனது அறைக்குள் தோட்டப் பக்கத்துக் கதவு வழியே உட்புக நினைத்தான்.

ஒரே ஓட்டம், தலை தெறிக்கும் ஓட்டம், ஓடினன் ரங்கசாமி. வேலய்யாவுக்கு அக்கடிதத்தைப் பிரிப்பதா வேண்டாமா என்று யோசனை. என்ன எழுதியிருக்கிறது என்றறியவும் ஆவல். தன்னிடம் இரண்டு மூன்று நாட்களாகப் பேசுவதில்லை என்ற மனக் கசப்பினால் ஏதாவது கன்னபின்னவெனத் தமையன் எழுதியிருக்கலாம். கடிதம் படித்துத் தானும் மனம் நொந்து கொள்வானேன்? இந்த நினைப்பில் அதை அப்படியே தன் கோட்டுப் பைக்குள் போட்டுவிட்டு, அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருக்கலாம் என்ற சிந்தனையில் ஆழ்ந்தான்.

ரங்கசாமி தோட்டத்துக்குள் தாவும்போது வெந்நீர் அறையிலிருந்து ஓடும் தண்ணீர் பெருகி, கருமியிடம் தடைப்பட்ட பணம் போல், பாசிபிடித்த செமண்டுத் தரையில் வழுக்கு ஏற்பட்டிருந்த இடத்தில் மிதித்துத் தொப்பென விழுந்தான். வீட்டுக்குள் தகப்பனுக்கு இட்லியும் சட்னியும் வைத்துவிட்டு நெய் ஜாடியை எடுக்கப் போன ஆவுடையம்மாள், பொத்தென விழுகிற சப்தம் கேட்கவே குனிந்து ஜன்னல் வழியே பார்த்தாள். பெரிய அத்தான் அந்தர்

அடித்து எழ முடியாமல் எழுந்துகொண்டிருக்கிறார். அந்தப் பரி தாபக் காட்சியில் மனம் ஊன்றியவளாய் நெய் ஜாடியை விட்டுவிட, அது சுக்கு நூறாகத் தெறித்தது. இவள் ஓடிய அவசரத்தில் காலில் பிங்கான் கீறி ரத்தம் வடிந்தது, எல்லாம் இமைக்கும் நேரத் திற்குள் நடந்த காரியங்கள். பெரிய மகன் செமண்டுத் தளத்தில் விழுந்ததைச் செவியுற்ற காமாட்சியம்மாள், "இந்தாம்மா ஆவுடை நீயும் ஓடி விழுந்துவிடாதே. மெதுவாய்ப் போ" எனச் சொல்லு முன், ஆவுடையம்மை ஓடி, ஒரு கை கொடுத்து பெரிய அத்தான் எழுந்து நிற்க உதவி செய்தாள். எதிர் பாராத இந்த அவமானத் திற்கும் விபத்துக்கும், ஆதி காரணமே ரங்கசாமிக்குப் பிடிபட வில்லை.

சாப்பிட்டுக்கொண்டிருந்த தமையனை பந்தியில் விட்டுவிட்டு, மகனைப் பார்க்கத் தாயார் வந்தாள். "ஏண்டாப்பா, ரங்கா, இப்படி ஓடி வந்து விழுந்தே? இந்த இடம் வழுக்குமென்பது உனக்குத் தெரியாதா? பார்த்து வரக்கூடாதா?" என்று கைத் தாங்கலில் அழைத்து வந்தாள். காலைத் தாங்கித் தாங்கி நடந்து வந்தான் ரங்கசாமி.

அழுக்குச் சட்டையும் வியர்வைத் துளிகளும் தோள் பட்டை யில் பலத்த காயமும் சேர்ந்து ரங்கசாமிக்குப் பெரிய வேதனை தந்தன. தோளை ஒரு பக்கமாகச் சாய்த்தபடியே மெதுவாகத் தன் அறைக்குப் போக முயற்சி செய்தான். வீட்டுக்குள் படி யேறும்போது எலும்பு மூட்டுக்கள் சொல்லமுடியாத வேதனை தந்தன.

இட்லியுடன் மல்யுத்தம் செய்துகொண்டிருந்த பொன் அணிந்த பெருமாள் எதிரே பரிதாபமாக நடந்து வந்தவனைப் பார்த்து, "என்ன பெரிய மாப்பிள்ளை, புதையல் எடுத்தீர்களோ? பார்த்து நடமாடக்கூடாது?" என்று புன்முறுவல் செய்தார்.

"சரித்தான் வே குதிரை மசாலிக்காய்!" என்று மாமனாரு டைய ருத்திராட்சத்தைப் பார்த்து மனசிற்குள் வைது கொண் டான். மகன் நடந்துவரும் தினிசிலிருந்து பலமான ஊமைக் காயம் பட்டிருக்கலாமென்றுணர்ந்த தாய்," இந்தாம்மா ஆவுடை, நீ கொஞ்சம் வெந்நீர் போடு..வெந்நீர் ஒத்தடம் கொடுக்கலாம். டேய் ரங்கம், நீ போய்ச் சட்டை கிட்டை மாத்தி வேறே போட்

டுக்கோ. நான் கொஞ்சம் சுடுதண்ணீர் ஒத்தடம் போடறேன்...'' என்றவள் பார்வை ஆவுடையின் பெருவிரலில் விழுந்தது.

''ஏனம்மா ஆவுடை, காலில் என்ன? களகளவென்று ரத்தம் கொட்டுகிறது. ஒரு ஈரத்துணி கட்டு'' என்று மகனுக்கு வெந்நீர் கொடுத்தாள். மருமகளுக்குக் காயம் கட்டிக்கொள்ள உத்தரவு இட்டாள்.

''ஒன்றும் இல்லே, அத்தை. இவர்கள் விழுந்ததும் கையிலே இருந்த பீங்கான் ஜாடியை நழுவ விட்டுட்டேன். என்னை அறியாமலே உடம்பு நடுங்கிப்போச்சு. பீங்கான் சிதறினதிலே லேசா ஒரு பீங்கான் துண்டு அறுத்திருக்கும்,'' என்று அத்தைக்குப் பதில் சொல்லிக்கொண்டே தொழுவத்தை நோக்கிப் போனாள்.

''ஏனம்மா அங்கே போறே? பழந்துணியைத் தண்ணீரிலே நனைச்சு உன் விரலில் சுத்து. அப்புறம் வெந்நீர் போடலாம்.''

''இல்லே அத்தை. சாணி ஒத்தடம் ஊமைக் காயத்துக்கு நல்லது. நீங்க ஒரு துணி எடுங்க. சாணி கொண்டுவந்து உருட்டி அடுப்பிலே சுடப்போடுகிறேன் நீங்க அடுக்களைப் பக்கம் போயிடவேண்டாம். சாணி கொண்டுவந்து சிதறிக் கிடக்கும் பீங்கான் தூள்களை ஒற்றி எடுக்கவேணும்; பிறகுதான் அங்கே கால் வைக்க முடியும்.''

பரபரப்பாகத் தொழுவம் சென்று சாணி கொண்டுவந்து பீங்கான் தூள்களை ஒற்றி எடுத்துப் பொறுக்கிச் சுத்தம் செய்து சாணி உருண்டைகளை அடிப்பிலே சுடப்போட்டாள். ஆவுடையம்மாளின் பெருவிரலில் பட்டிருந்த காயத்திற்கு அவளுடைய அத்தை ஈரத்துணி சுற்றிக் கட்டுப்போட ஆரம்பித்தாள். திருடனைத் தேள் கொட்டிய கதையாக உடுப்பையும் கால் சட்டையையும் களைந்துவிட்டு, வேற்றுடை தரித்து, விழுந்த அடியின் உபாதை பொறுக்க இயலாமல் பல்லைக் கடித்துக்கொண்டு மெத்தையில் விழுந்து புரள ஆரம்பித்தான் ரங்கசாமி.

மகனுடைய முனகல் சப்தம் கேட்டுத் தாயார் சாணி ஒத்தடம் போடச் சுடசுட உருண்டைகளை ஒரு துணியில் எடுத்துக்கொண்டு போய் சிஷ்ருஷை செய்ய ஆரம்பித்தாள்.

''அடி பலமாக இருந்தால் டாக்டரைக் கூட்டி வரச் சொல்லுகிறேன். வேலையா இங்கேதான் இருந்தான்'' என்றவள், ''வேலு வேலு'' என்றாள்.

"வேண்டாம்மா. சும்மா லேசான காயமே. டாக்டர் வேண்டாம்."

சாணி ஒத்தடம் அடிபட்ட இடத்திற்கு இதமாக இருந்தது. வியர்வை ஆறாக ஓடுவதைக் கண்ட ஆவுடை ஓடோடிக் கரியடுப்பின் அருகேகிடந்த பழைய விசிறியை எடுத்துவந்து வீச ஆரம்பிக்கவே, "இல்லேம்மா அதோ அந்த விசிறியைப் போடு. கை வலிக்க நீ வீசுவானேன்?" என்று மின்சார விசிறியின் ஸ்விட்சை போடச் சொன்னாள். பரபரவெனக் காற்று அந்த அறைக்குள் அடிக்க ஆரம்பித்ததைக் கண்டு அவளுக்கு ஆச்சர்யமாகப் போயிற்று.

"ஏண்டாப்பா அங்கே தோட்டத்திற்கு வெந்நீர் அறைக்கு வெளியே வழுக்குமென்று தெரிந்தும் போவானேன்? அதுவும் இந் நேரத்தில் அங்கே என்னடாப்பா வேலை?"

பெரிய மருமகன் கட்டிலுக்கருகே பெரிய பிரம்பு நாற்காலியை இழுத்துப்போட்டு எழுத்தாணிக் குடுமியைக் காற்றில் பறக்க விட்டபடியே வந்தமர்ந்தார், பொன் அணைந்த பெருமாள்.

"காமாட்சி. இதுதான் பிராப்தம், விதி என்பது. காலையிலே இதைப்பற்றி—இப்படி நடக்குமென்று யாராவது நினைத்தோமா?"

மாமன் பேசியது எரிச்சலாக இருந்தது ரங்கசாமிக்கு. ஆனால் பேச்சை மாற்றிச் சொன்னான்.

"தயவுசெய்து வெள்ளைக்கோடு போட்ட பச்சைச் சட்டையோடு என் கண் முன்னே வராதீர்கள் மாமா. சகிக்கவில்லையே. உங்களையும் உங்கள் ரெடிமேடு சட்டையும் பார்க்கச் சகிக்க வில்லை."

"ஆமாண்டாப்பா...நான் என்ன இருந்தாலும் பட்டிக்காடு. அதிலேயும் கோவில் பூசாரிப் பயல்தானே. உன்மாதிரி தாம் தூம் என்று டிரஸ் செய்யத் தெரியாது. கிழவன்தானே, நான் எப்படியும் இருக்கலாம்" என்று சிரித்துச் சமாளித்தார்.

அடிக்கடி ஆறிப்போன சாணி உருண்டைகளை அடுக்களைக்கு எடுத்துப்போய் அடுப்பில் சூடுபடுத்தி, சூடான உருண்டைகளை அத்தை கையில் கொடுப்பதும் வருவதுமாக இருந்த ஆவுடையம்மாள் மீது ரங்கசாமியின் கவனம் திரும்பிற்று. அவள் ஏன் அத்தனை அவசரம், பதற்றம், ஆவலுடன் ஓடியாடித் துடியாக நிற்கிறாள்? தான் விழுந்ததும் ஓடிவந்து ஒரு கை தூக்கிவிட்டாளே,

அந்த அவசரம், அந்த ஆவல் எதற்காக? தனக்கு வலி குறைய வேண்டுமென அவள் கவலை கொள்ளுவானேன்? இந்த விஷயங்கள் அவனுக்கு வேடிக்கையாக இருந்தன. தாய் குறுக்கிட்டுச் சொன்னாள்.

"கிராமத்துப் பெண்ணாக இருக்கக் கொண்டு சாணி ஒத்தடம் போடறதுக்குத் தெரியுது. பட்டணத்துப் படிச்ச பெண்ணு இருந்தா இதுக்குள்ளே டாக்டரை கூட்டி வர ஆள் தேடுவாள்."

மகளுடைய புத்திசாலித்தனத்தைப் பொன் அணைந்த பெருமாள் பிள்ளை புகழ்ந்து கொண்டார். வீட்டில் ஆரவாரமும் சப்தமும் எழவே, தமையன் எழுதிய கடிதத்தைக் கிழித்துப் படிக்கலாமா என்னும் சிந்தனைக்குள் மூழ்கியிருந்த வேலைய்யா, தன் அண்ணன் அறையை நோக்கி எழுந்து வந்தான். அங்கே ஒத்தடங்கள், வைத்தியாதிகள் நடந்துகொண்டிருந்தன. மாமா எழுத்தாணிக் குடுமி விடுதலை பெறக் காற்றில் பறந்தது.

"ஆமாம். இதெல்லாம் என்ன?"

"உனக்குத் தெரியாதா, வேலு? உங்கண்ணைச்சி பெரிய புதையல் எடுத்திருக்காரு. நீ பங்குக்குப் பாகத்திற்கு வந்திடாதே" என்று கேலி செய்தார் தாய்மாமன்.

"விழுந்திட்டீங்களா? எங்கே?" என்று ஆவலோடு தமையன் அருகே வந்தான் வேலைய்யா.

"வெந்நீர் அறைப் பக்கம் தான் போயிருக்கிறான். அந்த செமண்டிலே வழுக்கு" என்றாள் தாய்.

ஊகித்துக்கொண்டான் வேலைய்யா. தான் பின் தொடர்ந்து வராதிருக்கத் தமையன் ஓடியிருக்கிறான். விழுந்துவிட்டான். விஷயத்தை ஊகித்துக்கொண்டு, "என்ன அண்ணைச்சி டாக்டரைக் கூட்டி வரட்டுமா? வலி எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

ரங்கசாமிக்கு உடம்பில் மட்டுமன்றி இதயத்திலும் வலி ஏற்பட ஆரம்பித்தது. தான் எழுதிய கடிதத்தைப் படித்துவிட்டு, ஒன்றும் அறியாத அப்பாவி போன்று நடப்பதாக நினைத்து ஆங்காரம் கொண்ட உள்ளத்தோடு, "இல்லை நான் உயிரோடு இருக்கவே விரும்புகிறேன். டாக்டர் வரவேண்டாம். உன் காரியத்தைப் பார்க்கப்போ. என் விஷயத்தில் நீ தலையிடவேண்டாம்" என்றான்.

பொன்னணைந்த பெருமாள் வேலய்யாவின் இளகிய மனத்தையும் ரங்கசாமியின் இறுகிய உள்ளத்தையும் மனத்திராசில் எடைபோட ஆரம்பித்தார். தாய், பெரிய மகன் பேச்சையும், சின்ன மகன் பரிவையும் கண்டு சமாளிக்கும் உளத்தோடு, "சரி வேலு டாக்டர் வேண்டாமாம்" என்று நடுநிலைமை வகித்தாள்.

"சரியம்மா இன்று நாலைந்து ஏரோப்பிளேன் கேட்டார்கள். லாரிகளும் விற்று முதலாக்க வேண்டும். நீயே டாக்டரை அழைத்து வந்து வைத்தியம் ஏற்பாடு செய்" என்று போய்விட்டான்.

வேலய்யா, தகப்பனாருடைய கண்டிராக்டர் வேலையை, அதாவது அதிலுள்ள மித்தலாட்டத்தைச் சரிவரப் புரிந்துகொண்டு பழைய ஏரோப்பிளேன், மோட்டார், லொட்டு லொசுக்கு இவைகளை மலிவான விலைக்கு அரசாங்கத்திடமிருந்து வாங்கி அவைகளை விற்பதிலே பணக் கோட்டை கட்ட ஆரம்பித்தான். தனது வியாபார ஸ்தலத்திற்கு மோட்டார் சைகிளில் பட படவென அவன் புறப்பட ஆரம்பிக்கும்போது குண்டப்பா சைகிளில் வந்தான். குண்டப்பா வாசலில் எதிர்பட்டவன் கடிதம் கொடுத்தான்.

குண்டப்பா கொடுத்த கடிதத்தை வீட்டுக்கு வெளியே வாங்கிக்கொண்டாலும் படிக்க இஷ்டப்படவில்லை. "இல்லீங்க அம்மா கையோட பதில் வாங்கி வரச்சொன்னாங்க" என்று குண்டப்பா சொல்லவே, மோட்டார் சைகிளை வெளியே நிறுத்தித் தன் அறைக்குள் வந்து கடிதத்தை படிக்க ஆரம்பித்தான்."

ஸ்ரீமான் வேலய்யா அவர்களுக்கு,

மிருதுலதா எழுதும் கடிதம். தாங்கள் நேரில் கேட்டுக் கொண்டபடி என்னுடைய திருமணத்தின் முடிவை ஊர்ஜிதம் செய்துவிட்டேன். முடிவை நினைத்தால் தாங்கள் ஆச்சர்யப் படுவீர்கள். தயவுசெய்து ஐந்து மணிக்கு முன்னதாக என்னைப் பங்களாவில் சந்தித்தாலும் சரி, இல்லை சாந்தோம் கடற்கரையில் ஆறு மணிக்குச் சந்தித்தாலும் சரி; மற்றவை நேரில்.

மிருதுலதா.

•

தங்கள் அன்புள்ள என்ற எழுத்தை அடித்து இப்படிக்கு

வெறும் கையெழுத்து மட்டும் இருந்தது. கடிதத்தில் எவ்வித மான மோசக் கருத்தும் இல்லையென வேலய்யா நினைத் தாலும் தன்னை நேரில் சந்திக்க அழைப்பானேன்? இந்தக் கேள்விக்கு விடை யோசிப்பதைவிட குண்டப்பாவை அங்கிருந்து அப்புறப்படுத்த ஒரே வரி எழுதினான்;

ஸ்ரீமதி மிருதுலதா தேவி அவர்களுக்கு,

உபய க்ஷேமம். தங்கள் கடிதத்திற்கு நன்றி. தங்களைச் சந்திக்கிறேன்.

இங்ஙனம்,
ஏ. வேலய்யா.

கடிதத்தை எழுதி மடித்து குண்டப்பா கையில் கொடுத்து, "போய் வரலாம்" என்று சொல்லிக் கடிதத்தைக் கோட்டுப் பைக்குள் போட்டுவிட்டு வெளியே நின்ற மோட்டார் சைகிளில் ஏறவும் அது தட தடவெனக் கோடையிடி யிடித்துக்கொண்டு கிளம்பிற்று.

ரங்கசாமி ஜன்னல் வழியாக எல்லாச் சம்பவங்களையும் கவனித்துக்கொண்டிருந்த போது குண்டப்பா சைகிளில் வந்து போவதும் அதன் பின்னர் தம்பி மோட்டார் சைகிளில் போவதும் தெரிய வந்தன. ஏன் வரவேண்டும், குண்டப்பா? வந்தவன் தன்னைப் பார்க்காமல் போவானேன்? தம்பியின் போதனையால் அவன் போய்விட்டானா? எவ்வளவு ஓசி சிகெரட், டிபன் சாப்பிட்டவன் குண்டப்பா? நன்றிகெட்ட பயல்! இல்லை தம்பியின் உபதேசத்திலால் நடக்கிற சூழ்ச்சியோ? தோள்பட்டை காயத்தை யும் தாயாரின் சிகிச்சையையும் மறந்துவிட்டுப் பித்தன் போல வெறித்துப் பார்த்தான்.

மோட்டார் சைக்கிள் கேட் தாண்டித் தெருவில் போய்க் கொண்டிருந்தது. அதாவது குண்டப்பா போன திசைக்கு எதிர்ப் பக்கமாகப் போனதால் ஒரு ஆறுதல், மிருதுலதா வீட்டிற்குப் போகவில்லை. வேறு எங்கோ போகிறான் என்ற திருப்தி அடைந்து கட்டிலில் சாய்ந்தான்.

"அம்மா, கைவலி அநேகமாகக் குணமாகிவிட்டது. நீங்கள் என்னைத் தனியே விட்டுவிடுங்கள். சற்றுக் கண்ணயர வேண்டும் நான்."

"தூங்கப்பா. இங்கேயே மத்தியானச் சாப்பாடு கொண்டு வந்துவிடுகிறேன். நீ உடம்பை அலட்டிக்கொள்ள வேண்டாம். வாங்க அண்ணுச்சி. நீங்க இருந்தாக்கூட இவனுக்குத் தூக்கம் வராது." என்றதும் பெரியவர் தங்கையுடன் வீட்டுக்குள் நடந்தார்.

தாயார் போனதும் தனிமையில் ஆருத மனத்தை ஆற்றிக் கொள்ள ஆரம்பித்தான் ரங்கசாமி.

## 5. தாழம்பூ அஞ்சலை யாருக்கோ?

பிரம்மாண்டமான அந்த பங்களாவில் மிகக் கவர்ச்சியான இடங்களில் ஒன்று பட்டகசாலையில் உள்ள ஊஞ்சல். அந்த ஊஞ்சலில் உட்கார்ந்து ஆட ஆரம்பித்தால் வேறு எந்த வேலையிலும் மனம் செல்லாது. பொன்னணைந்த பெருமாள் ஊஞ்சலை ஆட்டிக்கொண்டே எதிரே உட்கார்ந்து தமது மகளுக்குச் சமையல் காரியங்களை உதவிய தங்கை காமாட்சியைப் பார்த்தார். பார்வை அந்த பங்களாவிற்குள் இருந்தாலும் மனம் எங்கோ பல மைல் கடந்து அவரைக் கொண்டுவந்து தமது கிராமத்திற்குள் நிறுத்திற்று.

கூனிக் குறுகிச் செல்லவேண்டிய ஆதிகாலத்து ஓலைப் பிறைக் கட்டடம், செமண்டின் வாடை படாமல் சாணிப் பொறுக்காடிய தரை, செம்மண் காவியால் வழ வழப்படைந்த சுவர்: எங்கும் ஏழைமையின் விளம்பரம். இந்தக் குடிலைவிட்டுப் போய் பிரம்மாண்டமான பங்களாவில் உடல் ஊஞ்சல் ஆடினாலும் அவர் உள்ளம் பழைய கருப்பளுகை, கூண்டுக் கிளிபோல் இங்கே சுற்றிப் பார்த்தது.

மறுகணம், சல சலத்தோடும் கோரை வாய்க்கால் வழியே நீர் முள்ளிச் செடியை தாவிக்கொண்டும் மிதித்துக்கொண்டும் அந்த உள்ளம் பூசை செய்யும் பெட்டியுடன் வீரசௌந்தரியம்மன் கோவிலுக்குள்ளேயே நிற்கும். சில சமயம் போதுமான கை தட்டல் இன்றிப் போனால், நல்லபாம்பு எதிர்கொண்டு அழைப்பதும் உயிருக்குப் பயந்து ஓடிய பல சம்பவங்களும் நினைவில் எழவே புல்லரித்தது...உடல் நடுங்கவே ஆடிய ஊஞ்சலை நிலைநாட்ட முடியாமல் தவித்தார்.

"என்ன அண்ணாச்சி நீங்க இப்படி பயந்து போயிட்டீங்க. கீழே விழுந்திடமாட்டீங்க...சும்மா பயப்படாமல் ஆடுங்க."

சமாளித்துக்கொண்டார். ஆனாலும் மனம் என்னவோ நிலை கொள்ளவில்லை. நடுக்கும் பனியிலும் கொட்டும் மழையிலும். தகிக்கும் வெயிலிலும் தோளில் தூக்கிய நார்ப் பெட்டியுடன் செம்பு, தோண்டி, சூடன் தட்டு, கால்படி வேக வைக்கும் வெண்கல உருளி: நனைந்துவிடக் கூடாதேயென்று பத்திரமாக எடுத்துச் செல்லும் தீப்பெட்டி இத்தியாதி உபகரணங்களுடன் அன்றாடம் அலைந்தும் பயன் என்ன? பூவுக்கு நாலு கோட்டை நெல் மான்யம் வரும். மேலும் ஊர்ப் பிரமுகர்கள் இனமாகக் கொடுக்கும் நாலு மரக்கால், ஆறு மரக்கால் ஆக மாதம் அரைக் கோட்டை நெல் லுக்கே தாளம்போட வேண்டும். இடையிடையே வரும் பிள்ளையார் சதுர்த்தி, பக்தி நிறைந்த உள்ளூர் கனவான்களுக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்து அவரவர்கள் எப்பவோ அத்தி பூத்த மாதிரி கொண்டாட வரும் பிறந்த நாள், மார்கழி மாதத்திலே, பிள்ளையார் பெயரைச் சொல்லித் தமக்குக் கிடைக்கும் அரைக்கால் படி தயிர்ச் சாதம்...இப்படிப் பல வருஷங்கள் ஓடிவிட்டன. நாலு முழ வேட்டி நாலுக்குக்கூட பஞ்சம். பிள்ளையாருக்குக் கிடைத்த அத்தனை எண்ணிக்கையுள்ள அழுக்குப் பரிவட்டங்கள் கூடத் தமக்கு ஏது?

பிள்ளையார் கோவில் பூஜை, ஊரிலே கொஞ்சம் மாந்திரீகம், தேள்கடி பூரான் கடிக்கு வேப்பிலை உதறல்,—இவ்வாறு தாம் கற்ற—அக் கிராமத்தாராகக் கற்பித்த வித்தைகளில் எதிர் நீச்சல் கைபோட்டும் அவர் பாடு, வயிற்றைக் கழுவும் நிலை என்பார்களே அப்படித்தான் இருந்தது தமது ஒரே தங்கையை காமாசோமா வென்ற இடத்தில் தள்ளி வைத்த காலம் நினைவு வந்து, தங்கையின் அதிர்ஷ்டம் ஜில்லா ஜில்லாவாக மாறித் திருச்சியில் பெட்டிக் கடைக்காரர் மனைவி என்ற பட்டம் வேரூன்றிப் பின்னர் அதிர்ஷ்டம் வேரோடு பிடுங்கிப் போய் சென்னையில் பதியம் போட்டுக்கொண்டதையும் அந்தப் பதியம் நன்கு கிளைத்துச் செல்வச் செருக்கில் இருப்பதையும் ஒரு கணத்தில் மனவோட்டம் விடுத்தார்.

"என்ன யோசிக்கிறீர்கள்?"

"பெரிய மாப்பிள்ளைக்கு அடிபட்டதை நினைச்சேன். நாங்கள் வந்ததும் வராததுமாக இந்தமாதிரி நேரவும் வேணுமா?"

"என்னமோ போதாத காலம்."

"என் மனசை உன்னிடம் சொல்லவும், உங்களையெல்லாம் ஒருமுறை பார்க்கவும் ஆசைப்பட்டு வந்தேன்."

"அதனால் என்ன அண்ணாச்சி. ரங்குக்கு உடம்பு சரியாகிப் போகும். மனந்தான் சரியாகணும்."

"ஆமாம், காமாட்சி, அவன் மேஜைமேலே ஒரு படம் இருக்குதே அது யார்?"

"உஷ் 'சத்தம் போட்டுப் பேசாதீங்க. அவன் காதிலே விழுந்தா சண்டைக்கு வருவான்."

"யாரு படம் அது?"

"சினிமாக்காரி ஒருத்தி படம். அவளையே கட்டிக்கொள்ளப் போறானாம். அது சம்பந்தமாக இரண்டு வாரத்துக்கு முன்னாலே அண்ணனுக்கும் தம்பிக்கும் வார்த்தை முற்றித் தம்பியை அடித்தும் விட்டான்."

விபரம் கேட்ட தலையாரி மனசில் விவரிக்க முடியாத குழப்பம் சூழ்ந்ததைக் கண்டாள். திருத்தப்பெற்ற காய்கறிகளை எடுத்துக்கொண்டு தமது மகள் அடுக்களைப் பக்கம் போய்விடவே, தங்கையின் காதில் படும்படியாகச் சொன்னார்.

"காமாட்சி, உன்னோட யோகத்திலே பங்கு கேட்க நான் வரலே. என் மகள் வந்திருக்கிறாள். உன் பாடு, உன் மருமகள் பாடு. அந்தக் காட்டுலே இவளைக் கட்டிக் காபந்து செய்துகொண்டு இருக்கிறது இனிமேல் என்னாலே ஆகிற காரியமா? ஒரு வேளை மருமகப்பிள்ளைகள் என்னடா ஏழை எளியவன் வீட்டுப் பெண்ணாச்சுதே யென்று நினைக்கலாம். அப்படி நினைச்சால் ஏதோ ஆயிரம் இரண்டாயிரம் நீ கொடுத்தா, வேறே நல்ல இடத்திலே கட்டிக் கொடுக்கிறேன். இரண்டொரு இடங்களிலிருந்து வந்து பெண் கேட்டார்கள். எதற்கும் நான் இங்கே வந்து உன்னையும் கேட்டு யோசிக்க வேண்டியது என் கடமை ஆச்சு."

" அண்ணாச்சி எனக்குப் பரம திருப்தி. என் பிள்ளைகளுடைய மனப் போக்கு எப்படியோ? நீங்கள் நினைக்கிறபடி நம்முடைய திருநெல்வேலிப் பட்டிக்காட்டுப் பிள்ளைகள் இல்லே. இவர்களு

டைய பட்டண நாகரிகத்திற்குத் தகுந்த மாதிரிதான் கலியாணத் திலேயும் புத்திபோகும். எனக்கு இதில் ஆட்சேபணையில்லை என் பதை நான் சொல்லவும் வேண்டுமா?''

"அதென்னம்மா அப்படிச் சொல்லிவிட்டாய்? நீ சொன்னால் சரி யென்க மாட்டார்களா? பெரியவனுக்கு இல்லாவிட்டால் சின்னவனுக்காவது இவளை நீ ஏற்றுக்கொள். பிறகு உன் இஷ்டம்.''

"ஐயோ என் இஷ்டம் எதுவுமே கிடையாது. அவளுடைய யோகம் எங்கே எங்கே போட்டிருக்கிறதோ. இப்போ கீழே விழுந்து அடிப்பட்டானே ரங்கம், அதைக்கண்டு அவள் எப்படித் துடித்து விட்டாள்' என்ன இருந்தாலும் தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடாதா? பட்டணத்திலே படித்த பிள்ளைகள் சாணி யைத் தொடுமா? இப்படி வீடு புகுந்து காரியம் பார்க்குமா? பாருங் களேன். கத்தரிக்காய் வீணாப் போகிறதென்று அத்தனையும் நாலு கூடையும் நறுக்கி வற்றல் போட்டிருக்கிறாள். வெண்டைக்காயும் அப்படியே வற்றல். வீணாகக் கிடக்கிற சாணிக் குவியல்களைத் தோட்டத்துச் சுவரில் படை படையாக எருத்தட்டி விட்டாள். இதெல்லாம் இங்கே யார் செய்கிறவேலை? நான் ஏதேனும் வற்றல் வடகம் போட்டால் பெரிய மருமகனுக்குக் கோபம் வந்துவிடும். சாணியைக் கண்டாலே துர்வாஸர் ஆகிவிடுவான்.''

தங்கை சொல்வதைச் சுவாரஸ்யமாக கேட்டுக்கொண்டு ஊஞ் சலில் ஆடியவர் "ஆமாம் இளப்பமாக நினைக்கிறபோது எந்தத் தொழிலும் இளப்பந்தான். சரி, மற்ற கவலை எதுக்கு? இந்த வீட் டிலே உண்டான வேலையைச் செய்கிறாள், சாப்பிடுகிறாள் அப்படி யும் ஒரு ஆள் வேண்டுமல்லவா?'' என்று நோட்டம் பார்த்தார்.

"அவள் தலைவிதி இங்கே சமையல் காரியாக இருக்க வேண் டுமா? போன மாசம் வரை, சமையல்காரம்மாள் இருந்தாள். ஒரு நாள் கோபத்திலே ரங்கன் ஏதோ இரைந்தான். அந்தம்மாள் கோபித்துக்கொண்டு போனவள் சம்பளம் பாக்கி வாங்க வர வில்லை. அடுத்த வாரம் வந்து விடுவாள், அவளே வேலைக்கும் இருப்பாள்.''

"அப்படியானால் சமையல் காரியாகக்கூட இந்த வீட்டில் இருக்கவும் முடியாது. அதற்கும் ஆபத்து வந்துவிட்டது!''

பொன்னனைந்த பெருமாள் சிரித்துக் கொண்டார். தன்னுடைய ஜீவனத்தையும் மகளுடைய வாழ்க்கையையும் ஒருங்கே முடிச்சுப்போட முயன்று சௌக்கிய வாழ்வை விரும்ப, தங்கை பிடி கொடுக்காமல் பேசுவதைக் கண்டு உள்ளூற வருத்தமேற்பட்டாலும், வெளிப் பகட்டாகச் சிரித்துச் சமாளித்தார். பணக்காரர்களிடமும் மேல் உத்தியோகஸ்தர்களிடம் பழகும்போது உறவையும் ஊறிய மனப் பான்மையையும் மறந்து கெஞ்சுதல் குணத்தோடுதான் பழக வேண்டியதாகிறது. தங்கையென்ற பாந்தவ்யத்தைக் காட்டிலும் பணக்காரி என்ற பவ்யம் அண்ணனுக இருந்தும் ஏற்பட்டு விட்டது. இன்று குழைந்து பேசுகிற பிள்ளையவர்கள் காமாட்சியம்மாள் பதினைந்து வயதாக இருந்த போதிலும், 'அண்ணுச்சி' என்று அவள் காதில் யார் சொன்னலும் ஒருநடுக்கம். ஒரு வெள்ளிக்கிழமை குடந்தட்டை விளக்க மறந்துவிட்ட காரியத்திற்காக கன்னத்தில் அடித்துக் கூட இருக்கிருர். அதாவது அண்ணன் தயவில் காலந்தள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தில் அப்படிப் பயந்து நடுங்கிய காமாட்சியம்மாளிடமே, இன்று அவள் தயவு ஏற்பட்டால் நல்ல முறையில் மகளும் தானும் காலந்தள்ள முடியும் என்று வந்தபோது குரலில் அடக்கம், பேச்சில் அடக்கம் எல்லாம் சேர்ந்து தமக்கையைக் கௌரவிக்கும் இளைய தம்பி போல நடந்து கொண்டார். பணக்கார வீட்டில் தங்க நேர்ந்தால் வயதுக்குள்ள கௌரவம் கூடக் கிடையாதுதானே!

காமாட்சியம்மாளுக்கு அண்ணுச்சியின் ஆசை புரிந்துவிட்டது. அவளுக்கும் ஆவுடையம்மை மீது வெகு பிரியம். தான் வாக்குக் கொடுத்து ஆசை வார்த்தை காட்டக் கூடாதே யென்று எச்சரிக்கையாக இருந்து கொண்டாள். பிள்ளைகள் இருவரில் தன் மனப்படி ரங்கசாமி கேட்க மாட்டான், கேட்கக் கூடிய பிள்ளை வேலய்யா. ஆனல் கலியாண விஷயத்தில் தன் கட்சி செல்லுபடி ஆகுமோ ஆகாதோ.

ஆவுடையம்மை, தகப்பனும் அத்தையும் பேசிக்கொள்வதை காதில் போட்டுக் கொண்டே ரங்கசாமியின் அறையிலும் ஓர் கண் வைத்திருந்தாள்.

“ அம்மா கொஞ்சம் வெந்நீர்!” என்றான் அடிபட்ட ரங்கசாமி முனகியபடியே.

ரங்கசாமி கூப்பிட்டது, காமாட்சியின் காதில் விழவில்லை. அவள்தான் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருக்கிறளே.

" அத்தை, வெந்நீர் கேட்கிறார்கள் அத்தான். இதைக் கொண்டு போய்க் கொடுங்க" என்று தம்ளரில் கொண்டு வந்து வைத்தாள்.

"வெந்நீர் கேட்டானு? நான் பேச்சு சுவாரஸ்யத்தில் இருந்ததால் கவனிக்கவில்லை. கொண்டுவா."

தம்ளரை அத்தையிடம் கொடுக்க, தாய் மகனறைக்குக் கொண்டுபோய்க் கொடுத்தாள். ஆவுடையம்மை நறுக்கித் திருத்தப்பட்ட இடத்திலே கிடந்த காய்கறிக் குப்பைகளைப் பெருக்கி எடுத்துக்கொண்டு சமையல் அறையைத் தாண்டி தோட்டத்தில் போடுவதற்குப் போனாள். அந்தச் சமயம் "இந்தாம்மா, இன்னும் ஒரு செம்பில் வெந்நீரும் கொஞ்சம் காபியும் கொண்டுவா" என்றான் ரங்கம். அவன் சொல்லியது தாயிடம். இது காதில் கேட்டதும் பம்பரமாகச் சுழன்றாள் ஆவுடையம்மை.

ரங்கசாமி காபி என்று சொல்லியதும் பில்டரில் காப்பிப் பொடியை அள்ளிப் போட்டு, வெந்நீர் ஊற்றி டிக்காக்ஷன் தயாரித்துப் பாலையும் அடுப்பில் வைத்தாள் அவள். தனக்கும் தகப்பனுருக்கும் விடிவு காலம் பிறந்துவிட்டதாகக் கருதினாள். எப்படியும் ரங்கசாமியின் அன்பைப் பெற முடியும் என்ற நம்பிக்கைக் கயிற்றில் ஊசலாடினாள்.

ஏதோ சிந்தனையில் ஊஞ்சல் ஆடிக்கொண்டிருந்தார் பெரியவர்.

காப்பி தயாரித்துக்கொண்டு ரங்கசாமியின் அறைக்குள் வந்தாள். அவன் குடித்தான். காப்பியின் மணம் அன்று வெகு ஜோராகவே இருந்தது. ருசியும் அலாதி.

"அம்மா, காப்பி ரொம்ப ஜோர், அம்மா!" என்றான் ரங்கம், தான் பட்டிருந்த அடியை மறந்து பேசினான்.

" ஆமாம். அவள் செய்கிற எந்தக் கறி குழம்புதான் மட்டம்? எல்லாம் வெகு நேர்த்தி. அதிலும் காப்பி."

" மதராஸில் இப்படி ஒரு ஹோட்டலில் கூடக் காபி கிடையாதம்மா. மெரினு காண்டீன் கூட இதற்கு ஈடாகாது."

மகனுடைய மனசை அறிந்து மருமகளைத் தட்டிக் கொடுத்தாள்.

"இப்படிக் காப்பி போட எங்கே கற்றுக் கொண்டாய்?" என்று வாஞ்சை ததும்பும் குரலில் கேட்டான் ரங்கசாமி. மகன் இவ்வளவு குளுமையாகப் பேசித் தாயார் கேட்டு வெகு காலம் ஆயிற்று. நாணத்தால் முகம் சிவக்கத் தலையைத் திருப்பிக்கொண் டாள் ஆவுடையம்மை. வாளிப்பாக வளர்ந்திருந்த கட்டு நிறைந்த பொன்மேனியில் நவ நாகரிக ஜம்பர், பள பளக்கும் சில்க்கு கோண வகிடு சேர்ந்தால்......? என்று கனவு கண்டவன். "ஏம்மா இந்தப் புடவைகள் தவிர வேறு கிடையாதா?" என்றான்.

அவை சாதாரண நாற்பதாம் நம்பர் கைத்தறிச் சேலை, எட்டோ பத்தோ ரூபாய் விலையுள்ள புடவை. அதைவிட மட்டமான துணியில் ரவிக்கை யணிந்திருந்தாள். அந்த வீட்டுக்குள் நுழையும் யாவரும் அவள் அழகை மட்டும் பாராது உடையை நோக்கினால் வேலைக்காரி ஸ்தானம் கொடுக்கவே அஞ்சுவார்கள். விதவை யாகப் போய்விட்ட காமாட்சியம்மாள் வைத்துள்ள புடவைகள் வெள்ளைக் கலையாக இருக்கவே, ஆவுடையம்மாளுக்கு உயர்தரப் புடவைகள் மெல்லிய ரகங்கள் அகப்படவில்லை.

"எல்லாம் வாங்க வேண்டியதுதான்."

மீண்டும் காபியை ருசித்தவன், "அம்மா இப்படிப்பட்ட காபி நான் மிருதுலதா வீட்டில்கூடச் சாப்பிட்டதில்லையே?" என்றான்.

காமாட்சியம்மாள் மிருதுவின் பெயரைக் கேட்டதும் இனிய சங்கீதத்தைக் கேட்டவனுக்குச் சுருதி கலைந்த தம்புராவின் மீட்டு காதைத் துளைவிடுவதைப் போன்று நிலை கலங்கினாள்.

"ஆனாலும், நீதான் அவளை அழைத்துச் சென்று அந்த மெரினா காண்டீன் கடைக் காப்பியைக் குடிக்கச் சொல். நாலு இடத்திற்கும் அழைத்துப் போகிறாயா?" என்று சொன்னாள். ரங்கசாமிக்கு வெளியே அழைத்துச் செல்லுகிறேன் என்று சொல்ல நாவு கூசிற்று. பீச்சில், பிறர் திரும்பிப் பார்த்துப் பேசு போடும் அழகோ, நவ நாகரிகமோ உள்ள பெண்ணாக அஞ்சலை தோன்றவில்லை. வீட்டுக்குள் அழகு பார்க்கும் ஓவியமாகவே தோன்றினாள். ரங்கசாமி கூட்டிப் போகிறேன் என்றோ, மாட் டேன் என்றோ சொல்லாது போகவே, "ஆமாம் அத்தை, என் னோடு அவர்கள் வர வெட்கப் படுவார்கள்; நான் இந்த ஊர்ப் பெண்கள் மாதிரி வெங்காய உடை உடுத்திக் கொண்டு நடந்தால்

அவர்கள் கண்ணுக்கு நாகரிகமாக இருக்கும்" என்று சொல்லிக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

"அடடே இந்த வாயில் சேலை நாகரிகத்தையே ஒரு வரியில் முடித்துவிட்டாளே அம்மா. வெங்காய உடையாமே, பார் அம்மா. உன் மருமகள் குறும்பை.'

"உன் உடம்பு சரியானதும் நம்முடைய காரிலேயே உன் மாமாவையும் ஆவுடையையும் நீ காரில் அழைத்துச் செல்ல முடியுமானால்?"

ரங்கசாமி குறுக்கிட்டு "ஐயோ அம்மா, உனக்கு ரஸனையே இல்லை. அவள் பெயரை ஆவுடை என்று சொல்லாதே. எனக்கு வாந்தி யெடுத்துவிடும். குடித்ததோ அருமையான காபி. அதைச் செய்துவிடாதே?"

"அப்படியானால் நீ என்ன பெயர் வைத்துவிட்டாய்?"

"சிறு பிள்ளையிலே அவளுக்கு அஞ்சலை என்று நானும் தம்பியும் பெயர் வைத்தோம். அந்தப் பெயரே போதும்."

"சரி, உன்னிஷ்டப்படியே சொல். ஆவுடை அஞ்சலை, யானாள்."

"போம்மா, உன் கேலி போதும்."

"உனக்கு உடம்பு எப்படி இருக்கிறது?"

"எவ்வளவோ நலம். அந்தச் சாணி ஒற்றடம் இவ்வளவு மதிப்புள்ள என்பதை இன்றுதான் கண்டேன். எக்ஸ்ரே எடுக்க வேண்டுமோ, தோள்பட்டை எலும்பே பிசகிவிட்டதோ என்று பயந்தேன்.

"ஒன்றும் பயப்படாதே. எல்லாம் நல்ல விதமாக முடிய வேண்டும். உன் மாமா இங்கே வந்த நோக்கமும் நல்லவிதமாக முடியவேண்டும்."

தாயின் சொல்லைப் புரிந்துகொண்ட ரங்கசாமி, அதை என்ன வெனத் துருவிக் கேட்காமல், "அம்மா வெண்டைக்காய் சாம்பார் எப்படிக் கும்மென மணம் வருகிறது!" என்றான்.

"எல்லாம் உன் அஞ்சலையின் கைராசி" என்று மகனுடைய மனக்கடலில் தூண்டி போட்டு உள்ளத்து மீனின் துடிப்பை மிதப் புப் பார்த்தாள். ரங்கசாமி மீன் அல்ல. பெரிய திமிங்கிலம் என் பதை எங்கே உணர்ந்தாள் தாய்?

# 6. துப்பாக்கி முனையில்

"நில் அப்படியே. சற்று நகர்ந்தாலும் சுட்டுவிடுவேன்" என்ற குரல் கேட்கவே அசையாது நின்றான் வேலய்யா. அவன் எதிரே கையில் ரிவால்வர் ஏந்திய மிருதுலதா சிரித்தவண்ணம் நின்றாள். திடீரென்று அவள் பேசியதாலும் ரிவால்வரை நெஞ்சுக்கு நேராக உயர்த்தியதாலும் அவன் நிலை ஒரு கணத்தில் பொறி தட்டி வியர்வையைக் கடலாய்ப் பெருக வைத்தது. தன் அச்சத்தையும் நடுக்குமுடலையும் அவள் காணாதிருக்க எவ்வளவோ சாகஸங்கள் செய்தும் பயனில்லை.

நெஞ்சுக்கு நேராக இருந்த ரிவால்வர் தணிந்தது. இவ்வளவு நேரம் கோபத்தில் புன்னகை இலங்கிய முகத்தில் மன்னிப்பு நிறைந்த புன்னகை தவழ்ந்தது.

"மன்னிக்க வேண்டும். நீங்கள் என்று தெரியாது. நான் நடிக்கவிருக்கும் படத்தில் இப்படி ஒரு கட்டம் வருகிறது. அதை ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தேன். தாங்கள் பயந்துவிட்டீர்கள். தங்களுடைய சில்க்கு சட்டைகூட நனைந்து தொப்பல் தொப்பலாக ஆய்விட்டது."

மிருதுலதா மன்னிப்புக் கோரும் பாவத்தில் பேசினாலும் வேலய்யாவுக்கு மனம் ஆறவில்லை. தன்னை ஏளனம் செய்யவே இவ்வளவு கேலியும் செய்வதாகப் பெரிது படுத்திக்கொண்டான்.

"அந்த ரிவால்வர் மருந்துள்ளதுதானா?"

"ஏன் சந்தேகம். இதோ வாங்கிப் பாருங்கள், என்னை நோக்கிச் சுடுங்கள்" என்று அவன் கையைப் பிடித்து ரிவால்வரைக் கொடுத்தாள். அவள் ஸ்பரிசம் பட்டதும் எலும்புக் குருத்துவரை நெருப்புப் போல் தகித்தது. இவ்வளவிற்கும் அவள் கரங்கள் வாழைத் தண்டின் மென்மையும் குளிர்ச்சியும் சொகுசும்...நிறைந்திருந்தன. வேலய்யா, "தங்களிடம் முடிவாகப் பேசிப் போகவே வந்தேன்" என்று சொல்லவே, எதிரே இருந்த சோபாவைச் சுட்டிக் காட்டினாள்.

அவன் அமர்ந்தான். உடம்பில் பொங்கி வழிந்த வியர்வைக்கு மேலே சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறி இதமாக இருந்தது.

"காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்று கனிவு ததும்பச் சொன்னாள். தலையசைத்துவிட்டான், வேலையா.

"என்ன முடிவு?"

"என் அண்ணன் வாழ்வைப் பாழ் பண்ணிவிடாதீர்கள். இதைச் சொல்லவே வந்தேன்."

"அவர், என் வாழ்வைப் பாழ் செய்தால்?"

"பெண்களின் தயவும் சம்மதமுமின்றி ஆடவர்கள் துணிய முடியாது."

"பெண்களைக் குற்றம் கூறிவிட்டால், ஆண்களுக்கு வெற்றியாகிவிடாது. உங்கள் சகோதரருக்காக நீங்கள் பாடுபடுவது எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. நீங்கள் நினைப்பது போல இந்த மிருதுலதா மிருகம் இல்லை. எல்லா ஜீவன்களையும் போல எனக்கு இதயம் உண்டு."

"இதயம் இருப்பதை நான் அறிவேன். பிறருக்குக் கெடுதல் செய்யாமல் நல்ல வாழ்வு தந்தால் போதும். நான் வரட்டுமா?"

வேலையா எழுந்தான். வேலையாவின் விழிகளையும் அவன் கண்டிப்புக் கருரையும் பார்த்து வியந்தாள் மிருதுலதா. சகோதரனுக்காக அதுவும் அண்ணனுக்காகப் பரிந்து பேச வரும் தம்பி. அவள் உள்ளத்திலே புயல் வீச ஆரம்பித்தது. அவளுடைய தரிசனத்திற்காகப் பணத்தை மூட்டை கட்டிக் கொண்டு எத்தனை எத்தனையோ சீமான்களும் பூமான்களும் இருக்கிறார்கள். ஆனால் அவள் உள்ளமோ, வேலையாவின் திண்டோள் மீது இருந்தது. வாலிபமும் வயதும் வாட்ட சாட்டமான தேகக் கட்டும் அவளை அறியாமலே மோகிக்கச் செய்தது. அவன் நடந்து கொண்டிருந்தான்.

"அப்படியானால்..." என்ற வார்த்தையைச் சொல்லிவிட்டு அவள் தயங்கினாள். அவன் திரும்பிப்பார்த்தான். அவள் கண்களில் மிதக்கும் பசியின் ஏக்கம் தெரிந்தது. அவள், அவனிடம் பிச்சை கேட்கும் நிலையில் இருந்தாள். தன்னையே விற்று அவன் அடிமையாக வாழ நினைத்தாள். அவள் உள்ளத்தின் இரகசியங்கள் எல்லாம் முகத்திலே ஓடிவந்து தேங்கிக் கொண்டிருந்தன. தாபங்கள் புருவத்தில் நெளிந்தன. ஏக்கங்கள் கண்ணில் தேங்கும் கண்ணீர்த் துளியில் கொப்புளித்தன.

வேலைய்யாவின் மனம் திரிசங்கு சொர்க்க நிலையில் நின்றது; நேர்மையும் பேராசையும் ஒரு கணத்தில் மோதித் தத்தளித்தன. அண்ணனைக் கெடுக்காதே என்று சொன்ன மனத்தினுல் தான் கெடுவதா? என்றோர் சிந்தனை. தயங்கிய நிலையில், இருந்த அவன் முன்னுல் வந்தவள் தான் பணிந்து நின்றுள்.

அவன் கைகளைப் பற்றிக்கொண்டாள், அவள் இரத்தத்தின் கொதிப்பு அவன் ஸ்பரிசத்தில் பாய்ந்தது. கையை உதறினுன்.

"அன்பரே'' என்று தழுதழுத்த குரலில் கண்ணீர் சோரச் சொன்னுள்.

''இது தவறு. நான் இதற்கு அப்பாற்பட்டவன்."

''உங்களைத் தவிர இந்த அடியாள் மனசில் எந்த உருவமும் இல்லை. என்னை வஞ்சகி யென எண்ணுதீர்கள். என் வாழ்வை நான் நேர்மையுடன் நடத்தத் துணிந்துவிட்டேன். வாழ்வுப் பிச்சை தரும் கற்பகத்தருவாக உங்களை இந்த அபலைக் கொடி கேட்கிறேன். என் வாழ்வை வாழ்விப்பதும், கருக்கி வாட வைப்பதும் தங்கள் சித்தம். என்னைத் தவருக நினைக்காதீர்கள்' நான் பெண்ணுள்ளம் கொண்ட பிறவி; இன்று முதல் நீங்கள் சொல்வதற்குக் கட்டுப் பட்டவள்.''

அவள் அழுகையும் விக்கலும் அவனுக்கு நடிப்பாகப் பட்டன.

நடிக உலகத்தில் வாழ்பவர்கள், உண்மையாகப் பேசினுலும் அதை நடிப்பாக எண்ணுவது இயல்புதானே? அவள் அதரங்கள் துடித்தன, வேலைய்யாவின் ஆமோதிப்பு—நான் உன்னை மணந்து கொள்வேன்—என்ற வார்த்தைகளை எதிர்பார்த்தாள். மழைத் துளியை எதிர்பார்த்த சாதகப் புள்ளின் தலையில் மழைத் துளிக்குப் பதில் இடிவிழுந்தது போலாயிற்று.

"பேஷ் பேஷ் நன்கு நடிக்கிறீர்கள். ரிவால்வரினுல் சுடப்பட்ட ஆடவனைக் கொன்ற பிறகு இத்த வசனம் பேசுகிறீர்களா? துப்பாக்கி முனையில் காதல் வார்த்தைகள்'' என்று கடகடவெனச் சிரித்தான். அவளுக்கு, அவன் பரிகாசச் சிரிப்பு எரி நெருப்பாக இருந்தது:

''பரிகாசம் வேண்டாம். நான் பேசுவது வாழ்க்கையின் உயிர் [illegible] [illegible] என்னைக் கொலை செய்யாதீர்கள்?''

"அம்மணி அவர்களே, நான் பேசுவது நடிப்போ துடிப்போ எதுவாக இருந்தாலும் சரி. இந்த ஜன்மம் விளக்கில் விழுகின்ற விட்டில் இல்லை. எனக்கென்ற குடும்ப விளக்கு எங்கிருக்கிறதோ. தயவுசெய்து உங்கள் கொள்கைக்கும், வாழ்க்கை முறைக்கும் ஒத்துதக் கூடிய ஒரு நபரையே கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்."

"அப்படியானால் நான் நடிப்பதை விட்டுவிட்டால் உங்கள் பதில் சாதகமாக இருக்கும்."

"தாங்கள் எதை விட்டுவிட்டாலும், எதைச் சேர்த்துக் கொண்டாலும் எனக்கு அக்கறையில்லை. வீணாக இளம் உள்ளங் களுக்கு நம்பிக்கை யூட்டி, ஆயிரமாயிரம் வாலிப நெஞ்சங்களைத் தீய்க்காதீர்கள். இந்த இளம் வாலிபர்கள் தங்கள் கடைக் கண் வீச்சுக்காக மட்டும் பிறக்கவில்லை. எத்தனையோ இலட்சியங்கள், வாழ்க்கை அலுவல்கள் இருக்கின்றன. வீணான கனவுகளால் பாழ் படுத்தாதீர்கள். தாங்கள் யாரையாவது மணந்துகொண்டு விட்டால் எந்த யுவனும் இனித் திரும்பிப் பார்க்கமாட்டான்."

"நான் கெஞ்சுவதும், உங்களிடம் அன்புப் பிச்சை கேட்பதும் உங்களுக்கு விளையாட்டாக இருக்கிறது, விநோதமாக இருக்கிறது. விந்நியாஸம் செய்கிறீர்கள். தங்களை மணம் புரியத்தான், தங்கள் தமையன் சிநேகிதத்தில் தங்கள் வீடு தேடிக்கூட வந்தேன். ஆனால் மன்னர் பெருமை மடையர் அறிவரோ என்ற மாதிரி உங்கள் அருமையும் பெருமையும் என் உள்ளத்திற்குப் புரியாப் புதிராகப் போய்விட்டன. இன்றல்ல, என்றாவது மிருதுல்தாவை மணந் திருக்கக் கூடாதா என்று ஏங்குவீர்கள்."

"அப்படிப்பட்ட பாவாத்மாவாக நான் என்றைக்கும் மாற மாட்டேன். தங்கள் சொற்களை நான் இதுவரை வேடிக்கையாக வும் என்னைக் கேலி செய்வதாகவும் நினைத்தேன். இதோ கண்ணீர் உகுக்கின்றீர்களே, இதுகூட நடிப்பின் விளைவாக விளையும் நீர்த் துளிகளா? இல்லை, அன்பின் பெருக்காக உதிர்க்கும் அன்புத் துளிகளா?"

"உங்கள் கண்களும் நெஞ்சும் வைரம் பாய்ந்தவை. குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் இது வாழை நார் என்று மாலையாகப் போட்டுக்கொள்ளும் நரசிங்கமூர்த்தியின் அவதாரம்."

"அவதார புருஷர்கள் உலகில் அக்கிரமத்தைக் கண்டிக்கவே பிறக்கிறார்கள். உலக க்ஷேமத்தைப் பேணக் கூடிய தன்மை யில்லாது போனாலும் குடும்ப க்ஷேமத்தை நான் பேணக் கூடிய தன்மையுடையவனாக இருக்கிறேன். நான் கடுமையாகப் பேசி யிருந்தால் மன்னியுங்கள்."

"பக்தை, தெய்வத்தை மன்னிப்பது பூலோகத்தில் நடை பெறுகிற காரியமா?"

"இம்மாதிரி பொருள் பொதிந்த ஆனால் வாழ்வுக்கு வலுவு தராத வசனங்கள் பேசி வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளா தீர்கள்."

"அம்மாதிரி வசனங்கள் கவலையைக் கொடுக்கின்றன என்பது உங்கள் அபிப்பிராயமா?" என்று இடக்காகக் கேட்டாள். இதுவரை பணிவாய்ப் பிச்சை கேட்கும் பரிவு நிலையில் இருந்த குரலில் சிறிது பிரபுத்துவம் ஏறி நின்றது.

நீண்ட மை தீட்டிய கண்களும், குறுகுறுப்பான மிதப்பும் அவனை அருகாக இழுத்தன.

"நான் தங்களுடன் வாதிடவோ வழக்காடவோ வரவில்லை. நான் சில சலுகைகள் கேட்டேன். தாங்கள் முடியாது என்றாலும் சரி, என்னிஷ்டம் என்றாலும் சரி. இனி எனக்கு இங்கு வேலை யில்லை, வருகிறேன்."

விறு விறுவென நடந்தான் வேலய்யா. அவள் மனசிலே இருந்த தாபம் கோபமாக மாறிற்று. காதலின் கனிவு, குரோதத் தின் உருவெடுத்தது, தன்னையும் தன்னழகையும் மதிக்காத ஒருவனை உலகில் இருக்க விடக்கூடாது,—இந்த யோசனையில் மனம் நொந்து படுக்கையின் மேல் வந்து தொப்பென விழ, சற்று முன் அங்கே கிடந்த ரிவால்வர், ஸ்பிரிங் கட்டிலின் வேகம் தங்காது எழும்பிக் குதித்துத் தரையில் விழுந்தது. கீழே விழுந்த ரிவால்வரைக் குப்புறப் படுத்தபடியே குனிந்து எடுக்கப் போனாள். அவள் கை, ரிவால்வரைத் துளாவிக் கொண்டிருந்தது. மனமோ வேலய்யாவின் பிரேதத்தைத் தழுவிக் கொண்டிருந்தது.

"அம்மா, ஸ்டுடியோ வான் வந்திருக்கிறது. செட்டிங் போட் டாச்சாம்" என்று குண்டப்பா சொன்னான். அவள், "சரி, சரி, போகச் சொல்லு. வேலை யில்லையோ? என் உடம்பு சரியாக

வில்லை'' யென்று சொன்னாள். புரண்டு படுத்தவள் ஜன்னல் வழி யாகப் பார்த்தாள்.

வெளியே டப டப படபடவென வேலய்யாவின் மோட்டார் சைகிள் ஓலமிட்டுக்கொண்டு போயிற்று.

கோபம் துடிக்க, இப்படியே ஒரு நாள் சுட்டால் என்ன? என்று வெளிப் பக்கம் ரிவால்வரை நீட்டினாள். குண்டப்பா நிற்பதை யறிந்து "ஆமாம், குண்டப்பா, எனக்கு இன்னும் மனப் பாடம் ஆகவில்லை. உடம்பும் சரியாகவில்லை. ஸ்டுடியோ வானை அனுப்பிவிடு'' என்று சமாளித்தாள்!

தன் மனத்திற்குள் வேலய்யாவின் மீது புகையும் குரோ தத்தைக் குண்டப்பா அறிந்துவிடக் கூடாது என்று சமாளித் தாள். குண்டப்பா தட தடவென இறங்கிச் சென்றான்.

ஸ்டுடியோ மோட்டார் வந்தபடியே திரும்பிப் போய்விட்டது.

கலைக்கோயில் பங்களாவிற்குள் கருகிய மொட்டுப் போல உளம் நைந்திருந்தாள் மிருதுலதா.

## 7. ஸ்வர்ணவிக்கிரகம்

தன்னிடம் அன்பு காட்டாதவர், மரியாதை காட்டாதவர் அன்பும் மரியாதையும் காட்டியதில் அஞ்சலி மெய்மறந்து போனாள். ரங்கசாமி அத்தானைப்பற்றி அவள் நெஞ்சிலே புதிய கற்பனைகள் எழுந்தன. தன் சமையலையும், முக்கியமாக வைத்தியம் செய்த சமயோசித புத்தியையும் பாராட்டிச் சொல்லியதோடு, தான் போட்டுக் கொடுத்த காபியையும் பாராட்டுகிறார்.

அவள் செய்கிற காரியங்கள் அத்தனையும் தேனமிர்தமாக இருக்கின்றன; அவள் செய்யப் போகும் காரியங்களிலும் விருப்புக் காட்டினான் ரங்கசாமி. தன் வலையில் தனக்குக் கையாளாக அஞ்சலையை மாற்றிவிட நினைத்துத்தான் இத்தனை சாகஸங்களும் செய்தான்.

அவன் உடம்பு அடிபட்டு வேதனைக்குள் அமுங்கிக் கிடந் தாலும், இரு கடிதங்கள் மீது மிகவும் பற்றுதல் கொண்டு உள்ளம் தவித்தது. தான் எழுதி வைத்த கடிதத்தைத் தம்பி பிரித்துப் பார்த்தானா, பார்க்கவில்லையா? இது ஒன்று; இன்னொன்று சற்று

முன்பு மிருதுலதாவிடமிருந்து வந்த கடிதம். அதிலுள்ள வாசகம் என்ன? தம்பி போயிருப்பது எங்கே? மிருதுலதாவின் வீட்டுக்குத் தானு? ஏன் போனுன்? ஆதியில் தன் மீது கொண்டுள்ள அவளது பாசங்கள் அத்தனையும் வேரறுத்துப் போகவும் வேண்டுமா?

அன்பொழுக, "அம்மா, அஞ்சலியை நான் ஏதோ நினைத்தேன் அம்மா. ரொம்பவும் கெட்டிக்காரியாக இருக்கிருள்" என்று பேச்சை ஆரம்பித்தான் ரங்கசாமி.

மகனுடைய உள் நோக்கத்தைப் புரிந்துகொள்ளாத தாய், மகனுக்குக் காதலே பிறந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு, "என்னமோ அவளும் நாலெழுத்துப் படித்திருந்தால் இப்படிப் பாசத்தோடு இருக்கமாட்டாள். நாலாவது வீட்டிலே இருக்கிருளே சீதாவோ கீதாவோ அது மாதிரி தஸ் புஸ் என்பாள். அத்தானையும் அண்ணனையும் மதிக்கமாட்டாள். பட்டிக்காட்டில் வாழ்ந்துவிட்டதால் அவளுக்குப் பந்துக்கள் குடும்பத்தில் பாசம் இருக்கிறது" என்று சம்பிரதாயமாகப் பேசினுள்.

ரங்கசாமியின் மனசில் அஞ்சலி புகுந்துவிட்டாள், இனி மணம் முடிக்கவேண்டியது தான், என்றுகூட எண்ணிக்கொண்டாள் காமாட்சி. ரங்கசாமி தன் மாமன் மகளை மட்டுமல்ல, மாமனையும் கொஞ்சம் குளிப்பாட்ட ஆரம்பித்தான்.

"மாமா, மாமா, பட்டணத்திலுள்ளவர்களுக்கும் கிராமத்தில் உள்ளவர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது. உங்கள் உடம்பைப் போல் கர்லாக் கட்டையாக எவன் உடம்பு பட்டணத்தில் இருக்கும்?" என்று ஆரம்பித்தான். தன் மருமக்கள்மார்களில் ரங்கசாமி போக்குத் தடித்தனம் கொண்டது, வேலைய்யா போக்கு வளைந்து கொடுப்பது என்று எண்ணியவர் பெரிய மருமகனும் வளைந்து கொடுக்கும் மனப்பான்மைக்குள் வந்து விட்டதில் மகிழ்ச்சியடைந்தார். இதனுல் தமது குமாரத்தி, அண்ணன்—தம்பி இருவரில் யாரையாவது ஒருவரை மணந்துகொண்டு இனிய வாழ்க்கை நடத்தப் போவதையும் கனவு கண்டார்.

"மருமகப்பிள்ளை சொன்னுல் சரி. உங்கம்மா சிறு பிள்ளையா இருக்கும்போது கிணத்திலே நின்று துலா ஏற்றம் இறைக்க ஆரம்பிப்பேன். கை சளைக்குமா? ஒரு மணி நேரத்திலே குடம் நூறுனுலும் மள மளன்னு இறைச்ச கை இதுதானே. பத்து

மைலாக இருந்தாலும் நடக்கச் சோம்பல் படுவேனு? விறு விறுன்னு நடந்தால் மெயில் கெட்டுது கேடு.'' என்று நமது திடகாத்திரத்தை அளந்து கொண்டிருந்தார்.

''மாமா, மாமா, என் உடல் வலி இப்போது சுமாராக இருக்கிறது. தேவாரம் திருவாசகத்திலே ஒரு பாட்டுச் சொல்லுங்களேன்'' என்றதும், அவர் நெக்குருகி உளம் நைந்து, மனங்குவியப் பிள்ளையார் சந்நதியில் கூடப் பாடாத தமது திறமையையெல்லாம் கண்டத்தில் கூட்டி இனிமையாகப் பாடிக் காட்டினர். உண்மையாக அப் பாடலின் வசீகர சக்தி ரங்கசாமியின் உள்ளத்தில் துடிப்பை உண்டாக்கிற்று.

விளையாட்டாகவும் வேடிக்கையாகவும் கிண்டல் செய்யும் உள்ளெண்ணத்தோடு ஆரம்பித்த நோக்கம் திடமான பக்தி எல்லையில் வந்துவிட்டது;

''இது என்ன பாட்டு மாப்பிள்ளை! நம்ம ஆவுடை பாடிக் கேட்கணும்.''

''மாமா, மாமா. ஆவுடையிங்கிற பேரு நன்ருகவேயில்லை, அஞ்சலையின்னு அவ பேரைத் தம்பி வைத்திருக்கிருன்.''

''அஞ்சலை, அஞ்சலை பாடி நீ கேட்டா, ஏம்மா காமாட்சி, நீ உன் மருமகள் பாடிக் கேட்டதில்லையே?'' என்று பெருமையை அவிழ்த்து வைத்தார். அன்று மலர்ந்த புஷ்பம் போன்ற அஞ்சலையின் முகத்திலே புது வகை நாணம் பரவிற்று.

''எனக்குத் தெரியாதே. எங்கேம்மா, அஞ்சலை பாடு கேட்கலாம்.'' என்ருள்.

இதுவரை நிலையில் சாய்ந்து நின்ற அஞ்சலை வெட்கம் மேலிட்டதால், தலையை உள்ளே இழுத்துக்கொண்டாள்.

''வெட்கம் என்னம்மா, இது உன் அத்தை வீடுதானே'' என்று தகப்பனுர் தைரியம் சொன்னுர்.

''கோவில்லே பாடிப் பழக்கம் போலும், அதனுலே இங்கே தெய்வம் இல்லையே. எப்படிப் பாடுகிறது என்று நினைக்கலாம்'' என விளையாட்டாகப் பேசினுன் ரங்கசாமி.

ஆண்டாள் பாசுரத்தைப் பாடினுள். அவள் குரலிலே மெருகும், சொகுசும் இல்லாவிட்டாலும் தமிழ்ப் பண்பும் வார்த்தைகளின் அர்த்த புஷ்டியும் இருந்தன. 'மத்தளம் கொட்ட வரி

சங்கம் நின்றாத' என்ற பாசுரத்தைப் பாடி நிறுத்தினாள். அவள் பாடும் குரல்தான் கேட்டதே தவிர, அவள் இருப்பதை ரங்கசாமியால் பார்க்க முடியவில்லை. காமாட்சியம்மாளும் அவள் தமையனாரும் இருவரையும் பார்க்கும் நிலையில் இருந்தார்கள்.

"ரொம்ப பேஷ், மாமா. பட்டணத்துச் சங்கீதம் பார்க்க வேண்டிய சங்கீதம். இதுவே கேட்க வேண்டிய பாட்டு, நானும் எத்தனையோ பாடகிகள் பாடக் கேட்டிருக்கிறேன். இவ்வளவு தூரம் மனசில் பதியும்படி வார்த்தைகளின் ஆழம் மனசில் விழும் படி பாடியதில்லை."

இவ்வாறு பல விதமாகப் பாராட்டினான் ரங்கசாமி. 'நான் பிள்ளையார் கோவிலுக்குப் போய்விட்டு வருகிறேன்' என்று பெரியவர் எழுந்து தமது ரெடிமேடு சட்டைக்குள் தம்மைத் திணித்துக்கொண்டு நடந்தார்.

"ஆவுடையம்மா. நான் தோசைக்கு ஆட்டிவைக்கிறேன். நீ தோட்டத்திற்குள் போய்ப் பூப் பறித்துக் கொண்டுவா. பிறகு பின்னித் தலையில் வைக்கிறேன்" என்று எழுந்தாள் காமாட்சியம்மாள்.

வான வெளியிலே மேகங்கள் அங்குமிங்கும் இரையெடுத்த எருமைமாடுகளின் கூட்டம் போலப் பெயர்ந்தன. திடீரென்று காற்றின் இரைச்சல். தொடர்ந்து பலமான இடி, கண்ணைப் பறிக்கும் மின்னல், ஜோவென்ற மழைத் தாரைகள். பூவைப் பறித்தவள் வீட்டுக்குள் ஓடிவந்தாள்.

ரங்கசாமி உள்ளத்தில் கலக்கம் பிறந்தது. தன்னுடைய படிப்புக்கும் அறிவுக்கும் அஞ்சலை போன்ற ஒரு பெண்ணே சரியான வாழ்க்கைத் துணைவியாக இருக்க வேண்டும். மறு நிமிஷம், சை! இது மாருத, மாற்றுத் தெரியாத தங்கக்கட்டி—என்ன இருந்தாலும் விந்தை விந்தையாகக் காட்சிதரும் மிருதுலதா முன் இவள் எங்கே? இப்படி மாறி மாறி எண்ண மிட்டபடியே புரண்டு கொண்டிருந்தான். அக்கடிதங்களை எடுத்து வரவேண்டுமே என்று ஆதங்கம் ஒரு பக்கம் உறுத்துகிறது.

மழையின் வேகம் குறைந்தது வானம் வெளி வாங்கிற்று. அந்தியின் பொன்னிறச் சாயல், மழைத் துளி தோய்ந்த மரங்களில்

அஞ்சலை சீவிச் சிங்காரித்து, நெற்றிக்குப் பொட்டிட்டு ஜம் மென்று நின்றாள். காமாட்சியம்மாளுக்கு இப்படிப்பட்ட ஒரு பெண் நமக்கு மருமகளாக இருக்கக் கூடாதா என்ற ஏக்கம் பிறந்தது. "இந்தாம்மா அஞ்சலை, பார்த்தியா, என் பிள்ளைகள் சொல்லிச் சொல்லி ஆவுடை பெயரே அஞ்சலையாகிவிட்டது. நேற்று உன் சின்ன அத்தான் ஏதேதோ துணிமணிகள் உனக்காக வாங்கி வந்தான். அவன் அறைக்குள் இருக்கும், போய் எடுத்து வா. அதில் என்ன இருக்கிறதெனப் பார்க்கலாம்" என்று தாயார் சொல்லும் பேச்சு ரங்கசாமியின் காதில் விழுந்தது.

மாலை மயங்கிக் கொண்டிருந்தது. வேலய்யாவின் அறைக்குள் அஞ்சலை போகப் போகிறாள். "அம்மா" என்றான். மகன் குரல் கேட்ட காமாட்சியம்மாள் திடுக்கிட்டு 'என்னவெனக்கேள், நான் பூத்தொடுத்துக் கொண்டிருக்கிறேன்.' என்று சொல்லவே, "என்ன வேண்டுமாம்" என்று அஞ்சலை கேட்டுக் கொண்டே அறையின் வாசலில் வந்து நின்று கேட்டாள்.

"ஓகோ நீயா?" உண்மையில் அவள் அழகு அன்று அபரிமித மாய் அவன் கண்களில் பதிந்தது.

"என்ன வேண்டும். உங்கள் அம்மாவிடம் போய்ச் சொல்லுகிறேன்."

"தம்பி அறைக்குள், மேஜையின் வலதுபுற டிராவில் ஒரு லெட்டர் கிடக்கிறது, அதை எடுத்துக்கொண்டு வரவேண்டும்.' மெதுவாகச் சொன்னான் ரங்கசாமி.

"இதை நான் செய்ய மாட்டேனா? அம்மாவைக் கூப்பிடு வானேன்?" என்று திரும்பினாள்.

"ஆமாம் உனக்குப் படிக்கத் தெரியுமா?"

"அவ்வளவாகத் தெரியாது. எழுத்துக் கூட்டிக் கூட்டிப் படிப்பேன்" என்றாள்.

சுவரில் கிடந்த படத்தைச் சுட்டிக் காட்டி, "இந்தப் படம் போட்ட கவர் ஒன்று இருந்தால் அதையும் எடுத்து வந்துவிடு" என்று சொன்னான். அவள் சுவரில் கிடந்த படத்தைக் கூர்ந்து கவனித்தாள்.

அது பிரபல நடிகை மிருதுலதாவின் உயரிய 'போஸ்' கொண்ட படம்.

"என்ன பார்க்கிறாய், அப்படி?" என்றான் ரங்கசாமி.

"இது யார் அத்தான். உங்கள் தங்கச்சியா?" என்று குறும்பாகக் கேட்டாள்.

"என் தங்கையாகத்தான் இருக்க வேண்டுமா? உன் தங்கையாக இருக்கக் கூடாதா?"

"என் தங்கச்சியாக இருந்தால், என்னைப்போல கோணமாணவென இருப்பாள். உங்களைப்போல நாகரிகமாக இருக்கிறதினாலே, உங்கள் தங்கச்சியாகத்தான் இருக்கவேண்டும்."

கிணறு வெட்டப் பூதம் புறப்படும் என்பது, இப்போதுதான் அவனுக்குத் தெரிந்தது. நிலைமையைச் சமாளிக்க எண்ணங் கொண்டாலும் யுக்தி கிடைக்காமல் தத்தளித்தவன் ஒரு பிரபல நடிகை என்று ஆரம்பித்தான்.

"தெரியுமே. நேற்றுமுந்தாநாளோ வந்தாளே அந்த அம்மா உங்க அறைக்கு."

"ஓகோ நீயும் பார்த்தாயா? இந்த அம்மாள் படம் போட்ட கவர் ஒன்று கிடக்கும். அதையும் கொண்டு வந்துவிடு" என்றான்.

அவள் 'சரி' என்று புறப்பட்டாள். வேலய்யாவின் அறையிலுள்ள கடிதங்களை ரங்கசாமிக்கு கொண்டு வந்து கொடுக்கலாமா, அது நியாயமா, குற்றமா என்ற கேள்விகளை அவள் யோசிக்கவில்லை. தவறென்றும் நினைக்கவில்லை. தன் கடமை எடுத்து வருவது என்று நினைத்துப் போனாள்.

வேலய்யாவின் அறைக்குள் நுழைந்தாள். அவள் கண்ணில் படும்படியாக எந்தக் கடிதமும் காணோம். நிலைக்கண்ணாடிக்குச் சற்றுத் தொலைவில் ஒரு மூட்டை தெரிந்தது. அதைத் தூக்கிப் பார்த்தாள். துணிமணிகள், ரவிக்கைக்கான பட்டுத் துண்டுகள். எடுத்துப் பார்த்தபோது ஆனந்தம் தாங்கவில்லை. புடவைகள் ஒவ்வொன்றையும் தனக்கு நேராக விரித்து விட்டு நெஞ்சுக்கு நேரே வைத்துத் தன் நிறத்திற்கு அப் புடவைகள் எப்படி அழகு தருகின்றன என ரசித்தாள். தன் மீது சின்னத்தான் கொண்டுள்ள கருணை எவ்வளவு எனத் தெரிந்தது. புடவைகளையும் ரவிக்கைத் துண்டுகளையும் அள்ளிக்கொண்டு, ஆவல் துள்ளிக்குதிக்க "அத்தை, அத்தை" என்று பூத்தொடுத்துக் கொண்டிருந்த காமாட்சி முன்னால் கொண்டுவந்து வைத்தாள்.

"ரொம்ப நன்றாக இருக்கிறதே. எத்தனை புடவை? நாலு. ரவிக்கையும் நாலு இருக்கிறதே. அடேடே பார்த்தாயா, அது என்ன ?" என்றாள்.

" அது வெள்ளைத் துணி." என்று எடுத்தாள்.

"பாடிக்கும் துணி வாங்கி இருக்கிறானே. இது மல்லா? பாவாடைக்குத் துணியோ? வேலைய்யாவுக்கு எல்லாம் தெரியும். ரங்கசாமி என்றால் சட்டையும் புடவையும் எடுப்பான்" என்று சின்ன மகனை வியந்துகொண்டாள். அஞ்சலையை அருகே இருத்தி, நீண்ட சடையிலே மல்லிகைப் பூவைத் தைத்து முடித்ததும், அர்த்த பிறைச் சந்திரனைப் போலக் கட்டி மாலையொன்றைத் தலையில் வைத்து அழகுக்கு அழகு செய்தாள், காமாட்சியம்மாள். மனத்திற்குள் அன்று எத்தனையெத்தனை கனவுகள் அவளுக்கு!

காமாட்சியம்மாள் சீவிச் சிங்காரித்துப் பொட்டிட்டுப் புதுப் புடவையும் கட்டச் செய்து அஞ்சலையை அழகு பார்த்துக் கொண் டிருந்த சமயம், தனக்கு இன்னும் மேற்படி இரு கடிதங்களும் கிடைக்கவில்லையே என்ற கவலையில் மனம் வெதும்பிக் கொண்டி ருந்த ரங்கசாமி " அம்மா கொஞ்சம் வெந்நீர்" என்று கேட்டான். வெந்நீர் கொண்டு வருகிற அஞ்சலையிடம் கடிதங்களை மீண்டும் நினைப்பூட்டலாம். ஆனால் அவள் எதிர் பார்த்ததற்கு மாறாக அம் மாவே வெந்நீர் கொண்டு வந்தாள்.

ரங்கசாமி 'எங்கே யம்மா, உன் மருமகள்?' என்று விளையாட் டாகக் கேட்டான்.

" அவள் இருக்கிற நிலையில் இங்கே வர வெட்கப்படுகிறாள் " என்று தாய் கேலி செய்தாள்.

" ஏன் ஏதாவது அடிகிடி காயம் பட்டுவிட்டதோ ?"

" அவள் புதுப்புடவைக் கட்டிக் கொண்டிருக்கிறாள். புதுமாதிரியாகச் சடையில் புஷ்பமும் வைத்துக் கொண்டிருக் கிறாள்."

" சரி அதனாலே என்ன ?',

" இங்கே வர வெட்கப்படுகிறாள்."

" ஆமாம் வரும்படி யார் சொன்னது ?"

" நான்தான் சொன்னேன்."

" ஆ அம்மா, புதுப்புடவை ஏதம்மா ?"

" உன் தம்பி நேற்று வாங்கி வந்திருக்கிறான். அவனுக்கு நல்ல புடவைகள் எதுவெனக் தெரிந்திருக்கிறது. அஞ்சலை நிறத்துக்கு எந்தக் கலர் பிடிக்கும் என்று தெரிந்திருக்கிறது."

" சரி சரி, எனக்குத் தெரியாது என்கிறாய். அப்படித்தானே."

" நான் சொன்னால் கோபம் வருகிறதே. அஞ்சலை, இங்கே வாம்மா." என்று உரத்துக் கூறிவிட்டு மகனைப் பார்த்துச் சொல்ல ஆரம்பித்த காமாட்சியம்மாள் " இப்போது வருவாள், இந்தப் புடவையை நீயே பார்? உனக்கு இப்படி வாங்கத் தெரியுமா என்று சொல் " எனக்கூறி முடித்ததும் நாணிக் கோணிக் கொண்டு அஞ்சலை வந்தாள்.

வந்தது ஸ்வர்ண விக்கிரகம். சதைப் பிடிப்பான ரோஜா நிறக் கன்னங்களிலே நாணந் தவழ வந்தது. அஞ்சலை பழைய அஞ்சலைதான். அவள் அழகும் தோற்றமும் புதிய புடவை, புதிய ஜம்பர், புதிய தலையலங்காரங்களால் மோகனச் சாயை பெற்றிருந்தது. அடக்கமும் அன்பின் ஜுவாலையும் அவள் முகத்தில் இலங்கின. உருண்டு உருண்டு மிரள விழிக்கும் காவியக் கண்களைப் பார்த்தான்.

" பேஷ் பேஷ், ரொம்ப நன்றாகத்தான் சிங்காரித்திருக்கிறாய். ஆனால் இந்த அழகைக் காணத் தம்பி யில்லையே..." என்று வேடிக்கையாகச் சொன்னான்.

அஞ்சலை நாணம் தாங்காமல் " போங்க அத்தான் " என்று சொல்லி நகர்ந்தபோதுதான் அவளுக்கு அக் கடிதங்கள் நினைவில் எழுந்தன. கடிதங்களைத் தேடிவர வேலய்யாவின் அறைக்குள் போனாள். போனவள் அங்கே யிருந்த நிலைக் கண்ணாடியில் தனது மோகனத் தோற்றத்தை உச்சி முதல் உள்ளங்கால் வரை கண்டு தானே மயங்கி நின்றாள் ஒருநாளும் தன்னை அலங்கரிக்க வேண்டுமென எண்ணாத அவள் இதயத்தில் உடைகளின் பகட்டில் அந்த ஆசை பிறந்தது.

சற்று நேரத்தில் வேலய்யாவின் சட்டைப்பைகளைத் துழாவினாள். ஒழுங்காக அடுக்கப் பெற்றிருந்த புத்தகங்களைக் கலைத்தாள்; கடிதங்களைத் தேடும் முயற்சியில் இருந்தாள். சற்று நேரமாக அவள் செய்கையைக் கவனித்துக் கொண்டு மௌனமாக

வாசலில் நின்ற வேலைய்யாவை அவள் கவனிக்கவில்லை. வேலைய்யா அவளைக் கவனித்தபடியே நின்றான்.

ஆனால் தம்பி வந்து விட்டதை ஜன்னல் வழியே கவனித்த ரங்கசாமி, வேலைய்யா அறையின் பக்கம் ஒரு கண் வைத்திருந்தான். அவன் உள்ளத்தில் என்ன நடக்குமோ என்ற திகில் குடி புகுந்தது.

"என்ன, அஞ்சலையம்மா?" என்று கடுமையாகச் சொன்னான்.

அக்குரல் அவளை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. "இங்கே என்ன தேடுகிறாய்?" என்று கேட்டான்.

"இங்கே இரண்டு கடிதம் இருக்கிறதாம், பெரிய அத்தான் எடுத்து வரச் சொன்னார்கள்" என்றாள்.

"அப்படியா சமாச்சாரம்? அதற்காக இந்த அறையில் பூகம்பம் வந்தமாதிரி குழப்ப வேண்டாம். எந்த ரெண்டு கடிதம் என்று கேட்டு வா?" என்று கடிந்து கொள்ளாமல் சொல்லவே, அஞ்சலையும் கேட்பதற்காக நகர்ந்தாள்.

ஞாபகம் வரவே "ஒரு கடிதத்தின் கவரிலே அவர்கள் தங்கை படம் போட்டிருக்கும். இன்னொரு கடிதம் மேஜை டிராவுக்குள் இருக்கிறதாம்" என்றாள்.

"ஓகோ அவைகளா? இந்தா, இதைக் கொண்டுபோய்க் கொடுத்து விடு. இனிமேல் என் அறைக்குள், என் அநுமதியில்லாமல் எதையும் தேடக்கூடாது" எனக் கோபமாகச் சொன்னான்.

இப்படிக் கோபித்ததும், அவளது சிரித்த முகம் சிவந்துவிட்டது. மலர் முகம் குவிந்தது. கடிதங்களை எடுத்துக் கொண்டு வெளியே வந்து கலங்கி நின்ற கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ரங்கசாமியின் அறைக்குள் மின்வெட்டுப் போல் புகுந்து அவன் அருகாக வைத்துவிட்டு, அதே வேகத்தில் வீட்டுக்குள் புகுந்தாள்.

"இந்தா அஞ்சலை, ஏது இது..." என்று சில விபரங்கள் கேட்க முனைந்ததும், அவள் பதிலும் சொல்ல அவ்விடம் இல்லை. அவள் வைத்திருந்த புஷ்ப வாசனைதான் அங்கே உலவிக் கொண்டிருந்தது. ரங்கசாமி, வந்த கடிதங்களைப் பார்த்தான்.

# 8. கனகாம்பரம்

காமாட்சியம்மாள் கனவு லோகத்திலே மிதந்து கொண்டிருந்தாள். தனது மூத்த மகன் மனம் மாறி இருக்கிறது, அஞ்சலை மீது அன்பு கொண்டிருக்கிறன், இனியொரு பெண்ணை மட்டும் பார்த்து விட்டால் இளையவனுக்கும் சேர்த்து, ஒரே பந்தலில் இரு கலியாணம் செய்து விடலாம். இவ்வாறு ஆகாயப் பந்தல் போட்டுக் கொண்டிருந்த சமயம் அடுத்த அறையில் அழுகைச் சப்தம்—அடக்கிக் கொண்டு விம்மும் ஒலி கேட்டது. அங்கே யார் அழுகிறுர்கள் அஞ்சலையா?

"அம்மா அஞ்சலை?" என்று அன்பு கனியக் கூப்பிட்டாள். அந்த அலங்காரத்தோடு ஒரு படம் எடுத்து வைத்துக் கொள்ளத் திட்டமிட்டிருந்தாள். ரங்கசாமி உடல்நிலை சரியாக இருந்திருந்தால் அவனைக் கொண்டே படம் எடுக்கச் சொல்லலாம். சின்ன மகன் வரும்வரை அவள் அலங்காரம் இருக்க வேண்டுமென ஆசை கொண்டவள் அஞ்சலை அழுவதை நம்ப முடியவில்லை. மீண்டும் கூப்பிட்டாள்.

தன் மனத்துயரை அடக்க முடியாமல் துக்கம் கண்ணீராக மாறி மாறி உதிர ஆரம்பித்த நிலையில், அத்தை கூப்பிட்டதும் நிலையைச் சமாளிக்க அவளால் முடியவில்லை. தன் சின்ன அத்தான் சொன்ன சொற்கள் "என் அநுமதியின்றி அறையில் எதையும் எடுத்துச் செல்லக்கூடாது" அவள் காதில் இச்சொற்கள் ஈட்டிபோல பாய்ந்தன. கடிதத்தை மட்டும்தான அச்சொற்கள் குறிக்கின்றன? அவர் வாங்கி வந்த புடவைகள் கூட அவர் அநுமதியின்றி எடுக்கப் பட்டவை! அதையும் குறிப்பாக உணர்த்தி விட்டாரா? சை! எவ்வளவு பேராசைப் பட்டு புடவையும் ஜாக்கெட்டும் எடுத்துக் கொண்டோம். தவறு. தவறு. ஆனால் அவர் அநுமதியில்லாமல் கடிதம் எடுத்ததைத்தான் குறிப்பிட்டார்! இப்படியாகத் தனக்கே ஆறுதலும் குற்றச் சாட்டும் சுமத்திக் கொண்டு தத்தளிக்கும் நிலை.

மனம் தத்தளிக்கும் அலைப் பரப்புக்கு ஒப்பாகக் கண்ணீர்த் துளிகள் இமையில் மோதுவதும் பின் வற்றி விடுவதுமாக இருந்தன. கண்ணீரை நன்கு துடைத்துக் கொண்டதில், அவள் நெற்றி

யில் அரும்பிய வியர்வையால் பொட்டு அழிந்து முகத்திலே கருப்புக் கோடு போலப் பதிந்திருந்தது. பதில் வராததைக் கண்ட காமாட்சியம்மாள் உள்ளே வரவும், ஒரு வகையாகத் தன்னை அடக்கிக்கொண்டு புன் சிரிப்புச் சிரிக்க முயன்றாள் அஞ்சலை.

அவள் சீவிச் சிங்காரித்த கோலம் எங்கே? அலங்காரங்கள் அலங்கோலமாக இருந்தன. கருஞ்சாந்தின் கரிய கோடுகள், இங்கு மங்கும் பரவி இருந்தன. தலையிலே இருந்த புஷ்பங்கள் உதிர்ந்திருந்ததோடு, அவள் முகம் சோகத்தால் சாம்பி நின்றது. காமாட்சியம்மாளுக்குப் புதிர் புரியவில்லை. அவசர புத்தியாக ரங்கசாமி கை பிடித்து விட்டானோ, அதற்காக வந்து அழுது துடிக்கிறாளோ என்று கூட எண்ணிவிட்டாள். மனதை வெளியிட்டுச் சொல்ல முடியாமல், பரிவாக "ஏனம்மா இப்படி அழுது விழுந்திருக்கிறாய்? என்ன நடந்தது? அத்தான் ஏதாவது கடுமையாகச் சொல்லி விட்டானா?" என்று கேட்டாள்.

மென்று முழுங்கிக்கொண்டு "இல்லை." என்பதற்கு மேலாக அவளால் குரல் கொடுக்க முடியவில்லை. தன்னிடம் சொல்லும்படி நெஞ்சிலே சாத்திக் கொண்டு புடவையால் அவள் கண்ணீரைத் துடைத்தாள். அற்பமான ஒரு காரியத்தை இவ்வளவு பெரிது படுத்தி விட்டோமே யென்று மனசிற்குள் கிடப்படுத்தினாள் அஞ்சலை. சொல்வதும் சொல்லாமல் இருப்பதும் தவறு விளையக் கூடியதாகப் போய்விடவும் கூடாது. இவ்வாறு தத்தளித்தவள் மிகவும் கஷ்டத்தோடு சொன்னாள்!

"அட, இதற்குத்தானா? சின்னத்தான் விளையாட்டாகச் சொல்லி இருப்பான். நீயேன் அந்த அறைக்குள் போய்க் கடிதங்களைத் துழாவினாய். புடவை எடுத்ததைப் பற்றி எதுவும் சொல்ல மாட்டான். அவனுடைய பொருள்களை யார் கலைத்து விட்டாலும் கோபம் வரும், அம்மா, இதற்காக அழாதே. வந்து விட்டானா, சின்னவன்?"

"ஆமாம் அத்தை. நானும் சிறு பிள்ளைபோல அழுதுவிட்டேன். சுருக்கென்று தைத்து விட்டது. தவறு என்மேல்தான்."

"உன்மேல் மட்டும் என்ன? பெரியவன் கடிதங்களைக் கேட்டான். நீ எடுத்து வந்தாய். உன் மேல் என்ன தப்பு?" என்று சமாதானப் படுத்தியவள் விரல்களால் மீண்டும் தலையைக் கோதி

புஷ்பங்களைச் சரிப்படுத்தினாள். விவகாரம், தான் நினைத்தபடி இல்லாமல் அற்பமாக இருந்ததால் தன் மனசுப்படியே அஞ்சலையை புகைப்படம் எடுக்கும்படி வேலய்யாவிடம் தெரிவிக்க நினைத்தாள். சொல்லி வைத்தாற் போல வேலய்யாவும் தாயாரைத் தேடிக் கொண்டு அந்தக் கட்டுக்குள் வந்து "அம்மா" என்றான். தாயார், "வருகிறேன்" என்றபடியே 'அஞ்சலை' முகத்தைத் துடைத்து மீண்டும் பொட்டிட்டுக் கொண்டு வா. உன்னை ஒரு படம் எடுக்கச் சொல்லுகிறேன்" என்று தேற்றியவள் மகன் நிற்குமிடம் வந்தாள். தாயின் முகத்தில் எப்போதுமுள்ள சாந்தம் சற்று மாறுபட்டிருப்பதைக் கண்டு கொண்ட வேலய்யா, "ஏனம்மா அஞ்சலை எங்கே?" என்றான்.

"போதும், போதும், அவள் ஒரு அப்பாவி, அவளைப்போய் விரட்டுவதில் நீ பெரிய சூரப்புலிதான். நீயேன் அவளைக் கன்னாபின்னா வெனப் பேச வேண்டும்? அவளுக்கு என்ன தெரியும்? சாது. சொன்னதைச் செய்கிறவள்." என்று கடிந்து கொண்டாள். அஞ்சலையின் மனம் ஆறுதல் கொள்ள மேல் போக்காகப் பேசினப் பேச்சு மகன் மனம் வருத்தமடைய வேண்டுமென்பதல்ல அவள் நோக்கம். குரலில்தான் கடுமை இருந்ததே தவிர, முகத்தில் மாறுதல் இல்லாது பேசினாள்.

"அம்மா நான் அவளைக் கோபிக்கவில்லை. சும்மா எச்சரிக்கை செய்தேன். பாவம். அதற்காக அத்தையிடம் வந்து சொல்லிவிட்டாளோ?"

"சொல்லி விட்டாளா? நினைந்து நினைந்து அழுது கொண்டிருந்தாள். விக்கலும் விம்மலும் கேட்டு நான் போய்த் தேற்றினேன். வீட்டுக்கு வந்தவளை அழவிட்டு வேடிக்கைப் பார்ப்பதில் யாருக்கு ஆனந்தமோ! சரி சரி. உன் காமிராவைக் கொண்டு வா. ஒரு படம் பிடித்துக் கொடு. அவள் சிங்காரத்தை நீ பார்க்கவில்லையே?" என்று பொய்க் கோபமும் தணிந்து சாதுவாகச் சொன்னாள்,

"படமா அம்மா. ஓ. எடுத்து விடலாமே. எங்கே கூப்பிடு உன் மருமகளை: " என்று சிரித்தவன்," அஞ்சலை தேவி! அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாய் வெளியே வாருங்கள்! வருக வருகவே " என்று கிண்டல் செய்தான்.

" இந்தா வேலேய்யா அழவைத்து வேடிக்கைப் பார்க்காதே. நீ போட்டோ பிடிக்கக் காமிரா எடுத்து வா. அவளுக்கு நான் மீண்டும் சிங்காரித்து விடுகிறேன்."

" உனக்கு மருமகள் பெருமைதான் பெரிதாகப் போய் விட்டது. மகன் காப்பி சாப்பிடவில்லே என்பதைக்கூட மறந்து விட்டாயே."

" மறக்கவில்லே, அவளே வைத காரணத்திற்காக இன்று உனக்குக் காப்பி இல்லே" என்று மகனுக்கு வேடிக்கையாகப் பேசிவிட்டு அஞ்சலே இருந்த பக்கம் திரும்பினுள். அஞ்சலேயின் முகத்தில் அசட்டுக்களே மறைந்து வெட்கம் புதிய ஜதியில் நடம் புரிய ஆரம்பித்தது. முகத்திலே புது முறுவல் முகிழ்த்தது.

" அம்மா, அம்மா. இப்போதுதான் படம் எடுக்க வேண்டும். இதுதான் ஜோராக இருக்கும்" எனக் காமிரா எடுக்க ஓடினுன். அஞ்சலேயும் காமாட்சியும் ஒருவரை யொருவர் பார்த்துப் புன் சிரிப்புச் சிரித்தனர்.

"பார்த்தாயா? அவன் ஒரு நிமிஷத்தில் கோபத்தை மறந்து விட்டான். அவன் குணம் அப்படி. நீ என்னடாவென்றுல் சிறு பிள்ளே போல அழுகிருயே. முகத்தை அலம்பித் துடைத்துப் பொட்டு வைத்துவா, அதற்குள் காபி பலகாரம் முடித்துவிடுவான். பிறகு படம் பிடிக்கலாம்" என்ருள். அஞ்சலே நகர்ந்தாள்.

ரங்கசாமி தன்னறையிலிருந்தபடியே நடந்த பேச்சுக் குரல் களேச் செவி மடுத்தான். சற்று எழுந்து நடமாடும் நிலேயடைந் தாலும் வெளிப்பக்கம் எழுந்துவர வெட்கம். தன்ருல் அஞ்சலேக்கு அவமானம் வந்துவிட்டது! அவன் நெஞ்சம் துடித்தது. அதுவும் தம்பி அவளே அழப்பண்ணிவிட்டான், அஞ்சலேயின் அழுகை யலேகள் அவன் நெஞ்சின் கரையிலே வந்து மோதின. எழுந்து போய் அவளுக்கு ஆறுதல் சொல்லித் தம்பியைத் திட்ட நினேத்தான். தனது கடிதம் திறந்து படிக்காமற் போனது ஒரு பக்கம் அவனுக்கு அவமானமாகவும், மற்ருெரு பக்கம் நிம்மதி யாகவும் இருந்தது. தன் மீது அவ்வளவு அலட்சியமா? இல்லே, பச்சாதாபமா?

நேரம் ஓடிக்கொண்டிருந்தது. புண்பட்ட மனம் என்ருல் சிந்தனேக் குதிரை எந்த திசையிலும் நடைபோடும்.

பவுன் பையை அவிழ்த்துக் கொட்டியது போன்ற கலகல வென்ற சிரிப்பு; அதுவும் தோட்டத்திலே சூரியக் காந்திச் செடியின் அருகாக கேட்கிறது. ஜன்னல் வழியாகத் தோட்டத்தைப் பார்த் தால், செடியின் அருகே பொற்கொடி அஞ்சலை, சற்று முன் அழுது விம்மிய அஞ்சலை, சிரித்துக் கொண்டு நிற்கிறாள். சற்றுத் தொலைவில் தம்பி அவளைப் படம் பிடிக்கக் காமிராவும் கையுமாக நிற்கிறான். தாயார் காமாட்சி ஏற்பாடு செய்ததைவிட, தம்பியின் சொற்கள் ரங்கத்தின் நெஞ்சைத் தீய்த்தன.

"கொஞ்சம் தலையைத் தணியுங்கள்."

வேர்ப்பையைக் கண்ட நாகம் போல, அந்த மின்னல் தலை தணிகிறது.

"புன்சிரிப்புப் பூக்கின்ற மாதிரி" என்று வேலய்யா சொல்லு கிறான்.

அவள் புன்முறுவல் பூக்கின்றாள். நளினமும் நாணமும் நிறைந்த நிலையில் மிரள மிரள விழிக்கிறாள். அவளை ஆட்டி அலங் கோலம் செய்வதைத் தன் தாய் ரஸித்துக்கொண்டு நிற்கிறாள். அம்மாவின் வாஞ்சை தனக்கு அதிகம் என்ற நினைப்பில் தம்பியின் மனம் கும்மாளமிடுகிறதாகப் பட்டது. மனசில் விரோதம் வந்து விட்டால் நியாயங்கள் கூடக் குரோதக்கட்சி தீட்டும். அப்படித்தான் ரங்கசாமிக்குப் பட்டது. தம்பியின் விசித்திர எண்ணம் என்ன?

நடிகை மிருதுலதாவைத் தன்னிடமிருந்து பிரிக்கிறான்; இங்கே தன் மீது அன்பு கொண்ட அஞ்சலையைப் பிரிக்கிறான். தம்பியின் மனப்போக்கு என்ன? தன் வாழ்வுக்கு நாலா பக்கமும் எதிரியாக நிற்கிறான். வியாபாரத்திலும் தன்னை நெருங்க விடாமல் முழுவதும் தானே முன் நிற்கிறான். தன்னை ஒரு பிள்ளைப் பூச்சியாக நினைக் கிறான், தன்னை அதட்டி வைக்கிறான். "நான் அவனுடைய சூத்திரக் கயிறு? பச்சை குழந்தையா? நான் சிந்தனை இல்லாத அப்பாவியா?" இப்படித் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். தம்பி வேலய்யா மாபெரும் நோக்கத்தோடு தன் செயல்களுக்கும் சிந்தனைக்கும் ஊடாக வந்து இழைகிறான். இந்த இழையை அறுத்தெறிய வேண்டும்.

மீண்டும் பார்வை, சூர்யகாந்திச் செடியின் பால் பட்டது. சிரித்துக் கொண்டு நிற்கிறாள் அஞ்சலை. படம் எடுத்தாக வில்லை.

படம் எடுக்கும் சாக்கில் அவள் அழகை வர்ண புஷ்பங்கள் மத்தியிலும் சுகந்த மலர்கள் மத்தியிலும் தம்பி ரஸிக்கிறான். அம்மாவும் அனுசரணையாக இருக்கிறாள்.

"ஏண்டா வேலு படம் எடுத்தாச்சா?"

"எடுத்து விடலாம் அம்மா, அதோ அந்த வண்டு புஷ்பத்தைச் சுற்றி வருகிறபோதே, அதையும் சேர்த்து எடுக்கப் பார்க்கிறேன். வண்டு விழுந்தால் அஞ்சலை விழமாட்டாள், அஞ்சலை விழுந்தால்..."

"வண்டு விழாது. டேய், வண்டு என்றைக்கும் வரும், அஞ்சலையின் படம் எடுக்க வந்தாயா? வண்டும் குளவியும் எடுக்க வந்தாயா?" என்று மகனைக் கோபமாகச் சொன்னாள். அதாவது கோபம் பொய்க் கோபம்.

தன்னை கேலி செய்வதாக உணர்ந்த அஞ்சலை புஷ்பச் செடியைவிட்டு விலகினாள்.

"பாரம்மா அஞ்சலைக்குக் கோபம் வந்துவிட்டது. இப்போது அழக்கூடப் போகிறாள்" என்று சிரித்தான் வேலையா.

"ஏண்டா அவள் அழுது பார்ப்பதில் உனக்கென்ன சந்தோஷம்?" என்றாள் கர்மாட்சியம்மாள்.

"அதையும் படத்தில் பிடிக்கத்தான் அம்மா" என்றதும், தன்னை மறந்து சிரித்தாள் அஞ்சலை. மனமோகனமாய்த் தன்னை மறந்து சிரிக்கும் லயத்தில் அவன் 'கிளிக்' எனத் தட்டினான். படம் பிடித்தாய்விட்டது நெஞ்சையள்ளும் கும்மாளச் சிரிப்பை. அஞ்சலையைப் புகைப் படத்துக்குள் அடக்கிவிட்டான்.

"இப்படித்தானா எடுத்தே?" என்று கேட்டாள் தாய்.

"ஆமாம், அம்மா. உம்மென்று பெண் மணமேடையில் இருப்பது போல எடுத்தால் அது என்ன அழகோடு சேர்ந்தது? ஏதாவது ஒரு செய்கை இல்லாத போட்டோ, வேரில்லாத மரம். சிரிப்பு, அழுகை, கோபம், எரிச்சல் இப்படி ஏதாவது ஒரு செயல் பிரதிபலிக்க வேண்டும். அந்தமாதிரி படந்தான் உயிர் உள்ளது. மற்றவை மரக்கட்டை பொம்மை மாதிரி" என்று பேச்சுக் கொடுத்தான்.

தோட்டத்திலிருந்து மிதந்து வந்த பேச்சுக்களை மேலும் கேட்க விடாதபடி, மோட்டாரின் ஹார்ன் கத்திற்று. வெளிப்புறம்

நோக்கினால் பச்சை நிறக்கார் வருகிறது. நடிகை மிருதுலதா என்ற பிரமையில் வெளியே பார்த்தான் ரங்கசாமி.

அதிலே வந்தவர்கள் அவன் எதிர்பாராத நபர்கள். திகைப்பைவிட ஆச்சர்யமாகவும் இருந்தது. அவனுடைய மாமா பொன்னணைந்த பெருமாள் ருத்திராட்சதாரியாகக் காரிலிருந்து இறங்குகிறார். அவருக்காக எவ்வளவு மரியாதையுடன் கதவைத் திறக்கிறார் உள்ளே இருக்கும் பெரிய மனிதர்.

அப்படியென்ன சித்து தன் மாமாவிடம் ஒளிந்து கொண்டது? அந்தப் பெரிய மனிதர் அருகாக இருக்கும் பெண்—ரூபசுந்தரியின் மீது—ரங்கசாமியின் கண்ணோட்டம் விழுந்தது. பெரும் பதவியும் பணமும் உள்ள இடம் என்பதை அவள் முக விலாசம் பறை சாற்றிற்று. கொடிபோல எடுப்பான உயரம். நல்ல சிவப்பு. மூக்கும் முழியுமான உருவம்.

பெருமாள்பிள்ளை, "உங்கள் தயவு இருக்க வேண்டும். இது தான் என் தங்கை காமாட்சியம்மாள் வீடு. உள்ளே வரலாம்; உங்கள் வசதி எப்படியோ?" என்று சொல்லிக் கையைப் பிசைந்தார். வந்த பெரிய மனிதர் தமது குமாரியை நோக்கினார். அவள் "அப்பா, அப்பா. இந்தத் தோட்டம் ரொம்ப நன்றாக இருக்கிறது. ஐந்து நிமிஷம் நீங்கள் பேசிக் கொண்டிருங்கள், நான் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று இறங்கினாள். மகள் சொல்லியதற்குக் கட்டுப்பட்டோ, பெருமாள் பிள்ளையின் தத்துவப் பிரசங்கத்திற்குக் கட்டுப்பட்டோ, நீதிபதி நீலமேகம் பிள்ளை இறங்கினார்.

"வாருங்கள். வாருங்கள்" என்று அவரை அழைத்துக் கொண்டே உள்ளே வந்தவர், "அஞ்சலை" யென்று கூப்பிட்டார்.

"ஆமாம் உங்கள் குமாரியின் பாடலை நான் கேட்க ஆசைப் படுகிறேன். தாங்களே இவ்வளவு அருமையாகப் பாடும்போது, குழந்தை வரட்டும், இப்படி அமருங்கள்" என்று நீலமேகம் மரியாதை செய்தார்.

ரங்கசாமிக்கு வந்திருப்பவர் இன்னாரென்று தெரியவில்லை. இறங்கிப் போனவள் அவருடைய மகளாக இருக்கிறாள். மாமா விடம் அதிக பக்தி கொண்டாட, மாமா என்ன மாயப் பொடி

தூவி விட்டார்? கால்நடையாகக் கோவிலிருந்து வரவேண்டியவர் பெரிய காரில் வந்திறங்கி இருக்கிறார்!

இதற்குள்ளாக அஞ்சலை தகப்பனார் கூப்பிட்ட குரல் கேட்டு, "அத்தை. அப்பா அவர்கள் வந்துவிட்டார்கள். நான் வருகிறேன்" என்று நகரவும் நீதிபதியின் குமாரி கீதா அந்தத் தோட்டத்திற்குள் நுழையவும் சரியாக இருந்தது. கிராமத்து வாளிப்பும் வனப்பும் வசீகரமும் நிறைந்து அழகின் ஜோதியாகப் போய்க் கொண்டிருந்த அஞ்சலையை ஒரு கண் வைத்தவள் திகைத்து நின்றுவிட்டாள்; பெண்ணுக்குப் பெண் மோகங் கொள்ளும்படியான அழகியெனக் கீதாவின் மனசிலே பட்டுவிட்டது. அவள் தகப்பனார் பெருமாள் பிள்ளையின் வேதாந்த சித்தாந்தங்களில் மனசைப் பறிகொடுத்த போது அவளுக்குச் சிரிப்பாக இருந்தது. ஆனால் அவருடைய மகள் இவ்வளவு அற்புத அழகியாயெனத் திடுக்கிட்டு நின்றாள். அஞ்சலை பின்பக்கத்துக் கதவு வழியாக வீட்டுக்குள்ளே போன பிறகுதான், தான் நிற்குமிடமும் தன்னைச் சுற்றியுள்ள புஷ்பச் செடிகளும் நினைவுக்கு வந்தன.

"யாரம்மா நீ...சும்மா உள்ளே வா" எனக் காமாட்சியம்மாள் சொல்லவே திடுக்கிட்டு, "நான் யார் எனத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"தெரியாது. யாராக இருந்தால் என்ன? உனக்கு புஷ்பங்கள் வேண்டிய மட்டும் எடுத்துக் கொள்ளலாம். அந்தப் பிச்சோடா நான் போட்டதுதான். மல்லிகை தைத்ததும் நான் தான். என் மருமகள், அவள் பெயர்..."

"உங்களுடைய மருமகளா அந்தப் பெண்? நான் நீதிபதி நீலமேகம் அவர்களுடைய மகள்."

"என் அண்ணாச்சி சொன்னார்கள், உங்கள் அப்பாவைப்பற்றி. ரொம்ப சந்தோஷம், வா அம்மா." அருகாக வந்து வாஞ்சையுடன் முதுகில் தட்டி உச்சி மோந்தாள் காமாட்சி.

"அப்பாவும் பெருமாள்பிள்ளை அவர்களும் உள்ளே பேசிக் கொண்டு இருக்கிறார்கள். இப்போது..."

அதற்கு மேல் அங்கு நிற்காமல், வந்த விருந்தினருக்குச் சிற்றுண்டி தயாரிக்கவும் உபசரிக்கவும் போக வேண்டுமென நினைக்க, "இங்கேயே நில்லம்மா. வீட்டுக்குள் போய் உடன் வருகி

விடுகிறேன். அஞ்சலை வீட்டுக்கு புதிசு..." என்று பேசிக்கொண்டே போய்விட்டாள்.

கீதா, அந்த இடத்தின் அழகையும், மலர்ச் செடிகளின் வாளிப்பையும் அமைதியையும் நினைத்து ஒவ்வொரு செடியாகப் போய்க் குழந்தை போலத் துள்ளிக் குதித்து அனுபவித்தாள். நாரத்தை மரத்தையடுத்து நின்ற வேலய்யா எதுவும் பேசாது காமிராவும் கையுமாக ஸ்தம்பித்து நின்றான்.

தன் உற்சாகத்திலும் ஆட்ட பாட்டத்திலும் ஆண் மகன் நிற்பதைக் கவனிக்கவில்லையே யென வெட்கித் தலைகுனிந்து அருகாக இருந்த மருதாணிப் பூக்களைக் கொய்தாள் கீதா. அவள் செய்கைக்கு மன்னிப்புக் கோருவதுபோல, "நான் நீங்கள் நிற்பதைக் கவனிக்கவில்லை. சற்று முன் பேசினது தங்கள் தாயாரா?" என்றாள்.

வாலிபம் யாரைவிட்டது? "ஆம், தாயார்" என்று மிடுக்காகச் சொல்லிவிட்டுத் தன் தவறுக்கு மன்னிப்புக் கேட்பது போல நாக்கை கடித்துக் கொண்டான்.

"உங்கள் தாயாரா?"

"ஆமாம் என்னுடைய தாயார் தான்."

"உங்கள் மாமனார்தான் பெருமாள்பிள்ளையோ?'

"இல்லை மாமாதான். அவர்கள் மகளுக்கு இன்னும் மணம் ஆகவில்லை."

"அப்படியா? அஞ்சலைக்கு மணம் ஆகவில்லையா?"

"இல்லை."

வாசமகோசரமாய்ப் பேச்சைப் பின்னி வாங்குகிற வேலய்யாவுக்கு இன்று நாக்குக் குழறுகிறது. கண் நிலையில் இல்லை. மருள மருள விழிக்கிறது. அர்த்தமில்லாத வியர்வைப் பெருக்கம். உடல் நடுக்கம். கீதா, மெள்ளமாய் ரோஜாப் பூ ஒன்றைத் திருகிக் கூந்தலில் செருகிக் கொண்டபோது, அவன் இதயத்தையே திருகிச் செருகுவதுபோல இருந்தது.

சற்று மௌனம் குடிகொண்டது. வண்டுகளின் ரீங்காரமும், வீட்டுக்குள் 'சொய்' என்ற பட்சண வாசனை தோய்ந்த ஒலியும் எங்கோ தொலைவில் ரேடியோவின் ஒலியும் எல்லாம் கதம்பமாகக் கேட்டன. கீதாவின் மௌனமும் வேலய்யாவின் திகைப்பும்

அர்த்தமற்று இருந்தாலும் தொலைவில் ஜன்னலுக்கப்பாலிருந்து நோக்கும் கண்களுக்கு எப்படி இருக்கும்?

முன்பு அஞ்சலை நின்ற இடத்தில் இப்போது இன்னொரு பெண் நவநாகரிக கோலத்திலே நிற்கிறாள்; அவளுக்கு எதிராக நிற்கிறான் வேலைய்யா. விட்டில் பூச்சிகள் தாமாக விளக்கில் வந்து விழுவது போய், விளக்குகள் அல்லவா விட்டிலை நாடி வந்துவிடுகின்றன! தம்பியின் யோக்கியதையையும் அதிர்ஷ்டத்தையும் எண்ண யெண்ண ரங்கசாமிக்கு நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது. கோபமாக சன்னல் கதவுகளைப் படீரென்று வீசித் சாத்தினான். கண்ணை மூடிக்கொண்டால், உலகம் இருண்டுவிட்டது என்ற பைத்தியக்காரனைப் போல, சன்னல்களைச் சாத்தியவன் மீண்டும் கதவைத் திறந்தான்.

அங்கே கீதா, வேலைய்யா இருவரும் ஒருவரையொருவர் பரிகாசம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

# 9. கீதா கண்ட அஞ்சலை

மறுநாள் நீதிபதி நீலமேகம் காலைப் பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தார். கீதாவின் அறிவுத் திறமை அவருக்கு வியப்பாக இருந்தது. கீதையின் ரகஸ்யத்தையோ, அவருக்குப் புலனாகாத சட்ட நுணுக்கங்களையோ அவள் சொல்லிவிட வில்லை. ஆனால் அவர் பழகிய காலத்திற்கு குறைவான நேரத்திலே அஞ்சலை, வேலைய்யா, ரங்கசாமி, காமாட்சியம்மாள், பெருமாள்பிள்ளை யார் எவர் என்று அந்த வீட்டின் ஆதி ஆரம்பம் எல்லாம் அறிந்துவிட்டாள்?

ஆண்கள் வருஷக்கணக்காகப் பழகினாலும் தெரிய முடியாத குடும்ப ரகசியங்களைப் பெண்கள் ஐந்து நிமிஷப் பழக்கத்தில் அறிந்து விடுகிறார்கள். காமாட்சியம்மாளிடமும் அஞ்சலையிடமும் கீதா அவரவர் குடும்பப் போக்கை அறிந்துகொண்டது போலவே. அந்தப் பெண்களும் நீதிபதியின் குடும்பத்தை அறிந்து கொண்டார்கள்.

நீதிபதி பேப்பரை முடித்த சமயம் கீதா ஏதோ வொரு ஹிந்தி மெட்டை முனகிக்கொண்டு போனாள்; எதிர் அறையில் மோகன ரங்கன் பார்த்துக் கொண்டிருந்தான். "கீதா" என்றார் நீதிபதி.

"உட்காரம்மா. நீ எப்படி அத்தனை விஷயங்களையும் அறிந்து கொண்டாய்?"

"பெண்கள் சுபாவம் தெரியுமே. தங்கள் சம்பத்துகளையும் பிறருக்குச் சொல்லியாக வேண்டும்."

"நீயும் நம்முடைய வீட்டைப்பற்றிச் சொல்லியிருப்பாய். அவர்களும் சொன்னார்களா?"

"ஆமாம் அப்பா. அந்தப் பெண் அஞ்சலையைப் பார்த்தீர்களே. எப்படி இருக்கிறாள்?"

"அவள் பாடிய தாயுமானவர் பாடல் என் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. எவ்வளவு விநயம், மரியாதை பக்தி!"

"இல்லையப்பா. இப்படி ஒரு பெண் அண்ணாவுக்கு வாய்க்க வேண்டுமே!" என்று சிரித்தாள். தன் மனசில் கிடந்த எண்ணத்தை வெளியே சொல்வது போல அவருக்குப் பட்டது. அவருக்கும் எங்கோ ஒரு மூலையில் அப்படி நினைப்பு எழுந்தது. மகளும், அவ்வாறு நினைப்பதைக் கண்டபோது அவருக்கு ஊர்ஜிதமாயிற்று. மகன் மோகன் என்ன நினைப்பானோ? அவன் நாகரிகத்திற்கு கண்கவர் அழகும் பண்பும் நிறைந்தவள் அநாகரிகமாகப் படலாம், நினைப்பை வெளியே சொல்லவில்லை.

இரவோடு இரவாகப் போய் வந்த விஷயங்களை எல்லாம் தங்கை கீதா சொல்லக்கேட்டும் மோகனுக்கு இப்போதைய பேச்சில் கிரக்கம் வரவில்லை. தங்கையின் ரஸிக உள்ளம் எப்படி யென்பதும் தகப்பனுக்குப் பழைய போக்கில் பிரியம் என்பதும் தெரியும். தகப்பனார் இஷ்டப்படி நடக்கத் துணியாவிட்டாலும், ரஸிகத் தன்மையில் அவனுக்கு மதிப்பு இருந்தது.

"அண்ணன் தம்பி இருவருக்குள் யார் புத்திசாலி?" என்று கீதா தகப்பனாரைக் கூண்டில் ஏற்றிய குற்றவாளி ஆக்கினாள். நீதிபதி சிரித்துக்கொண்டார். வேதாந்த விசாரணைக்குள் மயங்கி அந்த பங்களாவிற்குள் போக, அங்கு தம்மைவிடப் பணத்தின் சுக சௌகர்யத்தில் புரள்வோரைக் கண்டார். தம் போன்ற உத்தியோக கௌரவம் இல்லாத குடும்பமானாலும் பணத்தின் ஆதிக்கம் புலப்பட்டது. மகள் கேட்ட கேள்வியைப்பற்றி அவ்வப் போது சிந்தித்தும் அவரால் ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை

அகஸ்மாத்தாகப் போய் வந்த பின்னர் எல்லோர் மனசிலும் புதிய விழிப்பு ஏற்பட்டிருந்தது.

'அப்பா நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று கீதா மீண்டும் கேட்டாள்.

'எனக்கு அந்தப் பெரியவருடைய தெய்வ பக்தியும் அவருடைய ஆத்மிகக் கொள்கைகளும் பகவத் கீதை பக்தியும் வெகுவாய்ப் பிடித்திருக்கின்றன. அவ்வளவுதான். அந்தக் குடும்பத்தார் பற்றிய கவலையில்லை.'

"பொய் அப்பா. அஞ்சலை வந்து பாடிய பின்பும், நமக்கெல்லாம் பரிமாறிய பின்பும் உங்கள் மனசை நான் பார்த்து விட்டேன். ஆழ்ந்த யோசனையில் இருந்தீர்கள்."

"அந்த வீட்டம்மா பெயர் என்ன?"

"காமாட்சி."

"அந்த அம்மாள் ஏதாவது கேட்டார்களா?"

"இல்லையப்பா. அவர்களுக்கும் பூர்வீகம் நம்முடைய ஜில்லா தானும்; எட்டின உறவு என்றுகூடச் சொன்னார்கள். நம்மைப் போன்ற படித்தவர்கள் தங்கள் பங்களாவிற்குள் வந்ததில் தங்கள் வீட்டுக்குக் கௌரவம் அதிகம் என்று சொன்னார்கள்."

"உனக்கு ஒரு அண்ணன் இருப்பதாகவும் சொல்லி விட்டாயா?"

"ஆமாம் அப்பா. எம். ஏ. எம். எல். என்றதோடு விட்டேனோ? அவனுக்குக் கல்யாணம் ஆகவில்லை யென்றும் சொன்னேன்."

"அசடு. இதையெல்லாம் சொல்லுவானேன்? நாம் அந்த வீட்டில் பெண் பார்க்கப் போகவில்லையே. குலம் கோத்திரம் பேசவா போனோம்?" என்று பரிகாசம் செய்தார். படிப்பில் மூழ்கி இருந்த மோகன் 'அப்பா, பெண் கொடுக்கப் போயிருக் கலாமோ' என்று சொல்லவே கீதாவுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது.

"சும்மா இரு, அண்ணா! கன்னாபின்னா வென்று பேசாதே."

"நானா பேசினேன்? நீதான் சொன்னாயே. அஞ்சலையைப் பற்றி நான் கனவு காணும்படி அப்படி வர்ணித்தாள் அப்பா, இந்தக் கீதா. எனக்கு உடனே ராமாயணம் நினைப்பு வந்தது.'

தகப்பனார் புரிந்துகொண்டார். எந்தக் கட்டத்தைக் குமாரன் சொல்லுகிறான் என்பது அவருக்குத் தெரியும். 'டேய் என்னடா போக்கிரித்தனம் உன்னுடைய கம்பராமாயண ரஸிகத் தன்மையை விளக்க இதுவல்ல கட்டம்.' என்று வாயை அடக்கினார். அது கோர்ட்டல்லவே, கட்சி பேசுகிறவர்கள் வாய்மூடா வீடு. அதிலும் கட்சி பேச ஆரம்பிக்கிறவன் புதிதாக வக்கீல் சன்னத்து வாங்கிய அருமைப் புத்திரன்.

" ஏன் கீதா. அந்த வீட்டிலே யார் யார் இருக்கிறார்கள் சொல் ?"

அத்தனை வயதுவந்த பெண்ணாக இருந்தும் சிறு குழந்தை போல் 'வவ்வவ்வே' என அழகு காட்டினாள். தன் மனசை அவ்வளவு தூரம் திறந்து சொல்லியது தப்பு என்று பட்டது. நேற்று அவள் மனசிலிருந்த துள்ளலிலும் துடிப்பிலும் யாரிடமாவது சொல்லி ஆற்ற வேண்டும். தகப்பனாரைவிட, தனயன் நல்லவன். சொல்வதைப் புரியும் சக்தியுள்ளவன் என நினைத்தாள். இன்று தான் அது மிகவும் ரஸக்குறைவாகப் பட்டது.

" மோகன், நிஜமாகவே எனக்கு அந்தப் பெரியவருடைய தமிழ்ப் பற்றைக் கண்டு அபார மதிப்பு ஏற்பட்டது. அவருடைய மகள் ஏழையின் மகளாக இருக்கலாம், ஆனால் அன்பும் குடும்பப் பாங்கும் தெரிந்த பெண்; அத்தை வீட்டையடுத்துத்தான் நல்ல துணிமணியையே கண்டிருக்கும்."

" ஆமாம் அப்பா. அத்தனை நகையும் நட்டுமாகக் காமாட்சியம்மாள் மருமகளுக்கு அலங்காரம் செய்திருந்தாள். அதென்னமோ நாம் வரப்போவதை அறிந்து அழகு செய்தமாதிரி இருந்தது !" என்று அண்ணன் தன்னைப் பரிகாசம் செய்ய இடம் கொடுக்காதபடி படபடவெனப் பேசினாள்.

" அப்பா, நான் சொல்ல வந்த கட்டம் உங்களுக்குத் தெரியுமா? அஞ்சலையைப் பற்றி, கீதா வர்ணித்தது எப்படி இருந்ததென்றால்..."

" அட ராவணா வாயை மூடு" என்றார் நீலமேகம். எல்லோரும் கடகடவெனச் சிரித்தார்கள்.

" நீ ராவணனாகவும் நான் சூர்ப்பனகையாகவும் இருந்தாலும், அந்தச் சீதை அஞ்சலை இருக்கிறாளே அவள் இன்னும் விவாக-

மாகாத பெண்தான். எந்த ராமனையும் அவள் மணக்கவில்லை. உன் கட்சியில் நியாயமில்லை'' என்று பாதி அழுகைக் குரலிலும் பாதி வெற்றியிலும் சொன்னாள்.

"அண்ணன் வேடிக்கையாகச் சொல்லுகிறான்; தங்கை விவரித்த அழகுப் பிரபந்தத்தில் அண்ணன் மயங்கிவிட்டானோ?'' என்று குறும்பாகச் சொன்னார் நீதிபதி.

மோகனரங்கன், தகப்பனாரிடம் " அப்பா உதாரணத்தை ஒரு அளவிற்கு அப்பால் பொருத்திக் காட்டக்கூடாது என்பார்கள். அது தங்கைக்கும் தெரியும். அஞ்சலையின் புகழ்பாட வந்த இவள், வேலைய்யாவின் புகழ் பாடினாள். அவன் சைக்கிள் மோட்டாரில் தடதடவெனப் போவானும், போட்டோக்கள் அருமை அருமையாகப் பிடிப்பானும், அண்ணன் ரங்கசாமியைவிட, குடும்பத்தை மேற்பார்வை செய்வதிலும் வியாபாரப் போக்கிலும் புத்திசாலியாம். இது எப்படியிருக்கிறது?

என் வயின் உற்ற குற்றம்
யாவர்க்கும் எழு தொணாத
தன்மையன் இராமனோடும்
தாமரை தளிரப் போந்தாள்
மின்வயின் மருங்கில் கொண்டாள்
வேய்வயின் மென்றோள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள்
பொருட்டினால் புகுந்த தென்றாள்.

என்ற கதையாக இல்லையா, அப்பா?'' என்று தங்கையைப் பரிகாசம் செய்தான். மனக்குதூகலத்தைத் தந்தையிடம் சொல்ல வெட்கப்பட்டுத் தமையனிடம் சொல்லப் போக இந்தப் பாடு பாடுகிறது.

"உனக்குக் கம்பன் மீது அளவற்ற பற்று உண்டு, இந்தப் பாடல் தெரியும் என்பதைக் காட்டுவதற்கு எங்காவது மேடையேறிப்பேசு, அண்ணா. இது வீடு. இங்கே உன் பிரசங்கம் தேவையில்லை'' என்றாள் கீதா. குழந்தைகள் ஒருவரை யொருவர் குற்றஞ் சாட்டுவதையும் கேலி செய்வதையும் கண்ணாரக் கண்டு வீற்றிருந்தார் நீதிபதி.

"அப்பா, அண்ணாவுக்கு அந்தச் சைக்கிள் மோட்டார்க் காரரைத் தெரியுமாம்.''

"ஏன், கீதா, அவர் பெயரைச் சொல்லக்கூட வெட்கம்வந்து விட்டதா?"

"போ, அண்ணு" என்று விளையாட்டுக் கோபத்தோடு அங்கிருந்து நாணத்தோடு கீதா போய்விடவே, நீலமேகம் மைந்தனைப் பார்த்து "ஏன், மோகன் நீ என்ன நினைக்கிருய்?" என்ருர்.

"இதில் யார் வாதி, யார் பிரதிவாதி அப்பா?"

"விளையாட்டுப் போதும். பெருமாள்பிள்ளை ஏழைதான். மகளும் ஏழை; அந்த இடத்தை யடைந்தற்காக, அத்தையம்மாள் ஆயிரம் இரண்டாயிரம் கொடுப்பாள். பணத்தை நீ பெரிதாகப் பார்க்காவிட்டால், எனக்கு அந்தப் பெண்ணை மருமகளாக அடைவதில் பரம திருப்தி. உனக்கு எப்படியோ? நீயும் போய்ப் பார். பிடித்திருந்தால் மணம் முடித்துவிடலாம். இப்படி நல்ல படியாகப் பெண் கிடைப்பது அருமை. மற்றது உன்னிஷ்டம்."

"அப்பா உலகமே உங்களுக்குச் சொந்தம் என்ற மாதிரி பேசுகிறீர்கள். அவர்கள் ஏழையோ பணக்காரர்களோ, நமக்கு அதனல் லாபம் வேண்டாம்; நாம் பணத்தை எதிர்பார்த்து நிற்கவில்லை. ஆனல் பெண் முக்கியமாகத் தங்கள் மனசிற்கும், கீதாவுக்கும் பிடித்துள்ளது, எனக்கும் பிடித்தமாதிரி. ஆனல்."

"என்னடா ஆனல்?"

"அது அவர்கள் வீட்டு முறைப்பெண். மேலும் இருவரும் கலியாணமாகாத பையன்கள்; அவர்கள் வீட்டில் எப்படி எண்ணி இருக்கிருர்களோ! அது தெரியாமல் மேலே மேலே கோட்டை கட்டுகிறீர்கள்."

"வாஸ்தவம். யார் யாருக்கு எங்கே அதிர்ஷ்டம் இருக்கிறதோ? என்னமோ எனக்கும் உன் தங்கைக்கும் ஒரேமாதிரி எண்ணம் எழுந்ததால் பேச்சு வந்தது. இதற்கு முன் எங்கெங்கோ பார்த்தோம்; எத்தனையோ பெண்கள் வலுவில் வந்தன. நானும் பேசவில்லை. நீ கோர்ட்டுக்கு புறப்பட வில்லையா?"

"இல்லை, எனக்கொன்றும் இன்று கேஸ் இல்லை. நீங்கள் புறப்படும் நேரம் ஆகிவிட்டதா?"

"ஆமாம்."

நீதிபதி கோர்ட்டுக்குப் புறப்பட்ட பிறகு வீட்டில் அமைதி நிலவிற்று. ஒருவருக்கொருவர் காரணத்தோடும், காரணமில்லாம

னும் பேசிக் கொள்ளும் கீதாவும் மோகனனும் இன்று பேசிக் கொள்ளவில்லை. சமையல்காரன் இருவரையும் சாப்பிட அழைத்தும் இருவரும் தாமதம் செய்தனர். தனக்காக அண்ணா பரிந்து பேசாமல், தையாண்டி செய்தது அவளுக்குப் பிடிக்கவில்லை. யாரோ ஒரு பட்டிக் காட்டுப் பெண்ணைத் தன் தலையில் தந்தையும் மகளும் சுமத்த முயற்சி செய்தது மோகனுக்கும் பிடிக்கவில்லை. தமிழும் தமிழ்ப் பாட்டும் யாருக்கு வேண்டும்? அப்பாவைப்போல வயசானவர்களுக்கு வேண்டியதாக இருக்கலாம்! தன்போன்ற வாலிபன் விரும்புவது அழகும் நடை நொடி பாவனைகளும் நிறைந்த நாரீமணியல்லவா? அப்பாவுக்குத்தான் பத்தாம் பசலிக் கொள்கை என்றால், படித்துப் பட்டணத்து நாகரிகத்தில் மூழ்கிய இந்தத் தங்கையின் போக்கு இப்படி மாறுவானேன்? சுயநலம் தவிர வேறு என்ன? அந்த வேலய்யாவின் மீது தான் கொண்ட காதலுக்குக் குறுக்காக இருக்கும் அஞ்சலையைத் தன் தலையில் கட்டிவிட்டு, வேலய்யாவைத் தட்டிக் கொண்டுபோகச் செய்யும் சூழ்ச்சி. கீதா செய்கிற சூழ்ச்சிக்கு நாம் தானா அந்தப் பழியை ஏற்றுக் கொள்ள? இப்படித்தான் மோகன் மனம் வேலை செய்தது.

கீதாவின் மனசிலும் இதே போன்று பல சிந்தனைகள். அவள் அஞ்சலையையும் வேலய்யாவையும் காதலர்களாக எண்ணவில்லை. அவளுக்கு வேலய்யாவிடம் பற்று ஏற்பட்டது உண்மை; அஞ்சலையைப் பார்த்த உடன் தன் அண்ணனுக்கு அப்படி ஒரு பெண் கிடைக்க மாட்டாளா என்ற எண்ணமும் பிறந்தது. இந்த இரண்டு எண்ணங்களுக்கும் தொடர்பு காட்டிய அண்ணன் மீது அவளுக்கு கோபம் கோபமாக வந்தது. தன்னை ராவணனாக்கிக் கொண்டதோடு, தங்கையைச் சூர்ப்பனகை என்றானே. அவ்வளவு வெளிப்படையாக நடந்து கொண்டது பெண்மைக்கு இழுக்கான காரியமா? அல்லவே? தான் ஒன்றும் பித்துப் பிடித்த காரியம் செய்யவில்லை. இந்நாள்வரை ஏற்படாத சஞ்சலம், சலனம் தன் மனசில் ஏற்பட்டது வரை உண்மை. அஞ்சலையை யார் மணந்தாலும் சரி, அண்ணனுக்கு உதவிசெய்யத் தீர்மானித்த தன் புத்தியைச் சொல்ல வேண்டும்—இவ்வாறு கீதாவின் சிந்தனைக் கிளை வெடித்தது.

அண்ணன் தங்கை இருவரும் மாறுபட்ட பாதையில் சிந்திப்பதைத் தடுத்து மனம் விட்டுப் பேசிக் கலகலப்பு உண்டு பண்ணக்

கூடிய நபர், தாயார், இல்லாத குறையினால் இருவரும் தனித் தனியே இருந்தனர். ஒருவர் ஒருவரைப் பார்க்க இஷ்டப்படவும் இல்லை. சமையல்காரன் பாடு கஷ்டமாகவே, அவனும் தோட்டத் துக் கதவைத் திறந்து கொண்டு உட்கார்ந்துவிட்டான்.

சுவரில் கடிகாரம் மணியடித்துக் காலத்தை கடத்திக் கொண் டிருந்தது.

அன்று மாலை தமது கோர்ட்டு வேலைகளையும் நண்பர்களை யும் பார்த்துவிட்டு, வீட்டுக்கு வந்தார் நீலமேகம். கோவிலுக்குப் போய், பெருமாள் பிள்ளையையும் பார்த்துவிட்டு மகளோடு கடற் கரைப்பக்கம் போகும் எண்ணத்தோடு வந்தார். ஆனால் மகனையும் மகளையும் காணவில்லை.

" டேய், எங்கேடா இவங்களை ?'' என்றார்.

" ரெண்டுபேரும் வெளிப்பக்கம் போனாங்க; போகிற இடம் சொல்லவில்லை. ''

" எப்போ வருவாங்க ?''

" அதுவும் சொல்லலை.''

" ரெண்டு பேரும் சேர்ந்து போனாங்களா ?''

" இல்லை. முதல்லே தம்பி போச்சு. அப்பாலே சின்னம்மா போச்சு. ''

" வேறு யாராவது வந்தார்களா ?''

" இல்லே. கார்ப்பரேஷன் வரி வாங்கற ஆள் வந்தான்.''

" போடா போ அசமஞ்சம். வரியாள் வந்தானும் ?'' என்று எரிந்து விழுந்தார். மகனும் மகளும் இல்லாமல் தனியாக அவருக்கு வெளியே புறப்பட முடியவில்லை. சிறகில்லாத பறவை மாதிரி தவித்தார். ஏதேதோ புஸ்தகங்களை எடுத்துக் கொண்டு மொட்டை மாடிக்குப் போனார். இனி அவர் பாடு, புஸ்தகம் பாடு; கூப்பிட்ட குரலுக்கு 'ஏன்' என்றால் போதும் என்று சமையல் காரன் அடுப்பங்கரைக்குள் ஐக்கியமானான்.

" ஐயா இருக்கிறார்களா ?'' என்ற குரல் கேட்டது.

"போய்யா...போ. தர்மம் போட முடியாது.'' மீண்டும் குரல் வரவே சமையல்காரன் வெளியே வந்து தன் தவறு எவ்வளவு மகத்தானது என்றுணர்ந்தான்; கூனிக் குறுகி மன்னிப்புக் கேட்ட படியே "மாடியிலே இருக்கிறாங்க, வாங்க" என்று வழி காட்டினான்.

அப்பாவி பொன்னணைந்த பெருமாள் பின் தொடர்ந்தார். மாடியேறித் தன்னைக் காண வந்தவரை, அன்போடும் கௌரவத் தோடும் வரவேற்று, எழுந்து, இடம் கொடுத்துத் தாம் அமர்ந்தார் நீதிபதி.

"ஏது இப்படி வந்தது?"

"குழந்தைகள் கடற்கரைப் பக்கம் போகிறார்கள். வரும் போது அழைத்துக் கொள்வதாகச் சொன்னார்கள். நானும் தங்க ளோடு பேசிக் கொண்டிருக்கலாம் என்று வந்தேன். காரியமாக இருந்தால், போய்ப் பின்னர் வருகிறேன்."

"காரியம் ஒன்றுமில்லை. திருமூலரைப் புரட்டிக்கொண் டிருந்தேன். யார் யார் கடற்கரைக்குப் போகிறார்கள்?"

"உங்கள் பெண் கீதம்மா வந்திருந்தது. அஞ்சலை பட்டணம் சுற்றி பார்த்தவளல்ல. இருவரும் போயிருக்கிறார்கள். எனது சின்ன மருமகன் வேலய்யாவும் என் தங்கை காமாட்சியும் உடன் இருக்கிறார்கள். என்னைக் கூப்பிட்டார்கள். நான் இங்கே தங்கள் முன்னிருப்பதே கடற்கரையில் முருகப்பெருமாள் சந்நதியில் இருக் கிறமாதிரி என்றேன். வரும்போது இங்கே வந்து என்னைக் கூட்டிப் போவார்கள்" என்றார்.

தமது மகள் கீதா அங்கே போய் இருக்கிற விபரம் அறிந்து கொண்டார். நீலமேகம், தம் மகள் தத்துப் பித்தென தங்கள் பேச்சை யெல்லாம் கொட்டிவிடக் கூடாதே யென அவர் மூளையில் பட்டாலும் இனி வழியில்லை. இருவரும் கவிதையில் இறங்கினார்கள்.

திருமூலர் அவர்களுக்கு அநேக பாதைகளில் வழிகாட்டிக் கொண்டிருந்தார். இடையிடையே பெருமாள்பிள்ளை தமது மேற் கோள்களையும் வாரி இறைத்து ஆத்மாவின் கடைசி எல்லையையும் பிறப்பின் ரகஸியத்தையும் விளக்கினார். மனதிற்கும் காதுக்கும் இனிமையாக இருக்கவே, அதில் ரஸித்து மணிக்கணக்காக ஆழ்ந்துவிட்டார்கள்.

மீண்டும் மோட்டாரின் ஹாரன்; கலகலவென்று சிரிப்பும் கும்மாளமும் கேட்டபொதுதான் எங்கோ மாயா உலகில் சஞ்சரித்த இருவரும் பங்களாவிற்குள்ளும் நாற்காலிக்குள்ளு மாக வந்தனர்; எழுந்து மொட்டைமாடி வழியாகப் பார்த்தபோது,

மோட்டாரிலிருந்து கீதாவும் அஞ்சலையும் சரஸமாடிக் கொண்டு இறங்கினார்கள். அந்தக் காட்சி எத்தனை இனிமை தருவது!

அவர்கள் உள்ளம் இந்த உலகிலும் இன்பம் இருக்கிறது என்ற எண்ணத்தைக் காட்டிற்று.

"என்னதான் பற்றற்று ஞானியாகப் போய்விட்டாலும் குழந்தைகள் என்றால் அது தனியான இன்பம்."

"அதனால் தானே கடவுளையே குழந்தையாகப் பாவிக்கிறோம். முக்தி தரும் கடவுளைவிட, முத்தந்தரும் குமரனும் கண்ணனும் நமக்கு என்றும் இனிமையான பொருள்கள். பாருங்கள் தாலாட்டுப் பருவத்தை விளக்க வந்த பாடலொன்று .."

மேற்கொள் சொல்ல அவசியமில்லாமலே எல்லோரும் இரைச்சலும் கும்மாளமுமாக வீட்டுக்குள் பேசவே, இருவரும் மாடிப்படி இறங்கினார்கள்.

## 10. லக்ஷ ரூபாய்

அனலில் வாட்டி மணலில் செருகிய மாதிரி இருந்தது, ரங்கசாமியின் உள்ளம்.

"தம்பிக்கு வந்து சேரும் இன்ப பொக்கிஷங்கள் தன்னை வந்து அடையவில்லை; 'தான் ஒரு மனிதனை அவர்களுக்குப் படவில்லையா? அப்பாவி அஞ்சலைக்கூடத் தன்னை அருகதையற்றவன் என நினைக்கிறாளா? அன்று தம்பி திட்டியதற்காக அழுது பொருமியவள் இன்று டாக் டீக்கென அவனுடன் மோட்டாரிலே போகிறாள், கலங்கிய கண்ணோடு நின்ற அஞ்சலை கண்களில் ஆனந்தம் குமிழிவிடுகிறது. அவளுக்கு ஜோடியாக இந்தக் கீதாவும் வந்துவிட்டாள். அம்மாகூட, இரு பெண்களையும் மெச்சிக் கொண்டு போகிறாள். புறப்படும் சமயம், "ஏண்டா, நீயும் வயேன்" என்று அம்மா கூப்பிட்டார்கள். அது மேல் பேச்சாக வந்ததா? இல்லை, தாயின்பினால் விளைந்த சொல்லா? என் காரியத்தில் அத்தனை பேருக்கும் கவலையில்லை; தம்பி காரியத்திலே கப்பல். அவனுக்கு அடிக்கிற யோகம் இரட்டைக்கு அடிக்கிறது. போகட்டும், போகட்டும். இந்த ரங்கசாமி முட்டாள் அல்ல" என்று தன்னறைக்குள் உலாவிக் கொண்டே சற்று இரைந்து சொன்னான்.

அந்த வேளையில் அங்கே காலடி ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தால்......?

மிருதுலதா! சர்வாலங்கார பூஷிதையாய், மனமோக ரூபசுந்தரியாக நிற்கிறாள்.

திடுக்கிட்டான். வரவேற்றான். தனது பெருமை கனிந்த கண்களையும் முகத்தையும் அசட்டுத் தனமாக மாற்றி "வரலாம்" என்றான்.

"உங்கள் உடம்பு தேவலையா, மிஸ்டர் ரங்கசாமி? எப்படி இருக்கிறது?"

"என் மீது அக்கறை கொண்டு வந்திருந்தால் வெளியே நின்றபடி பேசவேண்டியதில்லை. உள்ளே வரலாம்; இல்லை என்றால் எல்லோரையும் போலத் தாங்களும் இந்த அநாதையை விட்டு விட்டுக் கடற்கரைக்கோ, சினிமாவுக்கோ, காட்சி சாலைக்கோ போகலாம்."

அழமாட்டாக் குறையாகப் பேசியதைக் கண்டதும் ரங்கசாமியின் வாலை உருவிவிடும் சந்தர்ப்பம் கிடைத்ததென நினைத்தாள் நடிகை. ஆனால் பெண்ணுக்கு இயல்பாக உள்ள சாகஸம் பிடிவாதம் இவைகளோடு சாதிக்க வேண்டும்.

"ஏன், மன வருத்தமா? உங்கள் அம்மா எங்கே?"

"எல்லோரும் தொலைந்து விட்டார்கள். இந்த வீட்டைக் கொள்ளையடித்துக் கொண்டு போனாலும் கேட்பார் இல்லை."

"நான் கொள்ளைக்காரியல்ல, மிஸ்டர் ரங்கசாமி. ஏன் இன்னும் உங்கள் உடம்பு..."

இடைமறித்து, "என் உடம்பு இருக்கட்டும்; தாங்கள் யாரைத் தேடி வந்தீர்கள்? தம்பியைத்தானே" என்றான் கோபமாக.

"ஏன் தங்களைப் பார்க்க வரக்கூடாதா?"

"பொய்."

"எது பொய்? தங்களைப் பார்க்கத்தான் வந்தேன்."

"வந்தால் நீங்கள் நேரடியாக வராமல் அங்கேயே நிற்கிறீர்களே."

"இல்லை" என்றவள் ரங்கசாமியின் அறைக்குள் வந்தாள். புயலடித்த கடலில் அமைதி ஏற்படுவது போல அவன் பேச்சின் வேகம் தணிந்தது. அமைதி பூர்வமாக இல்லை. தன் தம்பியைப்

பார்க்கவே வந்திருக்கிறாள்; மணவினை சம்மந்தமாக முடிவு கோர வந்திருக்கிறாள்; தம்பிக்கு எழுதிய அவள் கடிதம் சுருக்கென நினைவில் வந்தது. பிறகு கேட்கலாம் எனச் சமாளித்துக் கொண்டான். "காப்பி சாப்பிடலாமே?" என்று கேட்ட பிறகுதான், அவனுக்கு வீட்டில் வேலையாள் இல்லை யென்ற நினைப்பு வந்தது.

"சரி, சாப்பிடுகிறேன். எத்தனை கப்புக் கொடுப்பீர்கள்" என்று சிரித்தாள். அந்தக் கேலிச் சிரிப்பிலே சாயமேற்றிய பவள உதடுகள் பிளந்து நின்றன. ஈரம் தோய்ந்த இதழ்களிலே குறும்புத்தனம் கும்மாளமிட்டது. கண்களிலே திருட்டுத்தனம் பாய்வதையும் கண்டான்.

"மன்னிக்கவும். வேலைக்காரன் எங்கோ போய் இருக்கிறான். வந்ததும் ஓட்டலிலிருந்து வரவழைக்கிறேன். அம்மா கூட அதுகளோடு புறப்பட்டுவிட்டாள். சை." என்று நொந்து கொண்டான்.

"அதை நினைத்துத் தான் தைரியமாகக் காப்பி கேட்டேன். வருத்தப்படவேண்டாம். ஏதாவது காரியமாகப் போய் இருக்கிறார்களோ?" என்று நோட்டம் பார்த்தாள்.

"யாரோ கீதாவாம், அது வந்து கடற்கரைக்கு இழுத்துக் கொண்டு போயிற்று."

"கீதா யார்?"

"சப்ஜட்ஜு நீலமேகம் என்பதாக இருக்கிறாராம், அவர் மகளாம் அந்தக் கீதா."

"ஓகோ, உங்கள் தம்பி எங்கே?"

"அவன் பேச்சே வேண்டாம். நீ மூன்றுவது பேர்வழி" என்று சொல்லிவிட்டு மென்று முழுங்கினான்.

"நான் என்ன...மூன்றும் வழி. எனக்குப், புரியும்படி சொல்லுங்கள்" என்று காதில் விழுந்தும் விழாதவள் போன்று கேட்டாள். மிருதுலதாவுக்கு, கீதாவின் தன்மை, அழகுவெள்ளம், போக்கு எல்லாம் கேட்க ஆசை. எரிகிற கொள்ளியில் எண்ணெய் விட்ட கதையாக இருக்கும் விபரத்தைச் சாகஸமாகப் பேசிப் புரிந்துகொள்ளத் திட்டமிட்டாள்.

"உங்களுக்குத் தெரியுமோ?" என்றாரம்பித்தாள்.

"என்ன?"

"உங்கள் தம்பியை ரிவால்வரினால் நான் பயங்காட்டிய போது, வியர்த்து விறுவிறுத்துப் போய்விட்டார்.

"அப்படியா? மிருதுலதா, நிஜமாகச் சொல்கிறேன். என்னை அவசரப் புத்திக்காரன் என்று நினைத்தாலும் நினைத்துக் கொள். என் மனம் மிகவும் நொந்துவிட்டது. என் புத்தி பேதலித்து நான் தற்கொலை செய்து கொண்டாலும் ஆச்சர்யப்பட மாட்டாய்."

"தற்கொலையா? அது பேடிகள் செய்ய வேண்டிய காரியம்."

"இல்லை. என் கண் முன்பாகவே நான் ஒரு பிச்சைக் காரனிலும் கேவலமாக நடத்தப்படுகிறேன். என்னைப் புறக் கணித்தே யாரும் நடத்துகிறார்கள். இதை முதன் முதலாக நீதான் ஆரம்பித்தாய். அந்தப் பெருமை உனக்கே..."

பேசுகிற பேச்சிலே உண்மை இருந்ததோடு அதுபோகும் எல்லை தனக்கு ஆபத்தாக வரலாம் என்ற எச்சரிக்கையும் இருக்கவே மிருதுலதா மெதுவாக, "என்ன மிஸ்டர் ரங்கசாமி என்னை அப்படியா எண்ணிவிட்டீர்கள்?" என்று தொட்டுத் தட்டிக் கொடுத்தாள். ஜ்வர வேகத்தில் நெருப்பிட்ட நெஞ்சத்துக்கு, ஐஸ் கட்டி வைத்தது போலிருந்தது அவளுடைய ஸ்பரிச சுகம். அவள் தொட்ட இடம் மட்டுமா? உச்சி முதல் உள்ளங்கால் வரை அந்தக் குது குதுப்பு கன வேகமாக அலை பாய்ந்தது.

தன்னை அன்புடன் தட்டிக் கொடுக்க, ஆதரவும் தர ஒரு பெண் இருக்கிறாளா? அதுவும் மிருதுலதாவா அப்படிச் செய்கிறது? உருண்டு, திரண்டு புதுமையும் பொலிவும் நிறைந்த கரங்களால் அல்லவா மெத்தெனத் தட்டிக் கொடுக்கிறாள். எவ்வளவு தாழ்வாக அவளை நினைத்துவிட்டோம் என்ற பச்சாதாபம் மேலோங்கி நின்றது.

"மிருதுலதா!"

வாய் திறந்து ரங்கசாமி சொல்லவில்லை. இன்ப எக்களிப்பு கண்டத்திலே வந்து கற்கண்டுக் கட்டிபோல, வரவர கரைகிறது மெல்ல மெல்ல இனிக்கிற மாதிரியும் உணர்ச்சி கொடுக்கிறது. அந்தச் சொல்லை இனிமை தோயத் தோயச் சொன்னான். ரங்க சாமியின் உள்ளமும் உடலும் இனி அவள் சொல்கிற பேச்சுக்குத் தாளமிடும் நிலைக்கு வந்துவிட்டன. எது சொன்னாலும் சரி யென்

பதைத் தவிரத் தானுக யோசிக்கும் பக்குவம் தவறிவிட்டதை உணர்ந்துகொண்டாள்.

"உண்மையாகச் சொல்லுகிறேன். உங்கள் தம்பியிடம் நான் எதிர்பார்த்தது லக்ஷ ரூபாய். தாங்கள் நினைத்தது போல அவரையல்ல..."

"என்னைப் பிச்சைக்காரனுக நிறுத்திவிட்டாய்?"

" அல்ல, அவரே சகல வரவு செலவுகளையும் மேற்பார்வை யிடுகிருர்; அவர் நினைத்தால் பணம் பெற முடியும். அதனுல் அவ ரிடம் கேட்டேன்."

" அவனை மணப்பதாகச் சொல்லவில்லையா?"

" யார் சொன்னது?"

" கடிதத்தில் திருமணத்தைப்பற்றி நேரில் சொல்லுவதாக எழுதியிருந்தாயே, அதிலே தங்கள் அன்புள்ள என்பதை எழு திப் பிறகு அடித்தும் இருந்தாய்."

" ஓகோ, அக்கடிதம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?"

" கிடைத்தது. என் கை வசமே இருக்கிறது, மிருதுலதா."

" அவர்தான் என்னை மணஞ்செய்து கொள்ளும்படி வேண் டினுர்."

" என்ன?"

மீண்டும் மிருதுலதா தன் பவளவாய் திறந்து சொன்னதைச் சொன்னுள். ரங்கசாமிக்கு அந்தச் சொல் இடியோசை போலக் கேட்டது.

"உன்னை மணக்க வேண்டுமென்ருனு? அப்படிக் கேட்டானு?"

"ஏன் பதறுகிறீர்கள்? அவர் தரவேண்டிய லக்ஷ ரூபாய் மட் டும் எனக்குக் கிடைத்திருந்தால் நான் அந்தக் கடிதம் எழுத வேண்டியதில்லை."

" எழுதியதற்காக இப்போது வருந்துகிருயா?'

" இல்லை. அவர் தருகின்ற பணந்தான் என்னுடைய கௌர வத்தை நிலை நிறுத்த வேண்டும். என்னுடைய பட முதலாளியின் ஏமாற்றுக்கு நான் ஆளாகாமல் கட்டிய பங்களாவும் ஏலத்தில் போகாமல் நான் நல்வாழ்வு வாழ முடியும். என்னைப் பல பத்தி ரிகைகளும் கைவிடும் நிலைமை அடைந்துவிட்டால், என் வாழ்வே அஸ்தமன சூரியன் ஆகிவிடும். நட்சத்திர வானத்திலிருந்து

வழுக்கிவிட்டால் அப்புறம் ஒளி தெறிப்பது முடியாமலே போய் விடலாம்.''

அவள் குரல் அழுகை கலந்து வந்தது. நடுத்தெருவில் நிற்கும் நிலைவந்து விட்ட மாதிரி முகம் காட்டிற்று. ரங்கசாமியின் துவண்ட இதயத்திற்குப் பற்றுக் கோலாக வந்த அவளையும் விட்டுவிட மனமில்லை.

''நான் தருகிறேன். நீ கடனைக் கொடுத்துவிட்டு இந்த நடிப் புக்கே தலைமுழுகிவிட்டால் என்ன?''

''பார்த்தீர்களா? உங்கள் தம்பிக்கும் உங்களுக்கும் எவ்வளவு வித்தியாசம்?'' என்றதும் தன் அவசரப்புத்திக்காக உடம்பை வளைத்துக் கையை சொடுக்கினாள். ''ஒன்றுமில்லை, அவர் நான் நடிகையாகவே காலந்தள்ள வேண்டுமென்றார். மேலும் மேலும் லக்ஷாப லக்ஷம் சம்பாதிக்கலாம் என்றார். தாங்கள் எதிர்மாறாக இருக்கிறீர்கள்'' என்றாள். சொல்வதை யெல்லாம் நம்பும்படியும், பிறர் மனம் இளகும்படியும் சொன்னாள். மனம் கசிந்துவிட்ட பின்பு கசப்பிற்கும் இனிப்பிற்கும் எல்லையேது? பாகுபாடே தெரியாதே.

''உன்னிஷ்டம். ஆனால் மிருதுலதா—அந்தப் பயல் என்னிடம் நாடகமல்லவா ஆடி இருக்கிறான்? உன்னை நான் மணக்கக்கூடா தென்று புத்தி சொல்லி என்னிடம் வாதாடினான்.''

''ஓகோ'' குறும்புத்தனமாக இதழ்க் கோணம் விரியச் சிரித்தாள்.

''நான் அவன் கன்னத்தில் கொடுத்தேன்.''

''இப்படியா?'' என்று விளையாட்டாகத் தட்டிக் காண்பித் தாள். அவள் கரத்தின் சுகம் அடிப்பதாக இல்லை. பூப்பந்து கொண்டு ஒத்தடம் கொடுப்பதாகப் பட்டது. மிருதுலதா விரித்த மாய வலையிலே சிலந்தி வலைப்பட்ட ஆகாரம்போன்று தன் வசம் இழந்தான்.

''பணம் நான் தந்துவிட்டால் அவனை நீ மணக்கமாட்டாய், மேலும்...'' என்று சொல்லி வந்தவன் நிறுத்தினான்.

''என்னமோ ஒளிக்கிறீர்கள்?''

''அவனைச்சுற்றி அஞ்சலையும் கீதாவும் இருக்கிறபோது உன்னை லட்சியம் செய்யமாட்டான்.''

"பந்தயம் போடட்டுமா? இந்த மிருதுலதா அவரை மணப்ப தெனத் தீர்மானித்து விட்டால்..."

"ஐயோ...என் நெஞ்சு வெடித்துவிடும். அதை மட்டும் என் காது கேட்கச் சொல்லாதே. நீ என்னுடையவள். நான் உன்னு டையவன். நம்மை யார் வந்தாலும் பிரிக்க முடியாது. எமன் வந் தால்கூட முடியாது."

"உங்கள் வாக்குப் பலிக்க வேண்டும். நான் உங்களைப் பார்த்து விட்டு உங்கள் தம்பியிடம் பணமும் கேட்டு விட்டுப் போக லாம் என்று வந்தேன்."

"பணம் நான் தந்துவிட்டால் அவனிடம் நீ பேச வேண்டிய தில்லை."

"தங்களிடம் பணம் இருக்கிறதா?"

"என்னை அன்னக்காவடி என்று எண்ணிவிட்டாய்? நானும் இந்தச் சொத்துக்குச் சரி பாதி பங்கு உள்ளவன். என் பங்கு எவ் வளவு என நினைத்தாய்? உனக்காக லட்சம் எனக்கு லக்ஷிய மில்லை."

"சந்தோஷம். என்றைக்கு நான் பார்க்க முடியும்?"

"என்றைக்கு வேண்டும் பணம்?"

"நாளை என் பங்களாவிற்கு வாருங்கள்" என்று எழ முயன்ற தும் தோள்பட்டையைப் பிடித்து உட்காரும்படி சொன்னான் ரங்க சாமி. தனக்குள் அடக்கமாகிவிட்டதாக எண்ணி அப்படிச் செய் தான். எண்ணெய்க் குடத்தைச் சுற்றிய எறும்பின் கதியென எண்ணாமல் அப்படிச் செய்தான். மிருதுலதா, "ஆஹா. அவசியம் வாருங்கள். ஆனால் நமக்குள் நடந்த பேச்சை வெளியே விட்டுவிட வேண்டாம் என்று உங்களுக்கு நான் புத்தி சொல்வது மந்திரிக்கு ராஜா புத்தி சொன்னது மாதிரிதான்" என்று எச்சரிக்கையும் விடுத்தாள்.

"போகலாமே. இருந்து போகிறது. தோட்டத்துப் பக்கம் போகலாம்" என்றான்.

"இல்லை, இன்னொரு நாள் வருகிறேன்."

தன் தம்பியும் அஞ்சலையும் நின்றதுபோல, கீதாவும் தம்பியும் பரிகாசமாகப் பேசிக் கொண்டதுபோல, அந்தத் தோட்டத்திற் குள் தானும் மிருதுலதாவுடன் சுற்ற ஆசைப்பட்டான். ஆசையின்

எல்லை எந்த முடிவை நாடும் என்பதை அறியாதவளா மிருதுலதா? ஒரு நாள் கூத்துக்கு மீசை எடுத்த கதையாக முடிந்துவிடக் கூடாது'' என்று எச்சரிக்கையாக இருந்தவள், "இன்னொரு சமயம் வருகிறேன்'' என்று எழுந்தாள். விடை பெற்ற மிருதுலதாவின் கரங்களைப் பிடித்தபடியே விட்டுவிட மனமின்றி நின்றான்.

"சார், இதுதான் மிஸ்டர் வேலைய்யா பங்களாவா? வேலைய்யா இருக்கிறாரா?'' என்று கேட்டுக் கொண்டே யாரோ வர, இருவரும் நாகரிகமான தூரத்தில் நின்றனர்.

"யாரைப் பார்க்கிறீர்கள்.''

"இங்குதானே ஸ்ரீமான் பொன்னணைந்த பெருமாள் இருக்கிறார்?''

"ஆமாம். இங்கேதான் யாரைப் பார்க்க வேண்டும்?''

"நான்தான் மிஸ்டர் நீலமேகத்தின் குமாரன்.''

"நீதிபதியின் பிள்ளையா? உங்கள் பெயர்...''

"மோகனரங்கம்.''

"கேள்விப்பட்டிருக்கிறேன். கிரிமினல் கேஸில் உங்கள் சாமர்த்தியம் பிரபலமடைகிறது. அந்த மோகனரங்கம் தாங்கள் தானா? இப்படி அமருங்கள்.''

"இவர்தான்...''

"அவர்கள் புகழ் உலகெங்கும் பரவி இருக்கிறது. நடிகை மிருதுலதாவின் புகழ் பரவாத இடம் உண்டா?'' என்று வக்கீல் மோகனரங்கம் புகழ்ந்தார். பரஸ்பரம் இருவரும் வணக்கம் தெரிவித்தனர்.

"தாங்கள்தான் வேலைய்யாவா?''

"இல்லை. அவன் சகோதரன். என் பெயர் ரங்கசாமி. என்ன விஷயம்?''

"சும்மாப் பார்த்துப் போகலாமென்று வந்தேன். தாங்கள் பேசிக் கொண்டிருங்கள், நான் இன்னொருமுறை வருகிறேன்.''

"தம்பி வந்து விடுவான். உங்கள் தங்கையின் பெயர் கீதா தானே? இங்கே வந்திருந்தாள். எல்லோரும் கடற்கரைக்குப் போய் இருக்கிறார்கள்.''

"ஓகோ, சரிதான். நான் வருகிறேன்'' என்று மோகனன் எழுந்தான்.

"எனது காரில் கொண்டு வந்து விடுகிறேன். நானும் புறப்பட்டு விட்டேன்" என்று தானும் நழுவச் சமயம் பார்த்தாள். மூன்றும் நபர் துணை இருக்கும் வரை தனக்கு ஆபத்து இல்லை. தன் சாகஸம் வெற்றி தரும் என்று அறிவாள் மிருதுலதா. நடிகையுடன் போவது தனக்கு அவ்வளவு ஏற்றதல்ல என்று நினைத்த மோகனன் அதைத் தட்டிக் கழிக்கவும் நினைத்தான்.

அந்தச் சமயம், "நாம் எல்லோருமே கடற்கரைக்குப் போகலாம்" என்று ரங்கசாமி சொல்ல, அவர்கள் இருவருக்கும் எதுவும் சொல்ல முடியாது போய்விட்டது. ஆபத்திற்குப் பாவம் இல்லையென மோகனனும் அவர்களோடு புறப்பட்டான். மூவரைத் தாங்கிய மோட்டார் அன்னமென அசைந்தாடி, சர்ரென வெளியே கிளம்பிற்று.

அந்தப் பங்களாவில், காவல்காரனைத் தவிர யாரும் இல்லை.

## 11. கடலும் காட்சியும்

சென்னைக் கடற்கரையின் அழகும், ஆனந்த வெள்ளத்திலே நீந்திச் செல்லும் மக்களின் மனோபாவமும், இனிய காற்றின் இங்கித ஸ்பரிசமும் அநுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். பார்த்துப் பார்த்துப் பழகிப் போய்விட்டாலும், நிலையின்றிக் கண்ணுக்கு எட்டிய நிலப்பரப்பிலே வெண்ணிற அலைகள் மேயும் அழகை மட்டும் பார்த்தால், பால்மாருத குழந்தையின் சிரிப்பைப் போல மாருத கவர்ச்சித்தரும். புதிதாகப் பார்க்கும் நிலை ஏற்பட்டால், அதுவும் வயதும் வாலிபமும் நிறைந்த பருவத்துள்ளோர் வானையும் கடலலையையும் சன சமுத்திரத்தையும் பார்த்துவிட்டால், எங்கோ இன்ப லோகத்திற்கே மிதந்து செல்லும் உணர்ச்சியை அடைவார்கள்.

பட்டிக் காட்டிலே பழகிய அஞ்சலை கண்ணுக்கினிய அந்தக் கடலையும், கடற்கரையோரமாகக் கைக் கோத்துச் செல்லும் தாம்பத்ய ஜோடிகளையும், நூதன நூதனமாக உடையணிந்து செல்லும் கல்லூரி மாணவ கோஷ்டிகளையும் கண்டபோது, அவளுக்குப் பட்டணத்திலும் இன்பம் இருக்கிறது. சுறு சுறுப்பிலும் ஜனக் கூட்டத்திலும் கவர்ச்சி இருக்கிறது, கிராமத்துத் தோப்புக்கும்

சிற்ருேடையின் சலசலப்புக்கும் அப்பாலும் தனி இன்பம் உண்டு என்றெல்லாம் உவகை உண்டாயிற்று. தன்னருகே உள்ளே கீதாவிடம் கட்டிடங்களையும், கண் கவர் நாகரிக மோஸ்தர் உடை நடை ஒய்யாரிகளையும் விவரமாக அறிந்து கொண்டாள்.

மோட்டாரை ஒரு பக்கமாக நிறுத்திவிட்டு எல்லோரும் நடக்க ஆரம்பித்தார்கள். தாயிடம் தாவி ஓட நினைக்கும் குழந்தைபோல அஞ்சலை தண்ணீரைப் போய் மிதிக்க வேகமாக நடந்தாள். மணலில் நடப்பது புதிதாக இருந்ததால் அவள் நடை தத்தக்க பித்தக்க நடைபோல் இருந்தது. நாகரிகமாகவும் ஒய்யாரமாகவும் ஒயிலாகவும் கீதாவும் வேலையாவும் நடந்தனர்.

"உங்கள் மைத்துனி கடலே பார்த்ததில்லையோ ?"

"இருக்கலாம்."

"பாருங்கள், அஞ்சலை ஓடுவதைப் பார்த்து அக்கம் பக்கம் எல்லாம் சிரிக்கிருர்கள்."

"பட்டணத்தில் சிரிப்பதற்கும் அழுவதற்கும் அர்த்தமே கிடையாது."

"அதென்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள் ?"

"அழுவதற்கான சமயம் சிரிப்பவர்களும், சிரிக்க வேண்டிய சமயம் அழுகிறவர்களும் உண்டு. இங்கே எல்லாம் போலி, வெளி வேஷம்."

"நீங்கள் சொல்லும் 'எல்லாம்' என்பதை மறுக்கிறேன். சில பகுதி போலி, வெளிவேஷம். இதை நான் ஒப்புக்

"இங்கே தம்பதிகளாக இல்லாமலே சிரித்து விளையாடுகிறவர்களும் இருக்கிருர்கள். தம்பதிகளாக அழுதுகொண்டு இருக்கிறவர்களும் இருக்கிருர்கள்."

"உங்கள் பேச்சின் நயம் புரிகிறது. என் சிந்தனைக்கு அப்பாற்பட்ட காரியங்களையும் பேசுகிறீர்கள்."

அவர்கள் நிதானமாகவும் தமாஷாகவும் சிரித்துப் பேசிக்கொண்டு போவதைக் கண்டால், கலியாணமான தம்பதிகள் என்று சொல்லுவார்கள். பட்டணத்து நாகரிகத்தின் வெற்றி ரகஸியம் தெரிந்தவர்கள் காதலர்கள் என்ருல் கலியாணமாகவில்லை யென்பார்கள். அவர்கள் பட்டும் படாமலும் பேசிக்கொண்டுவருகிருர்கள்.

அஞ்சலையின் ரஸிக உள்ளமும் குதூகலமும், துள்ளலாகவும், அலைகளோடு ஓடியாடும் விளையாட்டாகவும் பிரதிபலித்தன.

மாலை வெயிலின் மயக்கமும் கீழ்த்திசை நிலவின் ஒளியும் சந்திக்கும் பொழுதிலே கருமை கலந்த போர்வை எங்கும் கவிந்தது. மங்கிய அப்பொழுதிலே நீலக்கடலின் கோஷம் மட்டும் கேட்டது. வரவர எல்லையற்ற விஸ்தீரணத்திலே வெள்ளியை உருக்கி எங்கும் வடிகாலாக்கி விட வந்தது போல நிலவும் தலை நீட்டிற்று. அஞ்சலை, நிலவை மரக்கட்டைகளிடையே, பசிய வயல்களுக்கு அப்பால் பார்த்திருக்கிறாள். சலனமிடும் நீர்பரப்புக்கு அப்பால் உள்ளும் புறமுமாக வெள்ளியின் ஜகஜ்ஜோதியைப் பார்த்தவள் அல்ல. நிலவின் குளுமையும் காந்தியும் படுகின்ற பொருள்களுக்கு ஒப்பாகக் காட்சிலும் மாறுதல் தருகிறதென உணர்ந்தாள்.

அவளுடைய குழந்தைத் தனமான விளையாட்டை ரஸித்தபடியே மணலில் கீதாவும் வேலைய்யாவும் அமர்ந்தபோதுதான் எல்லோருக்கும் காமாட்சியம்மாள் பின் தங்கிவிட்ட நினைப்பு வந்தது. காமாட்சியம்மாள் மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தாள். தன் தாயை மறந்து கீதாவுடன் விரைவாக வந்து விட்ட வேலைய்யாவின் வெட்கமும் ,அஞ்சலையையும் காமாட்சியம்மாளையும் மறந்து தனியாக வந்த கீதாவின் நாணமும் சந்தித்தன.

அஞ்சலை அலைகளின் நுரைகளை மிதித்து விளையாடித் தன் சந்தோஷத்தைத் தெரிவிக்கப் பின்னால் திரும்பியபோது, தன் அத்தை பக்கத்தில் வருவதைக் கண்டாள். மணலில் உட்கார்ந்திருந்தவர்களைத் தாண்டி அவள் அஞ்சலை பக்கம் வரவே "ஏனம்மா இப்படி உட்காரலாமே. உன் மருமகள் மாதிரி நீயும் ஈரமணலில் போய் நிற்கிறே." என்று வேலைய்யா சொன்னான்.

கீதாவுக்கும் ஏதாவது சொல்லி, காமாட்சியைத் தங்கள் பக்கம் இழுக்க வேண்டும் என்ற நினைப்பு வந்தாலும், வார்த்தை வரவில்லை. சந்தோஷமாக உட்கார்ந்து விட்டவர்கள் பக்கம் கர்நாடகமாகக் குறுக்கிட விரும்பாமல் தனியாக நின்ற அஞ்சலைக்குப் பேச்சுத் துணையாக வந்து நின்றாள் காமாட்சியம்மாள்.

கடலின் அழகையும் ஆனந்தத்தையும் பற்றி அத்தையிடம் அஞ்சலை பேசினாள். பேசினாள், பேசினாள், அப்படிப் பேசினாள்.

காமாட்சியம்மாள் மனசிலே கடலும் காட்சியும் நிற்கவில்லை. தனது இருபுத்திர பாக்கியங்களுக்கும் அருமைஅருமையாக மனைவி கிடைத்து விட்ட பெரு மகிழ்ச்சியால் ஆழ்ந்து விட்டாள். தன் மனசை அன்று வெளிப்படையாக யாரிடமும் சொல்ல முடியாமல் உள்ளூற அடக்கிக் கொண்டாள்.

"அத்தே, இந்தக் கடலும் அலையும் காற்றும் எங்கள் பட்டிக் காட்டிலே ஏது?"

"நம்ம என்றே சொல்லம்மா. நீ வளர்ந்த வீட்டிலேதான் நானும் வளர்ந்தேன். தோப்பும் வயலும் தவிர அங்கே இதெல் லாம் ஏது?"

"எனக்கு இந்தக் கடலைப் பார்த்த பிறகு இந்தப் பட்டணத் திலேயே இருக்கணும், இந்தக் கடலுக்கு வரணும் தினம் தினம் சந்தோஷமாய் பொழுது போக்கணும் என்று தோன்றுகிறது."

"ஆண்டவன் அப்படி நல்ல வழியை விடுவார். வா, இப்படி. கொஞ்சம் நடந்து போகலாம்" என்று மருமகளைத் தன் இடத்தை விட்டு இழுத்துக் கொண்டு போனாள். கீதாவும் வேலையாவும் குஷியாகப் பேசிக் கொண்டிருப்பதைத் தடுக்காமலும், அஞ்சலை மனசிலே தன்னைப்பற்றிய நினைப்பு வராமல் இருக்கவும் அப்படிச் செய்தாள்.

அங்கங்கே இளம் உள்ளங்கள் ஒன்றுக்கொன்று முகவிலாசத் தோடும் மன விலாசத்தோடும் பறிமாறிக் கொண்டு இருப்பதை அஞ்சலை கண்டாள். அவள் மனம் தானும் அப்படி இருந்து பேசும் நாளை எதிர் பார்த்தது. அடுத்த கணம், 'தனக்கு எதிராக அமர்ந்து தன் முகத்தைப் பார்த்துக் கொண்டு இருக்கப் போகிற வர் யார்?' என்ற கேள்வி எழவே, வேலையாவும் கீதாவும் தங் களை மறந்து உட்கார்ந்து பேசுவதைத் திரும்பிப் பார்த்தாள். இனி தன் எண்ணம் வேலு அத்தான்மீது பயன்படாது. கீதா வந்து பிடித்துக் கொண்டாள். பெரிய அத்தானாவது நிராகரிக்காமல் ஏற்றுக் கொள்வாரா? சிந்தனை மனசிலே அலைபுரள, அவளுக் கிருந்த குஷி நடை தள்ளாடியது.

ஆனால் ரங்கசாமி மனசிலே என்னென்ன கற்பனைகள் அலை மோதிக் கொண்டிருந்தன? ரங்கசாமி தங்கள் மோட்டார் நிறுத்தப் பட்டிருப்பதை, மிருதுலதாவின் காரில் வரும்போது பார்த்தான்.

அவன் பார்க்க வேண்டுமென்பதற்காக தனது மோட்டாரைத் தொலைவில் நிறுத்தி, நிறுத்தி, மெதுவாக ஓட்டி வந்தாள்.

"உங்கள் கார் வந்திருக்கிறதே!"

"ஆமாம். அம்மாவும் அஞ்சலையும் வந்துள்ளார்கள். நாம் இங்கே நிறுத்த வேண்டாம். இன்னும் தள்ளிப் போகலாம்."

"இல்லை. சும்மா நிற்கட்டும்" என்று பத்து மோட்டார் தள்ளிக் கொண்டுபோய் நிறுத்தினாள். அவளுடைய கூரிய பார்வை, வேலையையாவும் அவனுடைய சூழ்நிலையும் எங்கேயென வட்டமிட்டது. தம்பியின் மேல் அண்ணன் அருவையப் பட வேண்டும் என்ற பாடத்தை அவள் அக்ஷராப்பியாஸம் செய்து வைக்கத்தான் வந்தது. நல்ல காலமாக, புத்திசாலி வக்கீல் மோகனரங்கம் இறங்கிப் போய்விட்டதும் அவளுக்குச் சாதகமாக இருந்தது.

ரங்கசாமி கூட்டத்தை விலக்கித் தனிமையை விரும்பினான்.

மிருதுலதா தனிமையை விலக்கிக் கூட்டத்தை விரும்பினாள்.

இருவர் உள்ளங்களிலும் தனித்தனி ஆசைகள் அலைமோதிக் கொண்டிருந்தன.

அவள் செய்ய நினைத்த சாகஸங்களில் பாதியை கடலுக்கு மேலாக எழுந்து வந்த தகத்தகாயமான நிலவே செய்துவிட்டது. அழகுக்கு அடிமையாகித் தன் அறிவை இழக்கும் நிலையை அடைந்தான் ரங்கசாமி.

பாசம், குடும்பம், தம்பி என்பன வெல்லாம் அர்த்தமற்றன வாகவும், மிருதுலதாவின் பேச்சே, செயலே, சிந்தனையே அர்த்த புஷ்டி நிறைந்தனவாகவும் இருந்தன. மனம் எப்படி, மதி அப்படி என்ற போக்காக அவள் கரைக்கும் வழியிலே ரங்கசாமியின் உள்ளம் கரைந்து கொண்டிருந்தது. இடையிடையே தன்னை விடக் கீதா அழகி யென்றும் சொல்லுவாள்.

"மிருதுலதா, இனி அந்தக் கீதாவின் பேச்சே எடுக்காதே" என்பான்.

"அதோ உற்றுப் பாருங்கள். என்னைப் போன்றவர்களைத் தான் நடியென்றும் நாகரிகம் கெட்டவர்கள் என்றும் உலகம் தூற்றுகிறது. அந்தக் கீதாவின் உடம்பிலே மேலாடை இருக்கிறதோ இல்லையோ என்றபடி வந்து விட்டாளே."

"அவள் நாசமாப் போகட்டும். வா. நாம் பங்களாவிற்குப் போகலாம்."

"உங்கள் தாயாரையும் அசட்டு அஞ்சலையையும் எங்கேயோ விட்டுவிட்டு இந்தக் காதலர்கள் தனிமையாக வந்துவிட்டார்கள்."

"தொலையட்டும். நமக்கென்ன?"

"எதிலுமே உங்கள் தம்பியின் சாமார்த்தியம் தனி."

"உனக்குத் தம்பியைப் புகழாமல் தூக்கம் வராது"

"இல்லை, உண்மையாகச் சொல்லுங்கள், மிஸ்டர் ரங்கசாமி. இந்தக் கீதாவே உங்களை மயக்க வந்தால், இந்த மிருதுலதா வேண்டாமெனத்தானே சொல்லுவீர்கள்."

"இரண்டும் நடக்காத காரியங்கள்."

"நடப்பதாக இருந்தால்?"

"மிருது...என்ன மிருதுவான கைகள்...என் ஆயுள் இந்தக் கைக்குத்தானே..."

"சத்தியம் செய்வதில் ஆண்கள் வல்லவர்கள்."

"மீறுவதிலும் அவர்களே வல்லவர்கள் என்கிறாயா? பெண்கள் உன் மனசுப்படி எப்படிப்பட்டவர்கள், அடி என் மிருதுவே?"

"பெண்கள் சத்தியம் செய்வதும் இல்லை, மீறுவதற்குச் சந்தர்ப்பமும் இல்லை."

"செய்யும் சந்தர்ப்பம் நேர்ந்தால்?"

"மீற மாட்டார்கள்."

"அப்படியானால் நீ எனக்குச் சத்தியம் செய்து கொடுக்க முடியுமா?"

"எதுபற்றி"

"நமது விவாகத்தைப் பற்றி."

"வாக்குக் கொடுத்துவிட்டால் மீற முடியாதே."

"கொடுத்து விடு. மீறினாலும் நான் வருத்தப்படமாட்டேன்."

"என்னையும் உங்கள் தம்பியைப்போல இடத்துக்குத் தகுந்த வேஷம் போடுகிற பேர்வழியாக நினைக்க வேண்டாம்" என்று கோபமாகச் சொன்னாள். அதாவது நடித்தாள்.

"என்ன சொன்னான்? எதை மீறினான்?"

"என்னை மணப்பதாகச் சொன்னார், எனக்கு லக்ஷ ரூபாய் ஆபத்துக்குத் தருவதாகச் சொன்னார். இரண்டையும் மீறிவிட்டார்

தம்பியைப் போலத்தான் அண்ணனும் இருப்பது உலகத்தில் சகஜம்'' என்று கண் சிமிட்டினாள் கிண்டலாக.

"உன் உலகத்தில் அப்படி, என் உலகத்தில் அப்படியல்ல. சொல்லும் செயலும் ஒன்றே. நீ விரும்பிய இரண்டையுமே நான் முடித்து விடுகிறேன்.''

''பணந்தானே! அது யாரும் எனக்காகக் கூடைகூடை யாகக் கொட்டிக்கொண்டு நிற்கிறார்கள் என்பதை அறிவேன். ஆனா லும் என்னைப் பழி செய்ய நினைத்தவரை'' என்றவள் குரலிலே குழைவுக்குப் பின் கோபம் ஊற்றெடுக்க, "மன்னிக்கவும் ரங்கம். உங்கள் தம்பியாக இருந்தாலும் அவர் எனக்கு விரோதி. பழிக்குப் பழி வாங்காமல் நான் விடப்போவதில்லை.''

''அவன் யாரோ! என் காதலியின் விரோதி, எனது விரோதி. என் காதலியின் பழிவாங்கு படலத்தில் எனக்குப் பங்குகொடுக்கா விட்டால் அப்போது எனக்கு கோபம் வந்தால் ஆச்சர்யப்பட வேண்டாம்.''

''பாரதியார் பாடினாரே, 'வாய்ச் சொல்லில் வீரரடி' என்ப தாக, அப்படித்தானே, தாங்கள் பேசும் பேச்சு?''

அவளுடைய மெல்லிய விரல்களைப் பிடித்துக் கொண்டான் ரங்கசாமி. எது பேசுகிறோம், எங்கே இருக்கிறோம், என்ற சுய நினைவு தாண்டிய இன்பப் போதை உலகத்தில் அவன் இருந்தான். குடிவெறியல்ல, அதனினும் கொடிய காமவெறி.

''ஐயோ, கையை விடுங்கள்! இது பரந்த வெளி'' என்று சிரித் தாள். பெண்ணின் நெளிந்த சிரிப்புத்தானே மனுஷனைப் பலஹீனப்படுத்தும் பெரிய அணுகுண்டு!''

''நிஜமாகச் சொல், அந்தக் கீதாவையே வைத்த கண் வாங் காது நீயேன் பார்க்கிறாய்?''

''நாளை நமது வாழ்க்கையில் குறுக்கிடுவாள். உங்களுக்குப் பெண் கொடுக்கத்தான் நீதிபதி நீலமேகம் நினைக்கிறார்.''

''இந்த க்ஷணமே அவள் கழுத்தைத் திருகி எறியச் சொன் னாலும் நான் செய்துவிட்டு வருகிறேன்.''

''ஐயோ, பெண் பாவம் பொல்லாதது. வேண்டாம். நீங்கள் நினைக்கிறபடி உங்கள் தம்பியும் நினைத்தால் உலகம் எவ்வளவு இனிமையாக இருக்கும்?''

"பெண்ணே. உன்னைக் காதலிப்பதாகவும் லக்ஷ ரூபாய் தருவதாகவும் சொன்னானா? அஞ்சலைக்குத் துணிமணிஎடுத்துக்கொடுத்து அவள் அன்பையும் கவர்ந்து கொண்டான். அவளைப் போட்டோப் பிடிப்பதாகச் சொல்லி, சினிமா காட்சியைவிட மட்டரகமான கோணத்தில் படம் எடுத்திருக்கிறான். இன்று என்னடா என்றால், மூன்றாவது நபர். இதோ கீதா வந்து சிக்கிக்கொண்டாள்."

" இத்தனைக்கும் காரணம் என்னவென யோசித்தீர்களா ?"

"பெண்களுடைய அறியாமையைப் பெண்கள்தான் சொல்லக் கூடும் " என்று சிரித்தான். தான் மடக்கிப் பேசிவிட்டதாக நினைத்தான் ரங்கசாமி.

" உங்களைவிட அழகில் பெரியவரல்ல; அவர் கையில் பணம் இருக்கிறது. அதை ஆளும் உரிமை இருக்கிறது. அது தான் காரணம். பணந்தானே, உலகத்தின் ஆக்கத்திற்கும் அழிவிற்கும் மூல காரணம் ?"

தம்பியின் செல்வாக்கு, எதனால் வளர்கிறது? அவன் கையில் பண அதிகாரம் இருப்பது காரணமா? இப்படி ஒரு கணம் யோசனை; அந்தச் சமயம் மிருதுலதா எது சொன்னாலும் ஆராய்ச்சிக்கும் அறிவுக்கும் வேலையில்லாமலே முடிவுக்கு வந்து விடுகிற பரிபக்குவ நிலையல்லவா?

"வாஸ்தவம் மிருது! நீ சொல்லுகிறபடி வீட்டுக்கு எஜமான் என்ற திமிர் அவன் சொல்லிலும் செயலிலும் இருக்கிறது. அதனால் தான் எல்லோரும் அப்படி நடக்கிறார்கள். ஒன்று நான் அந்த இடத்தைப் பிடித்துக் கொள்ள வேண்டும், அல்லது பாகப்பிரிவினை செய்ய வேண்டும்."

" இவ்வளவு விரைவாக இப்படிப்பட்ட முடிவுக்கு வந்து விட்டீர்கள்? நாலுபேர் என்ன சொல்லுவார்கள் ?"

" நாலுபேரைத் தூக்கி உடைப்பில் போடு! நான் என்ன நினைக்கிறேன். அதுதான் என்வரை முக்கியம். நிச்சயம், நாளை முதல் என் குணமே தனி." ரங்கசாமிதானா என்று ஆச்சர்யப் படும்படி காரியங்கள் நிகழப்போகின்றன. இது உண்மை என்று ஆவேசம் வந்து கத்தினான்.

தன் மனசிற்குள்ளாக அமைந்துவிட்ட பாத்திரத்திற்குக் கையிலுள்ள களிமண்ணை உருவாக்குவது போல, மிருதுலதா ரங்க

சாமியை ஆக்கும் சக்தி பெற்று விட்டாள். அவள் செய்ய நினைக்கின்ற எந்தச் செயலுக்கும் அவன் இனி களிமண்போல மாறக் கூடிய பச்சைக் குழந்தையாகப் போய்விட்டான். பதம் கெட்டு உருவமாக்குவதற்கு லாயக்கற்றதாகப் போய்விடாதபடி அன்றைய சாகஸத்தை அதோடு நிறுத்திக் கொண்டு " எனக்கு ஸ்டுடியோவுக்குப் போக வேண்டும். வாருங்கள் உங்களை வீட்டில் இறக்கிவிட்டு விடுகிறேன். நான் பிறகு போகிறேன் " என்றாள்.

" நிஜமாக என்னை வீட்டில் விட்டுப் போகிறாயா? நான் ஒரு விநாடியும் தனிமையில் துடிதுடித்துச் சாகமுடியாது."

அவன் கண்கள் சிவந்திருந்தன. முகத்திலே ரத்தம் பாய்ந்து துடிதுடிப்பை உணர்த்திற்று. எதிர்பார்த்த இரை தன்னிடமிருந்து தப்பிச் செல்வதைக் கண்ட புலியின் உறுமலைப் போலாகி குரலில் கரகரப்பு இருந்தது. மிருதுலதா புரியாதவள் அன்று. எரிகிற தீயை ஏற்றுத் தள்ளும் கலை நன்கு தெரிந்தவள்.

" ஆம். எனக்கு நான்கு தினங்களுக்குள் ஒரு லக்ஷ ரூபாய் கொடுத்து விடுவீர்கள். எனக்குள்ள ஆபத்து நீங்கிவிடும், இதற்காக நான் யாரையும் போய்க் கெஞ்ச வேண்டாம்."

" வேண்டாம், நான் பொறுப்பாளி."

" சரி, வாருங்கள், போவோம். இந்த நிலவையும் நிலவு தோய்ந்த கடலையும் மறந்து நாம் போக வேண்டியதிருக்கிறது."

" ஒளியின் பெருமை இருளில்தான் அதிகம். இருளின் சக்தி இருக்கிறதே இது மகத்தானது. ஒளியில் இருக்கும்போது இருளுக்கும், இருளில் இருக்கும்போது ஒளிக்கும் தாவும் மனம்."

" ஆஹா. உங்களைப் போன்றவர்கள் வசனகர்த்தாவாக இருந்தால், எவ்வளவு ரஸமாக இருக்கும்."

" இந்தக் கற்பனைக்கு மிருதுலதா நீயே காரணம்! வசனகர்த்தா ஒவ்வொருவருக்கும் ஒரு மிருதுலதா ஏற்பட்டால் ?"

" பேஷ். பேஷ். அவசியம், எனது முதல் படத்திற்கு உங்களையே வசனகர்த்தா ஆக்கி விடுகிறேன்."

" அதுவரை நான் உன்னிடம் பாடங்கள் படித்துக் கொண்டிருக்க வேண்டுமென்கிறாயா? முக்கியமாக இராப்பாடம் ?" என்றவன் அசடு தெரிக்கப் பல் சுடர் விடச் சிரித்தான்.

இப்படி வேடிக்கையாகப் பேசியவர்கள், காருக்கு வந்தார்கள். "நீங்களே ஓட்டுங்கள். நான் ஏறிக் கொள்ளுகிறேன்" என்று அருகாக அமர்ந்தாள். வேறு வழியின்றி விளையாட்டுக்கும், கைசேஷ்டைக்கும் இடமின்றிக் காரை ஓட்டும் பொறுப்பை யேற்று ரங்கசாமி ஓட்ட ஆரம்பித்தான். முன் ஜாக்கிரதையாக ஓய்வு பெற்றுக் கொண்ட மிருதுலதா, ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு வந்தாள்.

"உங்கள் பங்களாவிற்குப் போங்கள், தேனும்பேட்டைக்கு."

"நான்..."

அவன் பேச்சுக்கு இடங்கொடுக்காமல் தேனும்பேட்டைக்குத் திருப்பினாள். கார் போய்க் கொண்டிருந்தது.

"எனக்கு இரண்டு நாள் ஷூட்டிங், என்னைப் பார்க்க முடியாது. நாலுநாள் சென்ற பிறகு சந்திப்போமே."

"நாலுநாள்? நான் உயிரோடு இருக்க முடியுமா?"

"உங்களுக்கு வயசு என்ன தொண்ணூறும் பத்தும் ஆகி விட்டதா?"

"என் மனசின் வேதனையை நீ புரிந்துகொள்ளவில்லை."

"நீங்களே என்னைப்பற்றி இப்படி நினைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. கிணற்று வெள்ளம் வீணாவதில்லை என்று கேள்விப் பட்டிருப்பீர்கள். மேலும், நாலுபேர் அறிய நாம் விவாகமானவர்கள் என்று தெரிய வேண்டாமா? ஏது இப்படிப் பச்சையாகப் பேசுகிறேனே என்று நினைத்தாலும் நினைத்துக் கொள்ளுங்கள். பெண்ணுக்குள்ள ஒரே சொத்து அவள் வாழ்க்கை. அதை வீணாக்கும் முன்னதாக யோசனை வேண்டும்" என்று பிடி கொடாமல் பேசினாள்.

தனது பிடிவாதம் அதற்கு மேலாக அர்த்தமற்றது என்று உணர்ந்து கொண்டு சும்மா இருந்தான் ரங்கசாமி.

தேனும்பேட்டையில், அவர்கள் பங்களா முன்பாகக் கார் வந்து நின்றது. வீட்டிற்குள் யாரும் வரவில்லை யென்பதை எரிந்த விளக்குகள் மூலமாக அறிந்து கொண்டான். விடைபெற்றுக் கொண்ட மிருதுலதா காரில் மின்னல்போல மறைந்து விட்டாள். அவன் மனசிலே இருள் கவிந்திருந்தது. உடலிலே பசி—இரு பசியும்—கிள்ளிக் கொண்டிருந்தது.

" உனக்கு ஆகாரம் போடுவதற்கு யாருமில்லை, நீ அநாதை, உன்னை யார் சிந்துவார்கள் ?" என்று அவன் மனம் தம்பட்ட மடித்தது.

ஒரு ரூபாயைத் தூக்கி எறிந்து தனக்கு ஆகாரம் வாங்கி வரும் படி கட்டளையிட்டவன் தன் கட்டிலில் வந்து படுத்தான். கடற்கரை யில் தன் அருகாக மிருதுலதா இருந்து வேதனை தந்ததைவிட, அவள் நினைவு அதிகமாக வேதனைகள் தந்தன.

" வரட்டும் வரட்டும். எல்லோரும் வரட்டும். இன்று ஒரு வழி செய்கிறேன் " என்று திட்டமிட்டுக் கொண்டான்.

இரவு பதினொரு மணிக்கு மேலாகத்தான் எல்லோரும் வந்தார்கள். தம்பி, அஞ்சலை, தாயார், மாமன் எல்லோரும் சிரித் துக் கொண்டே வந்தார்கள்.

## 12. உறவாடிக் கெடு

நமது முன்னோர்கள் ஆபத்சகாயமாக எத்தனையோ பொன் மொழிகள் சொல்லிப் போயிருக்கிறார்கள். அதிலே தலைசிறந்த தாக, ரங்கசாமிக்குப் பட்டது. 'பகையாளிக் குடியை உறவாடிக் கெடு' என்றதாகும். அதனால் ஆத்திரத்தையும் வர்மத்தையும் விழுங்கிக் கொண்டு, சிறிது சமாளிக்க முயன்றான். தன் மகன் போக்கில் நல்ல மாறுதல் ஏற்பட்டிருப்பதைக் கண்டு தாயார் பூரித்துப் போனாள்.

பெரிய அத்தான் சிரித்துப் பேசியதில் அஞ்சலைகூடக் குளிர்ந்து போனாள். அவள் தகப்பனார்கூட அப்படித்தான் இருந்தார்.

ஆனால், பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும், வேலைய்யா இதை நல்ல மாறுதலாகக் கொள்ளவில்லை. தோட்டக்காரன் மூலமாகத் தாங்கள் இல்லாத சமயம் மிருதுலதா வந்துபோன விபரம் அறிந்தான். பின்னர் கடற்கரையில் அவர்கள் இருந்த விபரமும் அறிந்தான். அண்ணன் போக்கில் ஏதோ பெரிய சூது இருக்கிற தென முடிவு செய்தாலும் வெளியே சொல்லவில்லை.

வீட்டில் கலகலப்பு இருந்த சமயம், கீதா வந்தாள். அவளோடு கலகலவென்ற சிரிப்பு வந்தது. அடக்கமோ நாணமோ மருந்துக்குக்கூட இல்லாமல் விளையாட்டுத்தனமே உருவாகக்

கொண்ட கீதா, "அஞ்சலை, அஞ்சலை" என்று கத்தினள். வீட்டிலுள்ளோர் எல்லோரும் அவளை வரவேற்றூர்கள்.

அவளுக்குப் பின்னல் மோகனரங்கம் இறங்கி வந்தான். அவனைப் பார்த்த பெருமாள்பிள்ளை மரியாதையாக வரவேற்றூர். உள்ளே வந்து அமர்ந்தான். அண்ணனுக்கும் தங்கைக்கும் உள்ள சண்டை தகப்பனரால் தீர்த்து வைக்கப்பட்டு முக்கிய அலுவல்களை முடித்துக்கொண்டு வரும்படி அனுப்பியிருந்தார்.

அவர்கள் அஞ்சலையைப் பெண் கேட்க வந்திருந்தார்கள். கீதாவின் குரல் கேட்டு முயல் குட்டி போல அஞ்சலை எட்டிப் பார்த்தாலும், அந்நிய வாலிபனைக் கண்டதும் தலையைக் கதவுக்கு அப்பால் இழுத்துக் கொண்டாள். கதவு இடுக்கு வழியாகத் தெரியும் பெண்ணினத்துக் கவர்ச்சி, மேகத்துக்குள் எட்டிப் பார்க்கும் நிலவைவிட பிரமானந்தம் தருவதல்லவா? அப்படித் தான் மோகனரங்கத்திற்குத் தோற்றியது. அவன் தகப்பனரே சிபார்சு செய்தார். தனக்கு அப்படிப்பட்ட மருமகள் கிடைப்பதே மகனைப் பெற்ற பாக்கியம் என்றும் சொன்னதைக் காதாரக் கேட்டபிறகு, ஆசை யாரைவிட்டது. புறப்பட்டு வந்து விட்டார்கள்.

கீதா ஒளிப்பு மறைப்பு இல்லாமல், "அம்மா, காமாட்சியம்மா!" என்று சொல்லியவள் சட்டென உதட்டைக் கடித்துக் கொண்டாள். தனக்கு மாமியாராக வரப்போகிறவளை பெயர் சொல்லி அழைத்ததன் தவறு தெரிந்தது. காமாட்சியம்மாள் அதைக் குற்றமாக நினைக்கவில்லை.

"என்னம்மா கீதா, இது உன் தலைமயனர்தானே" என்றாள்.

"ஆமாம் நாங்கள் முக்கிய காரணமாக வந்திருக்கிறோம். சொல்லுங்கள் அண்ணச்சி. கோர்ட்டிலே வாய்வீச்சு வீசுகிறீர்களே. வாதிக்காகவும் பிரதிவாதிக்காகவும் தொண்டைக் கிழிய வாதுசெய்கிறீர்கள். இங்கே உங்கள் கேஸைச் சொல்லுங்கள். நீங்கள் வாதி; 'பிரதிவாதியார்?" என்று குறும்புத்தனமாக அஞ்சலை நின்ற பக்கம் பார்த்தாள். எல்லோருக்கும் சுலபமாகப் புரிந்துவிட்டது. இந்தக் காட்சியை அவரவர்கள் அறைக்குள்ளிருந்து அண்ணனும் தம்பியும்கூடபார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ரங்கசாமி, கீதாவின் துணிச்சலை வியந்து கொண்டிருந்த சமயம், வேலைய்யா கீதாவின் சாமர்த்தியத்தை வியந்தான்.

பெருமாள்பிள்ளைக்கு எதிர்பாராத அதிர்ச்சியாக இருந்தது. தமது மகள் அந்தஸ்துள்ள உயர் குடும்பத்திற்குப் போகவும் முடியு மா? நீதிபதியின் வீடு, அது வீடா? பங்களா. படிப்பும் போக போக் கியமும் இருக்கிற இடம். தாம் ஒரு அப்பாவி, கிராமாந்தரம் என்ற வாழ்வு மனப்பான்மையில் தமது மருமகனுக வரப் போகிறவரைப் பயபக்தியோடு பார்த்தார். அஞ்சலைக்குக் கண்ணைக் கட்டிக் காட் டில் விட்டமாதிரி இருந்தது. அவள் வெளியே வராமல் அடுக்களைப் பக்கம் போய்விட்டாள்.

"என்ன சொல்கிறீர்கள், அம்மா" என்ருள் கீதா.

"யார் யாருக்கு எப்படி முடி போட்டிருக்கிறதோ அப்படித் தான் அம்மா. இதோ! அவள் அப்பா இருக்கிருர்கள். உங்கள் அப்பாவும் யோசிக்கவேண்டும். எல்லோரும் சற்று யோசிக்க அவகாசம் வேண்டாமா?" என்ருன்.

"அப்பா சம்மதித்துவிட்டார்கள். அண்ணச்சிக்குப் பெண் ணைப் பிடிக்க வேண்டும். அஞ்சலைக்கு மனம் இருக்க வேண்டும்" என்று இருகட்சிக்கும் பொதுவாகப் பேசினுள்.

மோகனரங்கம் ஒன்றும் பேசவில்லை. அவன் மௌனத்திற்குக் குரல் கொடுக்கிறவள் போல, "நான் உள்ளே போய் அழைத்து வருகிறேன்" என்று உட்பக்கம் போனுள். அவள் உள்ளே போன சமயம், மிரள மிரள நடுக்காட்டிலே திக்குத் தெரியாமல் தவிக்கும் இளமான் போல அஞ்சலை நிற்பதைக் கண்டாள். அதிலே ஒரு தனியழகும் இன்பமும் இருப்பதை உணர்ந்தாள். புஷ்பத்திற்கு மென்மையும் ஸௌகுமார்யம் குழைவும் தானே அழகு தருகிறவை? புஷ்பம் குச்சி போல வளைவின்றி நிமிர்ந்துவிட்டால் அழகேது? தன்னிடம் இல்லாதகவர்ச்சியும் நளினமும் அவளிடம் இருப்பதைக் கீதா உணர முடிந்தது.

அவள் அருகாகப் போய், "அஞ்சலை. நீ மனம் நொந்தால் அங்கே வரவேண்டாம். உன் மனம் இஷ்டப்படாவிட்டால் நாங்கள் போய்விடுகிரேம்" என்ருள். அஞ்சலை பதில் சொல்லவில்லை. நாணிக்கோணிக்கொண்டு வந்து நடைப்பக்கமாக நின்றவள் தன் பின்னலை சீண்டிக்கொண்டு நின்ருள். அவள் கீழே விழுந்தால் தாங்கிக் கொள்ள நிற்கும் சேடியாகக் போலக் கீதாவும் நின்ருள்.

கடைக்கண்ணால் மோகனரங்கம் பார்த்துக் கொண்டான். அஞ்சலை தலை நிமிரவே யில்லை. எவரும் பேசாதிருக்கவே மௌனம் நிலவிற்று.

''அஞ்சலை எல்லோருக்கும் காபி கொண்டுவா!'' என்றார் தந்தை.

''என்ன அண்ணாச்சி. அவள் எதற்குத் கொண்டுவர வேண்டும்? சமையல்காரப் பொன்னம்மாள்தான் வந்து விட்டாளே. அவளை நான் கொண்டுவரச் சொல்லறேன்.'' என்று தங்கள் வீட்டு அந்தஸ்தையும், நிலைமையையும் காப்பாற்றிக் கொண்டாள் காமாட்சியம்மாள்.

கீதாவின் கண்ணோட்டம் சுற்றும் முற்றும் போய் வேலைய்யா வின் அறைக்குள் கவிந்தது. எல்லாரையும் தாண்டி அங்கே போய் நிற்க ஆசை வந்தாலும் கால் தள்ளாடியது. அஞ்சலையை வேடிக்கையாகப் பிடித்துக்கொண்டு ''உன் சின்ன அத்தான் என்ன சொல்லுகிறார்கள்? வா பார்க்கலாம்'' என்றாள் கீதா.

இருவரும் அங்கிருந்து உட்பக்கமாக நகர்ந்தார்கள்.

ரங்கசாமி தன்னறைக்குள்ளிருந்து வந்து, "வரணும் வரணும் வக்கீல் சார். வரணும்'' என்று வரவேற்றான். இருவரையும் பெரு மாள்பிள்ளை அறிமுகம் செய்ய முயன்றபோது அவர் பேச்சை ரங்கசாமி பவ்வியமாக பக்தி சிரத்தையுடன் கேட்டுக்கொண்டது தான் ஆச்சரியம்.

''ஓகோ. இவர் பெண் பார்க்க வந்தது பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம்'' என்றான் ரங்கசாமி.

''ஆமாம் அப்பாவும் முடிவு சொல்லிவிட்டார்கள்,'' என்றான் மோகன்.

''நாலைந்து நாட்களுக்கு முன்பு நீங்கள் வந்த நோக்கமே இதுதானா?'' என்று முதுகைக் கொடுத்துச் சிரித்தான் ரங்கசாமி. பதிலுக்கு அசட்டுச் சிரிப்பு வந்தது.

"பேஷ். இங்கே மாமா அவர்கள் மனமும் திருப்தியென்றே தெரிகிறது'' ரங்கசாமி ஆழம் பார்க்கிறான்.

"விதி எப்படியோ மருமகப்பிள்ளை."

''விதி இருக்கிறது மாமா. ஆனால் நீங்கள் அப்பன் முருகப் பெருமான் கிருபை என்றல்லவா சொல்லுவீர்கள்'' என்று அவன் சொல்லி முடிக்குமுன், அவரும் அதையே சொன்னார்.

"ஏன்மாமா?" என்று வம்புக்கு இழுத்தான் ரங்கசாமி.

"என்ன மாப்பிள்ளை. என்றார் பெரியவர்.

"சே. சே. இனிமேல் உங்கள் வீட்டு மாப்பிள்ளை சாட்சாத் இவர்தான். எம்.ஏ. எம்.எல். நாளை நீதிபதியாக-ஹைகோர்ட்டுக்கு நீதிபதியாக வரப் போகிற மாப்பிள்ளை இதோ இருக்கிறார். என்னைப் போய் மாப்பிள்ளை என்றால் தகுமா? என்னை மண்ணாங் கட்டி யென்றால் நியாயம், மாமா?" என்றான். பாதி கிருத்தரமம், பாதி கிண்டல்.

"இருக்கட்டுமே. என் பெண்ணைக் கட்டினால்தான் நீங்க மாப்பிள்ளையா? என் தங்கை மகன் எனக்கு மருமகன்தானே."

"உங்கள் மனம் போல இருக்கட்டும். நான் மருமகன் ஒப்புக் கொள்கிறேன். இந்த மருமகனைக் கேட்கிறேன்."

"கேளு, ரங்கா?"

"நீங்களும், இவர்கள் அப்பாவும் உங்களுக்குள்ளே பேசி முடித்து விட்டீர்கள்?"

"அந்தப் பேச்சே வரவில்லை."

"மனசுக்குள்ளே இருவருக்கும் சம்மதம் இருக்கிறது"

"அதுகூட இல்லை. நான் இதைஎதிர்பார்க்கவே இல்லை" என்று அதிசயப்பட்டார் பொன்னணைந்த பெருமாள்.

மாமனிடமிருந்து திரும்பிய ரங்கசாமி "அப்படியானால், ஏன் மோகனரங்கம், எல்லாம் உங்கள் தங்கையம்மா கீதா ஏற்பாடு தானே? அடடா தங்கை என்றால் இப்படியல்லவா தங்கை இருக்க வேணும்?" என்று வஞ்சகப் புகழ்ச்சியாகச் சொன்னான்.

"உங்கள் மனம் என்ன?" என்று மோகனைக் கேட்டார் பெருமாள்பிள்ளை. வெளிப்படையாக அவர் கேட்டதை மனசிற்குள் போற்றினாலும், வெளிப்படையாகப் பதில் சொல்ல முடியவில்லை.

"அப்பா அவர்கள் முடிவு என்னவோ அப்படித்தான் எனக்கும்."

"உங்கள் தங்கை ஏற்பாடு வெகு பேஷ். பேஷோ பேஷ்! இங்கே தங்கைக்குக் கல்யாணம்; அங்கே அஞ்சலைக்குக் கல்யாணம்! பரஸ்பரம் முடித்துக் கொள்ள ஏற்பாடு. இதிலே யாருடைய யோசனையை நீங்கள் எதிர்பார்க்க வேண்டும்? ஏன் மாமா அப்

படித்தானே ?'' என்றான். ரங்கசாமியின் பேச்சைப் புரிந்து கொண்டாள் தாய். மகனுக்கு இதில் ஏதோ மனக்கசப்பு இருக்கிற தென்பதை யூகித்தவள், "ரங்கா ரங்கா, இங்கே வா'' என்று அழைக்கவே, "அம்மா கூப்பிடுகிறாள், இதோ வருகிறேன்'' என்று எழுந்து போனான்.

பெருமாள் பிள்ளையும், மோகன ரங்கமும் ஒருவர் முகத்தைப் பார்க்காதபோது ஒருவர் பார்க்கிறதும். பார்த்தபோது குனிந்து கொள்ளுவதுமாக இருந்தனர். உள்ளே தாய்க்கும் மகனுக்கும் ஏதோ பேச்சுவார்த்தை கசமுசவெனக் கேட்டாலும், அது என்ன வெனப் புரியவில்லை.

காமாட்சியம்மாள், "டேய்! அஞ்சலை கல்யாணம் எல்லோ ருடைய சம்மதத்தையும் பொறுத்து நடக்கக் கூடியது. நீ ஏதா வது கோபமாய்த் திட்டிவிடாதே. அவர்கள் நமது அஞ்சலைக்காக வந்தவர்கள் மட்டுமல்ல. உன் தம்பியின் சம்பந்திமார்கள்'' என்று சிக்கறுத்து விஷயத்தைத் தெளிவு செய்து விட்டாள்.

"ஆமாம்மா. தம்பிக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டதா?''

"ஆனமாதிரிதான். கீதாவுக்கும் அவனைப் பிடித்திருக்கிறது. அவனுக்கும் கீதாவைப் பிடித்திருக்கிறது. உன் மனந்தான் கடல் ஆழம்போலத் தெரியாததாக இருக்கிறது. மற்றது அப்புறம் பேசிக் கொள்வோம். அவர்களிடம் எதையாவது கோபமாகச் சொல்லிவிடாதே'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

பகையாளியின் குடியை உறவாடியே கெடுக்கத் திட்டமிட்ட வன் மீண்டும் கோபத்தை விட்டு விட்டுச் சிரித்த முகத்தோடு ஹாலுக்குள் வந்தமர்ந்தான்.

"உங்கள் தம்பி, உங்கள் தாயார் எல்லோரும் அன்று நம் முடைய பங்களாவிற்கு வந்திருந்தார்களாம். மேலும்...'' என்று மோகனரங்கம் பேச்சை ஆரம்பித்தான்.

திடீரென்று மிகவும் உரிமையுடன் "டேய் வேலு வேலைய்யா'' என்று உரத்த குரலில் அன்போடு கூப்பிட்டான் ரங்கசாமி. இது நாள்வரை கூப்பிட்ட குரலே அன்று இது. வீட்டிலே எல்லோருக் கும் அந்த இனிசான குரல் அதிசயமாக இருந்தது. குரோதத்தை யும், கொதிப்பையும் மறந்து அன்பு கனியக் கூப்பிட்டதை யார் எதிர்பார்க்க முடியும்? மாற்றார்கள் முன்னிலையில் தங்கள் குட்டுத்

தெரியாமல் இருக்க "என்ன அண்ணாச்சி" என்று பயபக்தியுடன் வேலய்யா வந்து விட்டான்.

"உட்காரு. உட்காரு. இவர்கள் யார் தெரியுமா? இதுதான் நம்முடைய தம்பி. வீட்டு நிர்வாகம் முழுவதும் அவருடையது. நமக்குக் காலணா வேண்டுமென்றாலும் நான் இவரைத்தான் கேட்க வேண்டும். இவர்களைத் தெரியுமா உனக்கு? நீதிபதி நீலமேகம் அவர்களுடைய புத்திரர்..."

"எங்களுக்குள் பரிச்சயம் உண்டு அண்ணாச்சி."

"என்ன காரியமாக வந்துள்ளார்கள் என்பதும்..."

"இப்போதுதான் சொன்னாள் கீதா."

"உனக்கும் தெரிந்துவிட்டதா? இந்த வீட்டுக்குப் பெயரளவில் நான் அண்ணன், மற்றபடி இவர்தான் வீட்டுக்கு நிர்வாகி சார்." என்று குத்தலும் வேடிக்கையுமாகப் பேசினான் ரங்கசாமி.

பின்னர், இரண்டு மணி நேரம் சென்றதும் கீதாவும் அவள் தமையன் மோகனரங்கமும் வந்த காரிலே போய்ச் சேர்ந்தார்கள்; வண்டி நகர்ந்ததும் அவர்களுக்குள் பேச்சு ஆரம்பித்தது.

"என்ன அண்ணாச்சி இந்தச் சூர்ப்பனகை சொன்னது எப்படி என்று கேட்கிறேன்?" எனச் சிரித்தாள்.

"விளையாட்டுப் போதும். எனக்கென்னவோ, அந்த ரங்கசாமியின் முகத்தைப் பார்த்தது முதல் பிடிக்கவில்லை.

"அட, அண்ணா, நான் கேட்டது யார்? அஞ்சலையம்மாவைப் பற்றி கேட்டேன்."

"அவன் ஒரு வெறியன்."

"உங்களுக்குக் கொள்ளைக்காரர்கள் கேசுக்குப் போய் அவர்கள் நினைவும் முகமுமே மனசில் நிற்கிறது."

"இல்லை ரங்கசாமிக்கு இந்த ஏற்பாடு பிடிக்கவில்லை."

"யார் சொன்னது? நீயாகக் கற்பனை செய்தது; கோபித்துக் கொள்வது; ஆதாரம் இல்லாதது."

தங்கையின் பேச்சில் உண்மை படிந்திருப்பதாக எண்ண ஆரம்பித்தான்.

மோகன், "எனக்கும் அப்படித்தான் படுகிறது. அஞ்சலையை மணக்க ரங்கசாமிக்கு இஷ்டம் இருந்தால், அந்தப் பெண்ணின் வாழ்வை நாம் கெடுக்கலாமா?" என்றான்.

"இல்லையண்ணா" என்றவள் சிறிது மௌனம் சாதித்தாள். விபரம் தூண்டிக் கேட்கவே "நம் அப்பாகூட ஆக்ஷேபனை செய்ய லாம். மிருதுலதா என்பதாக ஒரு நடிகை இருக்கிறாளாமே. அவள் என் ஓர்ப்படியாக வரப்போகிறாளாம். இதைக் கேட்டால் அப்பா, இந்தக் குடும்பத்துச் சம்பந்தமே வேண்டாமென்றாலும் ஆச்சர்யப் படவேண்டாம்."

"ரங்கசாமி, மிருதுலதாவை மணக்கப் போகிறதாக யார் சொன்னது?"

"ஒரு காலணாப் பத்திரிகையில் இந்த விபரம் வந்திருக்கிறதாம்."

"இந்த நாளில் காலித்தனமாக என்னென்னவோ ஒருவர் வாழ்க்கையைப் பற்றிப் பத்திரிகையில் எழுதிவிடுகிறார்கள். நீ அதைப் படித்ததோடு நம்பவும் செய்கிறாய்."

"நான் சொல்வது பொய், அந்த வீட்டம்மாளே, தாயாரே சொன்னார்கள், பெரியமகன் விருப்பப்படி யாரை வேண்டுமானாலும் மணந்து கொள்ளட்டும் என்பதாக."

"இல்லை, அஞ்சலையை, தான் மணக்க வேண்டும் என்று ரங்கசாமி நினைக்கலாம் அல்லது நான் மணக்கக் கூடாது என்றாவது நினைக்கலாம்."

"வக்கீலாக மாறிவிட்டால் தன் கட்சியைவிட எதிர்க் கட்சியை நினைப்பதே சுபாவம் ஆகிவிடும். எதிலும் சந்தேகந்தான் வளரும். நமது பேச்சு இருக்கட்டும். எது நடக்கப் போகிறது? பார்க்க லாம்; உனக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறதென தெரிந்துவிட் டது. இனி நான் பார்த்துக் கொள்ளுகிறேன்."

"பிறருக்கு உதவி செய்யப் போய், உன் நிலைமையை விட்டு விடாதே" என்று விளையாட்டுக்குச் சொன்னான். மோகனரங்கம்.

அவர்கள் இருவரும் ஒருமனப்பட்டு வந்து, மாறுபட்ட அபிப் பிராயங்களோடு போய்ச் சேர்ந்தார்கள். மாறுபட்ட அபிப்பிரா யங்கள் உள்ள ரங்கசாமி குடும்பத்திற்குள், ஒருமனப்பட்ட அபிப்பிராயம் வளர்ந்ததுதான் எல்லோருக்கும் வியப்பாக இருந்தது.

"ரங்கசாமி, நீ என்ன நினைக்கிறாய்? அஞ்சலையைப் பெண் கேட்கிறார்களே? ஏனம்மா காமாட்சி, உன் எண்ணம் என்ன?"

என்று பெருமாள்பிள்ளை தவித்தார். அவருக்குக் கிடைத்தற்கரிய சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திவிட ஆசை.

"ஏன் மாமா. நிறையப் படித்தவர்களுக்கும், உங்களைப் போன்ற பத்தாம் பசலிக்கும் ஒத்துப் போகுமா?" என்றான் ரங்கசாமி.

" நமக்கென்னடா, அஞ்சலையின் சாமர்த்தியம் எப்படியோ? எனக்குத் தெரிந்தவரை, நீலமேகம் பிள்ளைவாள் ரொம்ப கண்ணியமானவர், அடக்க ஒடுக்கம்; பயபக்தியை விரும்புகிறவர்."

"உங்கள் மனம் சரியாகிவிட்டால், அப்பால் மகளும் 'ஆமாம் அப்பா ததாஸ்து' என்று ஒத்துப் பாடுகிறாள். நீங்கள் பட்டணத்திற்கு வந்த முகூர்த்தம் நல்ல முகூர்த்தம். பிள்ளையார் உங்கள் விஷயத்தில் விசேஷ சலுகை காட்டியிருக்கிறார். பக்திமான்கள் நம்பிக்கை என்றைக்கும் கெட்டுப் போவதில்லை. வளர்பிறையாகிறது " என்றான்.

' ஏண்டாப்பா, என்னைக் கண்டால் சிரிப்பாகத்தான் இருக்கும். உங்களைப் போன்ற பட்டணத்தின் நாகரிகம் பகட்டு என்னிடம் இல்லை. உன் வாக்குப் பலித்தால் சரி." என்று அலுப்பாகச் சொல்லவே, தன் தமையன் மன வருத்தப் படக்கூடாது என்ற நோக்கத்தோடு "ரங்கன் விளையாட்டுப்பிள்ளை. நீங்கள் அவன் பேச்சை அப்படியே அர்த்தப்படுத்திக் கொள்ளாதீர்கள், அண்ணேச்சி" என்று ஆறுதலாக மொழிந்தாள் காமாட்சியம்மாள்.

எதிர் ஹாலில் அஞ்சலையின் படம் மாட்டப்பட்டிருந்தது. அவள் வெகு அழகாக அலங்காரம் செய்திருந்தாள். அத்தோடு புஷ்பக் கொத்துப் பறிக்கும் பாவனையில் கண்ணும் உதடும் சிரிக்கும் நிலையில் இருந்தாள். அந்தப் படத்திலே இருந்த மோகன வெறி ரங்கனுக்குப் புதிய உணர்ச்சியை உண்டுபண்ணிற்று. புதிய உலகத்திற்குத் தூக்கிச் சென்றது. படித்தவன், நாகரிகமாக இருப்பவன், விரும்பக்கூடிய அம்சம் என்னவெனத் துருவிப் பார்த்தான். ஏன் இவ்வளவு ஆவல், பணம்கூட இல்லை, படிப்பும் இல்லை. பெண்ணுக்கு வேண்டியது அழகு மட்டும் தானா? அந்த அழகு அஞ்சலையிடம் இருக்கிறதா? அழகை விரும்புவது அறிவு; அறிவுள்ளவன் அறிவைவிடப் பெண்ணிடத்தில் அடக்கத்தையும் அழகையுமே விரும்புகிறான்! இரண்டும் அஞ்சலையிடம் இருக்-

கின்றனே! அதுதான் படித்தவன் இத்தனை ஆசைப்படுகிறான். இவ்வாறு ரங்கசாமியின் சிந்தனை ஓடியது.

"ஏனம்மா அஞ்சலையின் படம் மட்டுந்தானா எடுக்கப் பெற்றது?" என்று கேட்டான்.

"கீதாவின் படம் உன் தம்பி அறையிலேயே இருக்கிறது."

"ஓகோ, இந்தப் படம் அங்கே இல்லையா."

"எந்தப் படம்?"

"அஞ்சலையின் படம் அங்கே இல்லையா?"

"இல்லை."

"இரண்டு மூன்று எடுத்திருந்தால்..." என்று சொன்ன காமாட்சி, அஞ்சலையைக் கூப்பிட்டாள். அஞ்சலை வந்தாள். மேலே மாட்டிப்பட்டிருக்கும் படத்திற்கும் எதிரே நிற்கும் படத்திற்கும் கண்ணோட்டம் நடந்தது.

"அஞ்சலைப் பெண்ணுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது டோய்! இந்த அத்தானுக்குச்சாப்பாடு கிடைக்குமா கிடைக்காதா?"

"போங்கள் அத்தான், உங்களுக்குப் பரிகாசம்."

காமாட்சியம்மாள், "ஏம்மா அந்தப் படம் இருக்கிறதே அது போல வேறு காப்பி இருக்கிறதா?" என்று கேட்டாள்.

அஞ்சலை வெட்கத்தால் முகம் சிவந்து நழுவ முயலவே, "என்னம்மா விஷயம்?" என்று காமாட்சிம்மாள் கேட்கும்படி யாயிற்று.

"கீதா ஒரு படத்தை வாங்கிக் கொண்டு போய்விட்டாள். ஒரு படம் என் பெட்டிக்குள் இருக்கிறது" என்றாள் அஞ்சலை.

"ஒரு படம் பெட்டிக்குள் இருக்கிறதாம்" என்றாள் தாய்.

"எனக்கு காதில் விழுகிறது அம்மா! அந்தப் படம் எனக்கு கிடைக்குமா என்று கேட்டுப் பார்."

"கேட்கிறானே உனக்கு இனி எதற்கு அந்தப் படம், அஞ்சலை?"

"அத்தை நீ சொன்னால் கொடுத்து விடுகிறேன்."

"உனக்கு வேண்டுமானால், அஞ்சலை, உன் சின்ன அத்தானிடம் சொல்லி வேண்டிய காப்பி எடுத்துத் தரச் சொல்லுகிறேன்."

"அப்படியே அத்தை!"

அஞ்சலை தன்னறைக்குள் போய், பெட்டியின் அடியிலே வைத் திருந்த தன் படத்தை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள்.

தாயார், "இந்தாடப்பா, இதற்குத்தானா கேட்டாய்? அவள் கொடுக்காவிட்டால் இங்கே ஹாலில் கிடப்பதை உன் அறைக்குள் கொண்டு போய்ப் போட்டுக் கொண்டால் யார் அடிக்கிறதாம்?" என்றாள்.

"இல்லையம்மா. அஞ்சலை கையால் கொடுத்த படம் என்றால் அதற்குத் தனி மகத்துவம் இல்லையா?" என்று குறும்புத்தனமாகச் சிரித்துக் கொண்டு எழுந்தான்.

"நான் கேட்கிறேன் என்று கோபங் கொள்ளாதே. உன் கலியாணம் எங்கே, எப்போது என்று சொல்லிவிடு." மகன் சிரித்து நிற்கும் சமயம் விஷயத்தை அறிய ஆவல் கொண்டாள் காமாட்சியம்மாள்.

"இருக்கட்டும் அம்மா. எனக்காக ஒருவரும் நஷ்டப்பட வேண்டாம். எனக்காக ஒருவரும் காலதாமதம் செய்துகொள்ளவும் வேண்டாம். நடக்கிறபடி காலாகாலத்தில் கல்யாணங்கள் நடக்கட்டும்."

"அப்படியானால், அஞ்சலையின் முடிவுபற்றி அவர்கள் வீட்டுக்குச் சொல்லிவிடலாமா?"

பதில் சுலபமாகச் சொல்ல முடியவில்லை. தயக்கத்தைச் சாமர்த்தியமாக மாற்றி, "இதில் நான் யாரம்மா குறுக்கிட?" என்று சொல்லிக்கொண்டே போனவன் திரும்பி, "ஏம்மா இன்று சினிமாவுக்கு நாம் போகலாமா? நான் கூப்பிட்டால் நீகூட வரமாட்டாய், தம்பி என்றால் எல்லோரும் புறப்படுவீர்கள்" என்று பதிலை எதிர்பாராதவன் போல நடந்தான்.

"அதற்கென்ன போனால் போகிறது" என்றாள் தாய்.

அன்று மாலை படத்திற்குப் போவதாகத் தீர்மானம் செய்யப்பட்டது. அது, மிருதுலதா நடித்த படங்களில் ஒன்று.

## 13. மிருது புரொடக்ஷன்ஸ்

"வேலு பிரதர்ஸ்" என்ற ஆபீஸ் முன்னால் நாம் போய் இறங்கிவிட்டால் நமக்கு வேண்டிய யந்திர சாமான்களின் பாகங்கள், வீட்டுக்குத் தண்ணீர் குழாய் முதல் விமானத்துக்கு வேண்டிய பாகங்கள் வரை, எது வேண்டுமானாலும் வாங்கலாம். வேலு பிரதர்ஸ் யந்திரங்கள், குழாய்கள், மின்சாரத்துக்குரிய பாகங்கள்,

சைக்கிள், மோட்டார் இவ்வாறு பழுதுபட்ட பாகங்களுக்கு பிரதி பாகங்கள் விற்பனை செல்வதில் சென்னை மாகாணத்தில் கியாதி பெற்றவர்கள். எந்தப் பழைய மோட்டாரையும் இவர்கள் கம்பெனியை நம்பி வாங்கலாம், எத்தனவது வருஷ மாடலுக்கும் மாற்றுப் பாகங்கள் கிடைக்கும்.

'வேலு பிரதர்ஸ்' என்ற அந்தக் கட்டிடம் சென்னையின் மிக முக்கியமான டவுன் பகுதியில் அமைந்திருக்கிறது. வெளிப் பக்கம் நவீன மோஸ்தரில் காணப்பட்டது. உள்ளே போனல் பத்திருபது அடிக்கு அப்பால் ஜரிகைச் சேலையின் பின்புறம் போன்று சற்று அருவருப்பாகத் தோற்றம் தரும். துருப் பிடித்த முரட்டு இரும்புக் குழாய்கள், பெரிய பெரிய இரும்புத் தொட்டிகள், பளபளக்கும் யந்திர நுணுக்கமான பாகங்கள், மலைமலையாகக் குவிந்து கிடக்கும் இந்த பாகங்கள் தகரக் கொட்டகைக்குள், கிடப்பவை, தகர கொட்டகையின் நிழலுக்கு உரித்தாகா. வருண பகவான் அபிஷேகத்திற்கும் தகுதியுள்ள பழைய இரும்புத் துண்டங்கள், தூண்கள், முன்னுள் உருவத்தை இழந்து பல நெளிவுகள் உள்ள யந்திர சாமான்கள் குவிந்து கிடக்கும்; இவை, கப்பல் ஏற்றுமதிக்காக குவிந்து கிடப்பன; துரு ஏறிய இரும்புத் துண்டங்கள், அதாவது சில ஆண்டுகளுக்கு முன் பளபளத்த கார்களாக, விலையுயர்ந்த யந்திரங்களாக, வெளிநாடுகளிலிருந்து வந்திருந்தவைகளும், சில ரோட்டு எஞ்சின்களும், பிரமாண்டமான அரிசி அரைக்கும் யந்திரங்களும் பழைய இரும்புப் பகுதியில் அமுக்கிக் கிடந்தனவென்றுல் அங்குள்ள இரும்பின் மலைமலையான குவியலை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

'வேலு பிரதர்ஸ்' பழைய பாகங்களை நிறுத்து வாங்கித் தரம் பிரித்து விற்பனை செய்ய ஆரம்பித்த காலம் போய், புதிய ரக பாகங்களையும் இறக்குமதி செய்ய ஆரம்பித்து வியாபாரத்தில் பேரும் புகழும், பாங்கியில் பல லட்சங்களையும் பார்த்துவிட்ட கம்பெனி. இவை தவிர, சில சில கம்பெனிகளில் பெருவாரியான பங்குகளும் உண்டு. எல்லாம் கம்பெனி பெயரால் வேலய்யா வாங்கியிருந்தான். தான், தனது என்ற நோக்கத்தில் எதையும் வாங்கவில்லை. இந்தக் கம்பெனிக்குள் வேலய்யா வருகிறுன் என்றுல் சிப்பந்திகள் பயந்து கொண்டு ஓடமாட்டார்கள். சகோ

தாளுகவே எண்ணி இருந்தார்கள். பல இடங்களில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டும் இக் கம்பெனியில் அந்தப் பேச்சே கிடையாது.

'வேலு பிரதர்ஸ்' முன்னல் ஒரு நாள் உயரிய மோட்டார் ஒன்று வந்து நின்றது, அதற்குள்ளிருந்து இறங்கிய நஞ்சப்பா கம்பெனிக்குள் வந்தார். அவருக்குப் பங்களூரில் பல வியாபாரங்கள். அந்த வியாபாரத் தொடர்பில் வேலைய்யாவை அறிந்தவர்; வேலைய்யாவைச் சினிமாத் தொழிலுக்கு இழுக்க ஆசைப்பட்டவள் மிருதுலதா; வியாபார நோக்கத்தில் பண லாபத்தைக் காட்டி, வேலைய்யாவிடம் நெருங்கிப் பழக ஆசை கொண்டு, நஞ்சப்பாவைக் கருவியாக்கிளுள். நஞ்சப்பாவுக்கு முன் நடந்த விருத்தாந்தங்கள் வேலையா மிருதுலா-பற்றிய விபரங்கள் எதுவுமே தெரியாது.

வேலைய்யா, "மிஸ்டர் நஞ்சப்பா, தாங்கள் இன்ன கம்பெனி என்று சொல்லாமல் பங்குத் தொகை சொன்னதும் சரியென்றேன். ஆனல் சினிமா எனக்குப் புதிய தொழில். வேண்டாம்" என்ருன்.

நஞ்சப்பா, "உனக்குப் புதிய தொழில் என்ருல் நான் அதிலே பெரிய கை, நடிகை மிருதுதான் முக்கிய பங்குதார். அவளுக்காகப் பலரும் உதவி செய்யக் காத்துள்ளார்கள். ஆறு ஏழு லட்ச ரூபாய் பிறர் செலவு செய்தால் நமது கையைவிட்டு இரண்டு லட்சம் கூடப் போகாது. விற்பனை உரிமை என்ற வகையில் படத்தை நான் பத்து லட்சத்திற்கு விற்றுத் தருகிறேன். உனக்கு என்ன கவலை? உன் சகோதரன் மிருதுலதாவுக்கு ரொம்ப வேண்டியவர் என்ற முறையில் உன்னையும் கேட்க நேர்ந்தது" என்ருர்.

வேலைய்யா எதை வேண்டாம் என்று உதறித் தள்ளிஞலே அதுவே மீண்டும் வந்து பின்னுகிறது. நஞ்சப்பா, 'வேலு பிரதர்ஸ்' என்ற கிட்டங்கியின் உருவையும் அங்குள்ள சாமான்களின் அபரிமிதக்குவியலையும், சாமான்களின் ரகரகமான விதங்களின் எண்ணிக்கையையும் கண்டு திகைத்துப் போனர்.

நஞ்சப்பா பாதி கன்னடத்திலும் பாதி தமிழிலும் பேசியதின் சாரம்,தான் ஆரம்பிக்க இருக்கும் ஒரு கம்பெனியில் பதினயிரம் ரூபாய்க்கு ஒருபங்கு போடும்படி கேட்டுக்கொண்டார். பல ஸ்தாபனங்களில் அவரோடு கூட்டுப் பங்குகள் எடுத்திருந்த காரணத்தால்

வேலையா ஒப்புக்கொண்ட பின்பு அந்தக் கம்பெனி யாருடையது, அதன் நோக்கங்கள் என்னவெனச் சொல்ல ஆரம்பித்தார்.

வேலய்யா திகைத்துப் போனான். இக்காலத்து பிரதம நடிகைகளுக்கு பிடித்திருந்த ஒரு வியாதி-சொந்தப் படம் பிடிக்கும் ஒரு வியாதி-நடிகை மிருதுலாவிற்கும் பிடித்திருக்கிறது என்பதை அறிந்தான். பெங்களூர் நஞ்சப்பாவுக்குப் பட விநியோகத்தில் நல்ல அநுபவம். பிரபல நடிகைகள் பலரிடம் செல்வாக்கு உள்ளவர். செல்வாக்கைப் பயன் படுத்தித் தம்மை உயர்த்தவும், பிறரை விலைக்கு வாங்குவதற்கும் தயங்காதவர். அவர் வலை விரித்து வந்த சமயம் மிருதுலதா, அவரை ஒரு வலைக்குள் பிடித்துப் போட்டாள்.

வேறு நோக்கத்தோடு வலை விரிக்க வந்தவர் நஞ்சப்பா, ஆனால் நடி மிருதுலதா சம்மந்தமாகத் தங்கள் குடும்ப விவகாரத்தை அவரிடம் விவாதிக்க இஷ்டப்படாமல் வேலய்யா தள்ளி விட நினைத்ததும் அவர் விடவில்லை. ஒரு ரூபாய், ஒரு நூறு ரூபாயாக வரப் போகும் லாபத்தைக் குறித்துப் பேசினார். மிருது புரொடக்ஷன்ஸார் தயார் செய்யப்போகும் படம் தமிழில் மட்டுமின்றி மலையாளம், கன்னடம், தெலுங்கு அதற்கப்பால் ஹிந்தியில் வரப் போவதையும் விவரித்தார். ஆலம்விதை ஒன்று எப்படிக் கிளைத்துப் பிரம்மாண்டமாகப் பெருகி விழுது ஊன்றுமோ அப்படி ஊன்றப் போவதையும், சௌகரியப்பட்டால் தானும் வேலய்யாவும் ஹாலிவுட் பிரயாணம் செய்ய நேரிடுமென்றும் வர்ணித்தார். வியாபாரத் துறையில் பிறர் நம்பும்படி, பேசுவதில் அவர் கைகாரர். புள்ளி விவரங்களைக் காட்டித் திணர வைத்தார். இத்தனை அருமையாகப் பேசியும் வேலய்யா வாக்குக் கொடுத்தும் காரியத்தை வாபஸ் பெறச் சித்தமாக இருந்தான். அவனுக்கு மிருது புரொடக்ஷன்ஸ் என்ற பெயரே தலை சுற்றியது.

"என்ன சொல்லுகிறாய் வேலய்யா?"

"மன்னித்துவிடுங்கள். எனக்கு இந்தச் சம்பந்தம் வேண்டாம்."

"நேற்று நான், மிருது, உன் தமையன் எல்லோரும் பேசிக் கொண்டிருந்தோம். நான் ஒரு லட்சம், உன் தமையன் ஒரு லட்சம், மிருது தன் நடிப்பின் பங்குக்கு ஒரு லட்சம் என்று பேசி முடித்தோம்."

"இல்லை, நான் ஒப்புக்கொள்ள முடியாது. மன்னிக்கவும்."

"பிழைக்கத் தெரியவில்லை. எத்தனை டன் டன்னாகத் துருப் பிடித்த இரும்பு ஏற்றினால் ஒரு லட்சம், பத்து லட்சமாக வரும் தெரியுமா? சொல்வதைக் கேள்."

"இல்லை மிஸ்டர் நான் காலணாக்கூட பங்கு போட முடியாது."

"உன் தமையன்."

"அது அவர்களது இஷ்டம்."

"நீ மறுப்பதற்கு என்ன காரணம்? உன் தமையன் தனது ரூபாயை உன்னிஷ்டமின்றிக் கொடுக்க முடியாது என்ற காரணமோ என்னமோ?"

"உங்களிஷ்டம். நான் எதுவும் சொல்ல முடியாததற்கு வருந்து கிறேன். எனக்குப் பங்கு வேண்டாம். ஒரு லட்சம் ரூபாய் நோட்டுகளையும் எடுத்து நடுக்கடலில் நீந்திப் போய்ப் போடச் சொல்லுங்கள், செய்கிறேன். கண்டிப்பாகப் பங்கு சேரமுடியாது."

வேலைய்யாவின் பிடிவாதம் நஞ்சப்பாவுக்கு விளங்கவில்லை. வேலைய்யாவைப் பதினாயிரத்திலிருந்து ஆயிரம் ரூபாய் பங்காவது எடுத்துக் கொள்ளும்படி கெஞ்சினார். வேலைய்யா ஒரு தம்பிடிகூட முடியாது என்று பிடிவாதம் செய்தான். தம்முடைய ஆசைக் கனவுகள் பூர்த்தியாகும், பண நெருக்கடியில் மிருதுலதா கஷ்டப் பட்டுப் பாதி படத்தில் தம்மைச் சரண் புகுவாள், அப்போது அவளையே தனதாக்கிக் கொள்ளலாம் என்ற நஞ்சப்பாவின் கோட் டைகள் இடிந்து தரை மட்டமாயின. ஆயினும் வேலையாவின் ஒத் துழையாமையால் 'மிருது புரொடக்ஷன்ஸ்' நிற்காது என்ற நம்பிக்கையுடன் வெளியேறினார். அவருடைய கார் மிருதுவின் பங்களாவை நோக்கிப் பறந்தது.

மிருது ஆவலோடு காத்திருந்தாள். பங்களூர் நஞ்சப்பா வெற்றியுடன் வந்திருப்பார் என்று முடிவு செய்தாள். அவர் முகம் சாம்பியிருந்தது,

"என்ன சொன்னார்?"

"முடியாது. தம்பிடிக் காசுகூட நான் போடமுடியாது" என்று சொன்னான் வேலைய்யா.

"அப்படியா?"

"நான் சொல்லுகிறேன். இதற்கு யாருடைய தயவுமே தேவையில்லை. பங்குதாரர்களை நான் சேகரம் செய்கிறேன்."

"இக் கம்பெனியில் அதிகப்படியான பங்குதார்கள் சேர்த்துப் புதியபடம் எடுக்க விரும்பவில்லை, மூன்றே பங்குகள் வேண்டுமென்று எதிர்பார்த்தேன். ஒருபங்கு போய்விட்டது. மேலும் எனக்குப் பல விதத்திலும் கஷ்டங்கள். அதனால் இந்தச் சினிமாக் கம்பெனி கட்டுப்படியாகாது."

"அப்படிச் சொல்லிவிடக்கூடாது. எனக்குப் பட விநியோகத்திலே நல்ல அநுபவம். பல ஆயிரங்களுக்குப் பட முதலாளியிடம் கையெழுத்திட்டு பல மாதங்கள் சிரமப்படுவதைவிட, அதே காலத்தில் பல லட்சங்களையும் சம்பாதிக்கும் வழி இருக்கிறது. பணக் கவலைகூடத் தங்களுக்கு வேண்டாம். நானே உங்கள் நடிப்புக்குரிய பணத்தை ஒரு பங்காகக் குறித்துக் கம்பெனி ஆரம்பிக்கலாம். விளம்பரத்திற்கு ஏற்பாடுகள் செய்து வருகிறேன். எந்த வழியில் போனாலும் தங்கள் பெயர் இருப்பதால் சலுகைகள் பெற முடியும். அதிகப்படியான செய்திகளைத் தருவார்கள்."

மோசமானகருத்தோடு தன்உடலை விரும்பும் அந்தக் காமுகன் பல லட்சங்களைப் போட வருவதை உலக அநுபவங்கொண்ட மிருதுலதா உணர்ந்தாலும் வெளியே காட்டிக் கொள்ள முடியவில்லை. இப்படிக் காட்டிக்கொண்டால் பட முதலாளியிடம் அவர் வாக்கு வலுப்பெற்று தனக்கு உள்ள தனிப்பட்ட கிராக்கி படங்களுக்கு ஏற்படாமலும் போகலாம். அதனால் சாமர்த்தியமாகத் தப்பிக்கொள்ள நினைத்தாள்.

"இன்னும் இரண்டொரு மாதங்கள் போகட்டும். நான் நடிக்கும் படங்களின் தொகையும் வந்துவிடும். இதிலே பிறர் தயவை எதிர்பார்க்காமல் நீங்களும் நானும் கூட்டாகப் படம் எடுக்கலாம். என் பெயரையே மிருது புரொடக்ஷன்ஸ் என்றேபோடவேண்டும்" என்று நிறுத்தினாள்.

"ஆகா, என் பெயரைக்கொண்டு விளம்பரம் வந்தால் எவன் படிப்பான். சொல்லிப்பாருங்கள்."

சிரிக்காமல் உணர்ச்சியுடன், "இதில் என்ன தவறு? 'நஞ்சப்பா புரொடக்ஷன்ஸ்' நன்றாகத்தான் இருக்கிறது" என்று சொன்னாள். தனது பெயரை அன்பு தவழ ஆசை ததும்ப உச்சரித்ததை செவியாறக்கேட்ட அவருக்கு இந்த உலகைமறக்கும் பெரும் புத்தி வந்துவிட்டது. பிறருடைய கூட்டுத் தயவின்றி ஓரிரண்டு

மாதங்களில் தன் வலையில் விழப்போகும் பஞ்சவர்ணக் கிளிக்குத் தமது இதயக் கதவைத் திறந்து வைத்தார். காலத்தின் மீது நம்பிக்கை வைத்து, "மிருதுலதா, உங்களுக்கு நான், எதுவும் சொல்லத் தேவையில்லை. எவ்வளவு துரிதமாக இதைத் தீர்மானம் செய்ய முடியுமோ முடித்துவிடுங்கள். ஒரு நல்ல நாளில் கம்பெனிக்குப் பூஜை போட்டு விடலாம். பின்னர் கதை, நடிகர், பெயர்கள் எல்லாம் பார்க்கலாம்" என்று பூசி மெழுகினார்.

"அவசியம். எவ்வளவோ விரைவில் ஆரம்பிக்கவேண்டும். தாங்கள் அவசியம் இதை மனசில் வைத்திருப்பீர்கள். மறந்து விடக்கூடாது. பெரிய பிஸினெஸ்காரர் தாங்கள். இதயத்தின் ஒரு மூலையில் இந்த மிருது புரொடக்ஷன்ஸ் கிடக்கட்டும்" என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

மிஸ்டர் நஞ்சப்பாவுக்கு அவநம்பிக்கைப் போய் நம்பிக்கை தலையெடுத்தது. என்ன இருந்தாலும் ஆயிரம் நஞ்சப்பாக்களை அவள் தூக்கி விழுங்குபவள்! அவள் மேனி, அவள் இன்பக் குரல், தாபம் கொடுக்கும் விழிகள் அல்லவா அப்படி ஆட்டுவிக்கின்றன. 'ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே?' நஞ்சப்பா நம்பிக்கையுடன் வெளியே காரில் புறப்பட்டார். அந்த நிமிஷமே மங்களூர் நஞ்சப்பா ஆரம்பிக்கவிருக்கும் மிருது புரொடக்ஷன்ஸ் எல்லாவற்றையும் மறந்த மிருதுலதாவின் உள்ளம், வேலய்யாவின் கடின சித்தத்தை எண்ணி ஏங்க ஆரம்பித்தது.

தனதறைக்குள் வந்து படுக்கையில் விழுந்து புரண்டு எண்ணமிட்ட சமயம், "அம்மா ரங்கசாமி வந்திருக்கிறாங்க. வரச் சொல்லவா?" என்ற குரல்' அந்த அறைக்குள் நுழைந்தது. மிருதுலதாவுக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது. "பத்து நிமிஷம் கழித்து உள்ளே அனுப்பிவை" என்றாள்.

அந்தப் பத்து நிமிஷம் வெளியறையில் காத்திருந்து பதினோராவது நிமிஷம் உள்ளே வரும் ரங்கசாமி அனலிடைப்பட்ட தங்கக் கம்பியாகத் தட்டிப் பட்டையிட பக்குவப் பட்டிருக்குமென்று தெரிந்தே இப்படிச் சொன்னாள்.

கை கடிகாரத்தை விநாடிக்கு அறுபதுதடவை பார்த்துக்கொண்டிருந்தவன் பதினொன்றாம் நிமிஷம் சொர்க்கத்துக்குள் நுழையும் பக்த சிகாமணிபோன்று மிருதுவின் அறைக்குள் நுழைந்தான்.

# 14. கீதா என் ஓர்ப்படி

" 'தங்களை வேலையிலிருந்து அப்போதே நீக்கி விட்டேன். போய் வாருங்கள். நமஸ்காரம்'' என்று வேலய்யா கத்தினன். மானேஜர் திகைத்துப் போனர், மீண்டும் மீண்டும் சொன்ன தையே சொன்னர்.

" என் அநுமதியில்லாமல் யாருக்குப் பணம் கொடுக்கத் தங்க ளுக்கு உத்தரவு இருந்தது? என் தமையனுருக்குத் தாங்கள் கொடுத்தது தவறு. ஒன்ரு பத்தா. ஆயிரமா? லட்ச ரூபாய் யார் கணக்கில் கொடுத்தீர்கள் ?''

" தங்கள் தமையனர் கேட்கும்போது நான் யார் குறுக்கிடு வதற்கு ?''

'' போய்ச் சேரும். ஆபீஸை விட்டுப் போகலாம். உமது சம்பளத்தோடு ஆயிரம் ரூபாய் என் கணக்கில் பெற்றுக்கொண்டு போகலாம்.''

அதற்கு மேலாக மானேஜர் பேசவிடாதபடி தானே கதவைச் சாத்திக் கொண்டு வெளியே வந்து தன் காரில் ஏறிக் கொண்டான். பழைய இரும்புபோல மானேஜர் தெருவில் தூக்கி எறியப்பட்ட தைச் சிப்பந்திகள் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

மானேஜர் தாழ்ந்த முகத்தோடு தம் அறைக்குப் போய்ச் சேருவதற்குள் வேலய்யா கடையை விட்டு வெகு தூரம் போய் விட்டான். லட்ச ரூபாய் எதற்காகத் தமையன் எடுத்திருக்க வேண்டும்? பாங்கியில் செக்கை மாற்றியும் விட்டார். இனி என்ன வழி? யோசித்தவன் கார் ஓடிக் கொண்டிருந்தது.

மிருதுலதா வீட்டு முன்னல் போய் நின்றது. '' அம்மா இருக் கிருங்க '' என்ருன் குண்டப்பா. கோபாவேசமாக நுழைந்தான். சாகஸமும் புன்சிரிப்பும் நெளிய மிருதுலதா வந்து வரவேற்ருள்.

" வாருங்கள் வாருங்கள். உங்கள் கலியாணத்திற்கு என்னு டைய பாட்டுக் கச்சேரி வைக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். அந்தப் பாக்கியமாவது கொடுத்தீர்களே.''

நொந்த புண்ணில் வேல் பாய்ந்திருந்தால் அத்தனை வேதனை யாத இருக்க முடியாது. வேலய்யா தனது கோபத்தை அடக்கிக்

கொண்டு பேச ஆரம்பித்தான், பெண்ணினத்துப் பெருந்தனங்களை யெல்லாம் காட்டி அவன் பேச ஆரம்பித்தான். இருவர் பேச்சுக்கும் முடிவு இல்லை, தங்கள் தங்கள் கட்சிக்காக வாதாடினார்கள்.

" என் தமையனைத் தாங்கள் விரும்பவில்லை, அவர் சொத்தையும் விரும்பவில்லை. பணத்தைப் பறித்துக் கொண்டீர்கள் அல்லவா ?" என்ற வேலையாவிடம் " என் விருப்பம் தாங்கள்; தங்களுடைய அன்பொன்றே போதும். அந்தக் கீதாவை மறந்து விடுங்கள் " என்று பதில் சொன்னாள்.

" எனக்குத் தங்கள் போதனை தேவையில்லை. என்னையும் முட்டாள் ஆக்குவது போதும். பறித்துக் கொண்ட பணம் ஒரு லட்சத்தோடு ஆளை அடித்து விரட்டினால் அதுவே போதும்."

" நான் பணம் பறிக்கும் ஜாதியல்ல, உங்கள் அண்ணன் புத்தி கெட்டுப்போய்க் கொண்டுவந்த பணத்தை யெடுத்து விழுங்கும் மானங் கெட்ட நாயல்ல நான். இதோ இருக்கிறது எடுத்துக் கொண்டு போகலாம் " என்று பெட்டியைத் திறந்து ஒரு பையை வீசினாள். அதிலே நூறு ரூபாய் நோட்டுக்கள் கட்டுக் கட்டாக இருந்தன.

" இந்தப் பணத்தை எடுத்துப் போக நான் வரவில்லை, என் அண்ணனும் வர மாட்டார். பணம் பெரிதல்ல, லட்சியம் பெரிது, மனிதத்தன்மை பெரிது."

" இருக்கட்டும். எனக்கும் அதுதான் பெரிது. பணத்திற்காக நான் வாழ விரும்பினால் இதற்குள் தனி பாங்கியே நான் வைத்திருக்கலாம். என் எண்ணம் அதுவல்ல. எனது லட்சியம் குடும்ப வாழ்க்கை, அதற்குத் தாங்கள்தான் தெய்வம்."

" இந்தத் தெய்வம், பக்தி, பாசாங்கு எல்லாம் திரையில் பேச வேண்டிய பேச்சு. இனியாவது எங்கள் குலத்திற்கும், யாருடைய குடும்பத்திற்கும் இடையூறு செய்ய வேண்டாம்."

" நான் நடிப்பதாகவா எண்ணுகிறீர்கள்? நிஜமாகச் சொல்லுகிறேன். தாங்கள் என் அன்பை நிராகரிக்கக் கூடாது, வேண்டாம்."

" அன்பு, அன்புக்காகக் கடமைப்பட்டது. அதைப் பயமுறுத்தியும் இம்சித்தும் பெற முடியாது என்பதை உங்கள் வசன கர்த்தாக்கள் யாரும் சொல்லவில்லையா ?"

"அவர்கள் சொல்லுவதும் எழுதுவதும் திரைக்குத்தான் தகுந்தது. வாழ்வுக்கு ஒத்துவரவில்லை. நான் நடிகை என்ற காரணத்திற்காகவோ, நாகரிக வாழ்வு உடையவள் என்றதற்காகவோ என்னைத் தள்ளவேண்டாம். நான் ஒரு பெண். தங்கள் மனசின் படி நான் நடக்க வாக்குக் கொடுக்கிறேன்."

"ஐய்யோ இது என்ன வம்பு வார்த்தை? உன் மனசிற்கு நான் இடம் கொடுக்க முடியாது. முடியாது. முடியவே முடியாது என்பதை அறிவாய்."

"மாறும் என நம்புகிறேன்."

"அண்ணனைத் திருப்ப வந்த தம்பி பலியானான் என்ற சிரிப்புக்கு என்னை ஆளாக்கும் வஞ்சனையோடு பேசினாலும் சரி, என்னையும் என் அண்ணனையும் கெடுக்க நினைத்தாலும் சரி, எதை நினைத்தாலும் சரியே. உன் தரிசனம் எங்களுக்கு வேண்டாம்."

"வேண்டாம் என்றால் நான் உங்களை இங்கு அழைக்கவில்லை. உங்கள் தமையனையும் அழைக்கவில்லை."

"பூக்கடைக்கு விளம்பரம் செய்கிறவர்கள், பைத்தியக் காரர்கள்."

"அந்தக் கீதா என்னைவிட அழகியாக இருக்கலாம். படித்தவளாகவும் இருக்கலாம், அன்புடையவள் என்று நினைக்கிறீர்களே அதுமட்டும் என்னளவில் நம்பமுடியாது. இந்த நிமிஷமே இந்தத் தொழிலை விட்டுவிடுகிறேன். உங்கள் பின்னால் வருகிறேன். நானாகச் சம்பாதித்த பணம் இது. இத்தனையும் உங்கள் காலடியில் வைத்துவிடுகிறேன். இத்தொழிலில் நான் ஆர்வம் கொள்ளவில்லை. என் மனசிற்குத், தகுந்த நபரை அடையவே புகுந்தேன். கிடைத்தது. ஆனால் கருணைமட்டும் இல்லையே."

"இன்னொரு ஜன்மம்தான் எடுக்க வேண்டும். நடிகை குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் வாழைநார் என்றே படுகிறது. உண்மையைத் தவிர்த்துப் பொய்யே பரவலாகக் காட்சி தருகிறது. நான் சொல்லிவிட்டேன். இனி தங்களுடைய இஷ்டப்படி நடந்து கொள்ளுங்கள். என் பேச்சைக் கேளாத தமையன் தங்களோடு வாழ்ந்தாலும் சரி, தாழ்ந்து போனாலும் சரி, எனக்கு அக்கறையில்லை. நான் போகிறேன்."

கோபாவேசத்தோடு நடந்தவனை வாசலில் குறுக்கிட்டு மறைத்து நின்றாள்.

" இது என்ன விளையாட்டா ?"

" அல்ல. அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு போய்விடுங்கள். தாங்கள் வராவிட்டாலும் நானாகவந்து பணத்தைத் தர வேண்டுமென்று நினைத்தேன். தாங்களே வந்து விட்டீர்கள்."

" அது என்னுடைய பணம் இல்லை. யார் கொடுத்தார்களோ அவர்களிடம் கொடுத்துவிடவும். எனக்குக் கோபம் மூட்டி விளையாடப் பார்க்காதே."

" கிதா விளையாடப் பிறந்தவள். நான் யார் ?"

அவள் கையைத் தள்ளிவிட்டு வேலய்யா நகர்ந்தான். படபடப்பாக ஓடிக் காரில் ஏறப் போகும்போது வீட்டிற்கு உள்ளே வந்து கொண்டிருந்த ரங்கசாமி கவனித்தான். மனம் சோர்ந்து மிருதுலதா வந்து கட்டிலில் மயில் போல் வீழ்ந்தாள். அடுத்த கணம் " ஆ, என் கனியே", என்று ஆவலோடு அவள் முகத்தை ரங்சாமி திருப்பலானான். அவளுக்குக் கோபம், ஆங்காரம்.

" போதும் போதும். உங்கள் குடும்ப சாகஸம்."

" குடும்பத்திற்கு என்ன ?"

" இதைப் பாருங்கள்." என்று சுட்டிக் காட்டிய பணப் பையைப் பார்த்தான்.

" என்ன..."

" உங்கள் தம்பி தந்த பரிசு."

" எவ்வளவு..."

" லட்ச ரூபாய்க்கு விலைக்கு வாங்கப் பார்த்தார். என்னை ஆடாகவோ மாடாகவோ நினைத்ததால். நான் என்ன மூளை இல்லாத மிருகமா ?"

" மிருதுலதா, கோபம் எதற்கு? இன்னொருவருடைய மனைவி என்று ஆகும்வரை யாருக்கும் ஒரு பெண்மீது ஆசை இருப்பது சகஜம். நீ சொல்லி விடுகிறதுதானே ?"

" நான் சொல்லிப் பயன்? அண்ணனை மணப்பது தம்பிக்குக் கோபம். உங்களைவிடப் பணத்திலோ திறமையிலும் மேதாவி என்று பேசினால்..."

" இப்படியா சொன்னான் ?"

" ஆமாம்."

" இருக்கட்டும். அவனுக்கு நல்ல பாடம் கற்பிக்கிறேன். எனக்குப் பணம் கொடுத்ததற்காக மானேஜர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். சற்றுமுன் வந்து மூக்கால் அழுதான் மானேஜர்."

"உங்கள் கம்பெனியில் அவர் இட்டது சட்டம், சர்வாதிகாரம். உங்களுக்குப் பணம் எடுக்க அதிகாரம் கிடையாது, வேடிக்கை தான் போங்கள். இப்படியிருந்தால் அவர் சொல்லுகிற இடத்தில் காதைப் பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம் போட்டால்தான் உங்களுக்குச் சாப்பாட்டுக்கு வழி பிறக்கும்."

" நான் தோப்புக்கரணம் போடுவதையும், அவன் போடுவதையும் பார்க்கலாம்."

" இப்படி ஏமாந்த அண்ணனை நான் பார்த்ததில்லை!"

" எங்களுக்குள் பாகப்பிரிவினை ஆனபிறகுதான் கல்யாணம் நடக்க வேண்டுமென அம்மாவிடம் சொல்லிவிட்டேன்."

" நிஜமாகவா?"

" கை கொடுங்கள், ரங்கசாமி! பேஷ்! பேஷ்! ரொம்ப புத்தி சாலித்தனமான காரியம் செய்தீர்கள்." என்று கை குலுக்கிவிட்டு " அட ராம, ராமா! உங்களைப்போல் வெள்ளையுள்ளம் யாருக்கு இருக்கும்? பாகப்பிரிவினையைச் சொல்லலாமா? பணத்தை அப்படியே பதுக்கி வைப்பதற்குக் குறிப்புக் கொடுத்து விட்டீர்களே. உங்களுக்குப் பெரிய நாமம் மிஞ்சப் போகிறது! போங்கள், உங்கள் தம்பி குழைத்து வைத்திருப்பார். இந்த நெற்றியில் பொட்டு இடுவார். அதையும் போட்டுக்கொண்டு இங்கே வந்து காட்டுங்கள். அதைப் பார்க்கத்தானே இந்த லதா இருக்கிறேன்." என அழ ஆரம்பித்தாள்.

தன் நெற்றியில் ஏதோ ஊர்ந்து செல்வது போலவும் அதைத் துடைத்தெறிய நகத்தால் சொரண்டிக் கொடுத்தான். அவள் உள்ளத்திற்கேற்ப அவன் இதயம் துடிக்க ஆரம்பித்தது. அவள், "இந்த லட்ச ரூபாயைக் கொண்டு போய் உங்கள் தம்பியின் மூஞ்சியில் வீசி எறியுங்கள். அதன் பிறகு என்னிடம் பேசுங்கள்" என்று கத்தினாள். தான் சொல்லுகிறதை வெறியன் போலச் செய்யும் பக்குவத்திற்கு அவனைத் தயார் செய்துவிட்டாள்.

இருவரும் பேசாது வெகுநேரம் அமர்ந்திருந்தார்கள். இரவு வந்து கொண்டிருந்தது. திருமணத்தின் ஏற்பாடுகளை மெல்ல மெல்லக் கிரகித்துக் கொண்டாள் மிருதுலதா. இரவு போஜனம் முடிந்தபின் ரகஸியமாக, வெகுநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, "உங்களை நம்புகிறேன். கைவிட்டு விடக்கூடாது" என்ருள்.

"இல்லை. நான் எப்போது வரவேண்டும்?"

"முடித்துவிட்டு வந்துவிடுங்கள். குண்டப்பா காரை எடுத்துக் கொண்டு உங்களை வீட்டில் விட்டு வருவான்" என்ருள்.

கார், தேனும்பேட்டை போய்த் திரும்பி வந்த பிறகு மிருதுலதா, காரைவிட்டுக் கொண்டு மயிலாப்பூர் வந்தாள். நீதிபதி நீலமேகத்தின் வீட்டின் முன்பாக வந்து நின்றது. கார் வந்த சப்தம் கேட்டு கீதா விளக்கைப் போட்டாள். அவள் எதிர்பார்த்தபடி அங்கே வேலய்யா இல்லை. மிருதுலதா இருந்தாள்.

"யாரைப் பார்க்க வேண்டும்?"

"உங்கள் பெயர் கீதாவா?"

"ஆமாம்."

"என்னை யார் எனத் தெரிந்திருக்கும்?"

"தெரியுமே. உங்கள் படமில்லாத சுவர் இந்தப் பட்டணத்தில் ஏது?"

"உங்கள் தகப்பனரைப் பார்க்க வந்தேன்."

"அவர் ஏதோ முக்கியமான காரியமாக இருக்கிருர்."

"சொல்லுங்கள் அவரிடம். நான் வந்திருப்பதாக அவர் பதில் சொன்னல் போய்விடுகிறேன்."

காரில் மிருதுலதாவை இருத்திவிட்டு மாடியில் இருக்கும் தகப்பனரிடம் போய் விபரம் தெரிவித்தாள். அவருக்கு விஷயம் புரியவில்லை. ஆனலும் பார்க்க வந்த நபரை அவமரியாதை செய்து அனுப்பவும் மனமில்லை.

'வரச்சொல்' என்று சொல்லும்போதே, தமது குமாரன் அருகாக மிருதுலதா வருவதைக் கண்டார். தன் தங்கை கீதா யாருடன் பேசுகிருள் எனப் பார்க்க மோகனரங்கம், வர. ஸ்ரீமுக மான மிருதுலதாவாக இருக்கவே, மேலே அழைத்து வந்து விட்டான். தன் அநுமதிக்குக் காத்திராமல் அண்ணன் ஏமாற்

விட்டதாகக் கற்பித்துக் கொண்ட கீதா, கோபத்தோடு பார்த்தாள். விழிகளின் பேச்சு, மிருதுலதாவுக்கு புதிதானதன்று.

"உங்கள் தமையனார்தான் அப்பாவைப் போய்ப் பார்க்கலாம் என்றார். நானும் வந்தேன். என்னைக் கோபித்தும் பயன் இல்லை" என்று சொல்லவே, மோகன், "ஏன் கீதா, உனக்கு இவர்களைத் தெரியாதா?" என்று கேட்டான்.

"என்னை இன்னார் என்று தெரியும், நாங்கள் ஓரகத்தி ஆகப் போகிறோம் என்ற விபரம் தெரிந்திருக்காது."

அவள் அப்படிச் சொன்னதும் கீதாவுக்குத் தீப்பற்றி எரிவதற்குள் குளித்தது போலப் பட்டது. நீலமேகத்துக்கும் திக்கென இதயம் நிற்பது போலவிருந்தது. ஆனாலும் அவரையும் அறியாத ஒரு பாசம் மிருதுலதாவின் மீது ஏற்பட்டது.

"என்னடா, இந்த மிருதுலதா இப்படிப் பேசுகிறாளே என்று நினைக்கிறீர்களா? ஆமாம் கீதா. நான் உன்னுடைய பெரிய அத்தான் ரங்கசாமி இருக்கிறாரே அவரை மணக்கப் போகிறவள். உனக்குத் தெரிந்திருக்கும் என்று நினைத்தேன்."

நீதிபதி புருவத்தைச் சுளித்தார். அந்த நிமிஷமே அவருக்குக் கீதாவின் மாமியார் வீட்டை மாற்றும் யோசனை விழுந்துவிட்டது. இருந்தாலும் அதிகப் பேச்சுக்கு இடம் கொடுக்காமல் மிருதுலதாவின் மனசை அறிய முயன்றார். மிருதுலதாவின் முதல் வார்த்தையே கீதாவுக்கு எமனாகப் பட்டது. மேலும் அவள் பேச்சைக் கேட்கப் பிரியப்படாமல் நகர்ந்துவிட்டாள். மோகன ரங்கம் தகப்பனருக்கு எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தான். மிருதுலதாவின் மனப்பாங்கைப் பூர்ணமாகவும் ரகசியமாகவும் அறிய விருப்பம் கொண்டவர் "நீ கீழே போய் இரு" என்றார். தகப்பனர் கட்டளைக்கும் அப்பால் நிற்பது ரஸாபாசம் என்று நினைத்து அவன் நகர்ந்து விடவே, "என்னம்மா காரியம்?" என்றார். அவருக்கு அவளை இதற்கு முன் எங்கோ பார்த்தது போலவே இருந்தது.

"தங்களுடைய குமாரியும் நானும் ஒரே வீட்டில் குடித்தனம் செய்யப் போகிறோம். அக்கா தங்கையாக இருக்கப் போகிறோமே, அதை நினைத்தேன்."

'ஓகோ.'

நீதிபதி சாய்வு நாற்காலியில் சாய்ந்தவர் சிந்தனைக்காகக் கண்ணை மூடிக் கொண்டார்.

தன் பேச்சையும் தன்னையும் நீலமேகம் தனிமையில் கேட்கவும் பார்க்கவும் விரும்புவதை மிருதுலதா அறிந்து சந்தோஷமடைந்தாள். தன் வரவும் பேச்சும் கீதாவுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை யென்பதை அவள் மாடிக்கு வராததால் புரிந்து கொண்டாள்.

"இந்த இரவு நேரத்தில் என்னைக் காண நான் அநுமதி தந்திருக்கமாட்டேன். என் உத்தரவு இல்லாமல் உள்ளே வந்ததே தவறு. ஆனால் உன்னைப் பார்த்தது முதல் எனக்கு வெளியே போகச் சொல்லும் தைரியம் வரவில்லை."

"நாடக மேடையில்கூட என்னை உள்ளே போ என்று யாரும் கூச்சலிட்டது கிடையாது. தாங்கள் அப்படிச் சொல்லவும் மாட்டீர்கள். தங்கள் குமாரர் அழைக்கவே மாடிக்கு வந்தேன்."

"உன்னைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்."

"என்னைப்பற்றி நீதிபதி யொருவர் கேள்விப்பட முடியுமா?"

"சட்டங்களுக்கும் தாவாக்களுக்கும் அப்பால் எத்தனையோ ரஸமான காரியங்கள் மனிதர்களுக்கு உண்டு. உன்னைப்பற்றிப் பிரபல வக்கீல்கள் கூடப் பேசுவதைக் கேட்டிருக்கிறேன்."

"சந்தோஷம். நான் தங்களைக் கண்டு பேச வரவில்லை. இங்கே என் சிநேகிதை ஒருத்தியைக் காண வந்தேன். போகும் போது, நம்முடைய ஓர்ப்படி வீடு எப்படி என்று பார்க்க ஒரு நப்பாசை. அதனால் தப்பு ஒன்றுமில்லையே?"

"இல்லை. கல்யாணம் இன்னும் நிச்சயமாகவில்லை. உன்னுடைய கலியணம் நிச்சயமாகி விட்டதா?"

"நானும் அவரும் தீர்மானித்து விட்டோம்."

"யார்?"

"ரங்கசாமி."

"அப்படியா? அவர்கள் பெற்றோர்—தாயார் ஒன்றும் சொல்லவில்லையா?"

"உங்களுடைய மகள் கீதாவின் திருமணத்திற்கு அந்த அம்மாள் குறுக்கே நிற்கிறார்களா? இல்லை. அதேபோல மக்கள் இஷ்டப்படி விட்டுவிடுவார்கள். ஒரு நடிகையை மணப்பது

தங்களைப் போன்ற பெரிய பதவியில் இருப்பவர்களுக்குக் கஷ்ட மாக இருக்கலாம். அவர்கள் குடும்பம் அப்படியல்லவே.''

''படிப்பு மட்டுமே அறிவாக மாறிவிட முடியாதம்மா. அநுபவங் களும் உலக சம்பிரதாயங்களும் தெரிந்தால் யாரும் எதையும் சமாளித்துவிடலாம்.''

''ரங்கசாமி இதற்கு எதிராக என்ன நடந்தாலும் மறுக்கப் போகிறார். நானே அவர் வாழ்வுக்காக மணக்க முடியாது என்றேன்.''

''இதில் என்ன தவறு?''

''அவர் தம்பிக்கு இந்தக் கல்யாணம்—எங்கள் காதல்—பிடிக்கவில்லை. தன் திருமணம், நீதிபதியின் மனம் புண்படுமோ, கீதா மறுப்பாளோ என்றெல்லாம் நினைக்கிறார். அண்ணனுக்குத் திருமணம் செய்ய வேண்டாமென்றும், என்னை மணக்கக் கூடா தென்றும் வாதாடுகிறார்.''

''அது அவர்கள் குடும்ப விவகாரம்.''

''நான் ரங்கசாமி அவர்களை மணந்து கொள்வதினால் உங்கள் மனம் முறிந்து போகலாம்; கீதாவைக் கொடுக்கவோ, அஞ்சலை யைக் கொள்ளவோ மாட்டீர்கள் என்பது வேலையாவின் தீர்மானம்.''

''அப்படியா?'' என்று யோசனையில் ஆழ்ந்தார். மிருதுலதா அவர் மனசிற்குள் என்னென்ன யோசனை யிடுகிறார் எனக் கற்பிதம் செய்துகொண்டாள்.

''உங்கள் குடும்ப க்ஷேமத்திற்காக, நான் என் காதலைத் தியாகம் செய்யவேண்டும். நானோ நடிகை. என் வாழ்நாள் எப்படி எப்படித் திரும்புமோ? என்னைக் கௌரவமாக மணம் முடிக்க ஒரு நல்ல குடும்பஸ்தர் முன்வருவது துர்லபம். அதுவும் பணக்காரர். செல்வாக்குள்ள வியாபாரி. எ
சொர்க்க வாழ்க்கையை நான் பாழ் செய்துவிட்டால், எனது ஜன்மம் கடைத்தேறப் போவதில்லை. தங்களுக்கு அதிகமாக எடுத்துச் சொல்லவும் வேண்டுவதில்லை'' யென அடுக்கடுக்காகக் கோவையாகத் தன் நிலையை எடுத்து விளக்கினாள். அவள் சொல்வது உண்மையாகப் பட்டது. தமது மகள் வாழ்வுக்கு என்றைக்கும் பிடிப்பு உண்டு. வேறு இடங்கள் கிடைக்கலாம்.

தம்முடைய பிடிவாதத்தால் சமூகத்தில் முன்னணியில் நிற்கும் பெண் வழுக்கி விழும்படியான அபாக்கியத்திற்குக் காரண கர்த்தாவாக ஆகலாமா?

"என்ன நினைக்கிறீர்கள்? நான் தங்களைப் பார்த்தது தங்கள் மருமகன் வேலையாவுக்குத் தெரிந்தால் என்னைக் கொன்று போட்டாலும் போடுவார்."

"அதெல்லாம் யார் செய்யக் கூடிய செயல்? இந்நாளில் குடும்பம், பரம்பரைக் கௌரவம் இவைகளைப் பார்க்கிறவர்கள் ஏது? தான் வாழும் ஒரு நிமிஷ வாழ்வுக்காக எதையும் இழக்கத் தயாராக இருக்கிற உலகத்தில் அண்ணனாவது தம்பியாவது."

"அப்படியானால், நான் ரங்கசாமியை மணந்துகொள்வதில் தங்களுக்கு ஆக்ஷேபனை இல்லையே."

"நாங்கள் யார் உன் திருமணத்திற் குறுக்கிட."

"உங்கள் மகளை அக் குடும்பத்தில் கொடுப்பதைப் பற்றியும் ஆக்ஷேபனை இல்லையே?"

"உன்னிடம் வாக்குக் கொடுக்கவேண்டிய விஷயம் அல்லவே யம்மா."

"தங்களுக்கு என்னால் கெட்ட பெயர் வருமென்றால் ஒதுங்கிப் பிழைத்துக் கொள்ளுகிறேன். நீதிபதியாக இருக்கிற காரணத்தால் நம் கட்சியைச் சொல்லிச் சமாதானமாக வாழலாம் என்ற நம்பிக்கையில்தான் வந்தேன். தங்களுக்குள்ள பெருந்தன்மை, தங்கள் குமாரி கீதாவுக்கு இல்லை. அவள் திருமணம் எனது வரவினால் பாதிக்கப்படலாம் என நினைத்து அதையும் வெளிப்படையாகக் காட்டிவிட்டாள்."

"அவளை உன் தங்கை மாதிரி நினைத்துக்கொள்."

"அப்படியானால் நாங்கள் இருவரும் ஒரே வீட்டில் குடித்தனம் செய்யப் போகிறோம் என்று சொல்லுங்கள்."

"என் வரையில் ஆக்ஷேபம் இல்லை......"

"பாதிக் கிணறு தாண்டியும் உள்ளே விழுந்த கதைதானா? வேறு யாராவது குறுக்கிட்டாலும் எனக்காக வாதாடமாட்டீர்கள் என்றல்லவா தெரிகிறது? உங்களுக்கு என்மீது அன்பும் கருணையும் உண்டாகும்படி ஆண்டவன் கிருபை செய்யவேண்டும்" என்று அவருடைய தீர்ப்பை எதிர்பார்த்தாள். கண்ணை மூடிக்கொண்டு

எதிரே வழக்காடும் பெண்ணைப்பற்றியே சிந்தித்துக்கொண்டார். அவர் பேச முடியாமல் தவிப்பதை நினைந்து சிரித்துக்கொண்டவள், “நான் போய்வருகிறேன். என்னால் இரு ஜோடிகள் மனம் புண் பட்டுவிடும் என்றால் விலகிப் போய்விடுகிறேன். ஆனால், நான் சாகும் வரை தங்களை மறக்க முடியாது. தாங்கள்தான் என் வாழ்வுக்குக் குறுக்கே நின்றீர்கள், நான் கெட்டழிந்து சமூகச் சாக்கடையில் விழுவதற்கு வழிகாட்டினீர்கள்; இதை மறவாமல் நினைத்துக் கொண்டிருப்பேன்” என்றாள்.

தர்மசங்கடமான நிலையாக இருந்தது. அவர் என்ன செய்வார்? கோர்ட்டாக இருந்தால் கேசை ஒத்திப் போட்டுவிட்டு டிபன் சாப்பிட எழுந்து போகலாம். அவர் இதயத்தின் அடித்தளத்திலே, “இன்னொரு பெண் பாவமும் வேண்டுமா?” என்ற கேள்வி பூதாகாரமாக எழுந்தது. அவரால் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை.

“கலியாணம் செய்துகொண்டு ஓர் குடும்பமாக இருக்க உத்தேசமா? இல்லை உன் வீட்டோடு இருக்கப்போகிறாரா?

“கலியாணத்துக்கு அப்பால் நான் நடிப்புக்குத் தலைமுழுக்குப் போடப்போகிறேன். அவர் இட்டது கட்டளையென்று வாழப் போகிறேன். ஏக குடும்பமாக இருக்கக் கூடாது என்று நினைத்தால் பிரிந்து போய்விடுகிறேன்.

“எனக்காக ஒரு வேண்டுகோள். உங்கள் கலியாணத்தை, கீதா-வேலைய்யா, அஞ்சலை-மோகன் இவர்கள் கலியாணங்கள் நடந்தபின் நடத்திக் கொள்ளலாமா?”

“ரங்கசாமிக்கு மணம் நடக்காமல் தம்பிக்கு நடந்தால், சுற்றத்தார் சிரிக்கமாட்டார்களா? தாங்கள் அபவாதத்திற்குப் பயப்படுகிறீர்கள். கலியாணத்திற்கு அப்புறமே, அக் குடும்பத்தின் நடவடிக்கை புரிந்ததாக மற்றவர்கள் கண்ணில் காட்டிவிடலாம். இதனால் யாருக்கும் எந்தத் தீங்கும் இல்லை, கம்பும் ஒடியவில்லை, பாம்பும் செத்தது என்றபடி இருக்கும். நல்ல யோசனைதான். நான் சிறுபிள்ளை. உங்களுக்கு அதிகம் சொல்லவேண்டாம். என் வாழ்வை உங்கள் கையில் ஒப்படைத்திருக்கிறேன். என் திருமணத்திற்குத் தாங்கள் தடை செய்யாவிட்டாலும் வேலைய்யா தடை செய்வார், கீதா தடைசெய்வாள்.”

"கலியாணமான பிறகு யார் யார் எங்கெங்கே குடித்தனம் செய்கிறார்களோ, அதைப்பற்றியும் கவலை என்ன?"

"நான் பெரியவரை மணப்பதில் உங்களுக்கு மனக் கஷ்டம் இல்லையே?"

துணிந்து, "என் வரையில் இல்லை, என் குடும்பத்தார் வரையிலும் இல்லை" என்ற சொல்லைக் கேட்டு "அப்பாடா என் நெஞ்சு குளிர்ந்தது" என்றாள்.

"சந்தோஷந்தானே" என்றவர் அருகில் இருந்த கூஜாவிலிருந்து தண்ணீர் எடுக்க எழவே, குறிப்பறிந்தவள் "தாங்கள் இருங்கள், நான் எடுத்துத் தருகிறேன்" என்று எடுத்துத் தம்ளரில் ஊற்றிக் கொடுத்தாள். அவள் நடை அவருக்குப் பழையசரிதத்தை நினைவூட்டிற்று. தண்ணீரைக் குடித்துவிட்டு "ஏனம்மா நான் கேட்பதைத் தவறாக நினைக்க கூடாது" என்று பீடிகை போட்டார்.

அவர் கேள்வி அவளுக்குத் தெரியாது, பிரமாதமாகவும் எண்ணவில்லை. "என்ன கேளுங்கள், சொல்லுகிறேன். என் வாழ்வுக்கே ஒளி தரும் தாங்கள் எது வேண்டுமானாலும் கேளுங்கள்."

"உன் அம்மாவின் பெயர் என்ன?"

மிருதுலதா திடுக்கிட்டாள்; அம்மாவின் பெயர் கேட்டதால் தன்னை என்ன என்று நினைத்துவிட்டார்?

"உன் அம்மாவின் பெயர் என்ன?" மீண்டும் கேட்டார்.

"நான் சொல்ல வேண்டுமா? தாங்கள் நினைக்கிற குலமல்ல நான்."

"அதனால்தான் கேட்டேன். உன் அம்மாவின் பெயர் சந்திரமதியாக இருந்தால் சொல்லு, இல்லையென்றால்......?"

"அவள் பெயர் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"சந்திரமதிதானா? மிருதுலதா, நீ அவளுடைய மகளா?"

"ஆம்."

"உன் அம்மாவின் வாழ்வைப் பாழ்படுத்தியவன் நான்" என்று கண்ணீர் உகுத்தார். அவர் மனக் குதிரை காலவேகத்தில் பின்னோக்கிப் பாய்ந்தது. பித்துப் பிடித்தவள் போன்று இருந்தாள் மிருதுலதா.

அவர் மன அரங்கில் காலவெள்ளத்திற்கும் அப்பால் பல அம்சங்கள் வந்து அலைமோதின.

# 15. அஞ்சலையை மணப்பேன் - ரங்கசாமி

இரவு வந்தது; இருளின் ஆதிக்கம் மறைய, தெருவிலே ஒளிவிட்டு நின்ற மின்சார விளக்குகள் மட்டும், நெருக்கடியில்லாத மரக்கூட்டம் வழியாக பங்களாவிற்குள் மின்மினிப் பூச்சி போல மினுமினுத்தன. அதிலும் தென் பக்கத்திலே புதர் போல மண்டி நின்ற மாமரத்துக்குள் இருள் பம்மிக்கொண்டு, எங்கும் இருளை கரைத்து விட்டுக்கொண்டிருந்தது.

பங்களாவில் எல்லோரும் அயர்ந்து தூங்கும் சமயம். ஹாலில் உள்ள கடிகாரத்தின் ஓசைகூட இருளுக்குப் பயந்து மெதுவாக டிக்டிக் செய்கிறதோ எனத் தோற்றும். கடிகாரத்தின் ஓசை யோடு வேறொன்று அந்தக் கட்டிடத்துக்குள் போட்டியிட்டது,— பெருமாள்பிள்ளையின் குறட்டை.

பாகப்பிரிவினை சம்பந்தமாக ரங்கசாமி பேச்சைக் கேட்ட காமாட்சியம்மாள் வெகு நேரம் தூக்கம் வராமல் மனம் வெதும்பி அதே யோசனையில் இருந்தவள்கூட கண்ணயர்ந்து விட்டாள். அருகாகப் படுத்திருந்த அஞ்சலையும் தூங்கி எத்தனையோ சாமம் ஆகிவிட்டது.

அந்தப் பங்களாவில் தூக்கம் வராமல் தவித்துக்கொண் டிருந்த ரங்கசாமி குழம்பிக் குழம்பிப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். அவனுக்கு, அறைக்குள் இருந்த இருளும் வெளியே தோட்டத்து மரக் கிளைகளில் ஆடிக்கொண்டிருந்த இருள் உருவங்களும் பயங்கரமாய் இருந்தன. ஆனாலும் கொண்ட கருமத்தை முடிக்கவேண்டும். கனத்த ரிவால்வர், கைபட்டபோது ஜில்லென்று இருந்தது. அதற்குள்ளாக இருக்கும் நெருப்புக் குண்டு அவன் கைக்குச் சில்லென்று படுகிறது.

அவன் கொலை செய்யும் துணிச்சலைப் பெறுமல், செய்ய முடியாமல், பின்வாங்கும் தைரியமும் இல்லாமல், இரண்டுங் கெட்டானகத் தவித்தான். தம்பியின் செயல்கள் அவனைப் பொறுத்தவரை மோசடியாகவும், தன் வாழ்வுக்கு எதிராகவும் இருக்கின்றன. மிருதுலதா சொன்ன சொற்கள் அத்தனையும் அவனுக்கு மாற்றழியாத பசும் பொன்னகப் பட்டது. தம்பி தன்

காதலியை வஞ்சிக்க வருவதை, உண்மையாகத் தடுக்கவும், பிரி வினை ஆகாத செல்வத்தை அடையவும் ஒரே வழி? உயிரைக் குடிக்கும் குண்டு பாயவேண்டும்!

வேலய்யா பிணமாக வேண்டும், அதன் பின்னரே தனக்கு மணமாகும். கொலை செய்கிறவர்களுக்கு என்ன தண்டனை கிடைக்கும் என்று அவன் சிந்திக்கவில்லை. எப்படி முடியும்? வெறி ஏற்படும்போது வேகம் ஏற்படுமே தவிர விவேகம் கிளைக்க முடியாது. அவன் மனம் துணியாமல் மீண்டும் படுக்கையில் வந்து விழுவான்.

ஆனல்?

படுக்கையிலே வந்து அமரப்போகும் மிருதுலதாவின் உடல் அவனைத் தூக்கி உட்காரவைக்கும்; வேண்டும் போதனைகளைச் செய்யும். மீண்டும் அவன் ரிவால்வரைத் தூக்கிக்கொண்டு நடப்பான்; அவனுடைய காலடி ஓசையும் இதய ஓட்டமும் பல்லாயிர மடங்கு பெரிதாகக் கேட்கும்; குழம்பும்; மனம் படுத்துக் கொள்ளும்.

கடிகாரத்தில் மணி இரண்டு அடித்தது. இனி பின்தங்குவது இயலாது. இன்று போனல் நாளை தப்பிவிடுவான். அவனுக்குள் இருந்த ராக்ஷஸ புத்தியுடன் ராக்ஷஸ பலமும் கூடிக்கொண்டது. தன் காதலி பேச்சு உண்மை என்ற நிச்சயத்தில் திருடனைப் போல அடிமேல் அடி எடுத்து வைத்தான்.

தோட்டத்துப் பக்கமுள்ள சன்னலைக் காற்றுக்காகத் திறந்து வைப்பது வேலய்யாவின் பழக்கம். அதனல் தோட்டத்து சன்னலே தம்பியின் மரணத்திற்குத் திட்டி வாசல்; அதுவே தன் வாழ்வுக்குச் சொர்க்க வாசல். அடிமேல் அடியெடுத்து வைத்தான். என்றோ வாழப்போகும் சொர்க்கத்து இன்பம் அந்த இடத்திலே ஆயிரமாயிரம் முட்களாகக் காலில் வதைப்பதும், உடல் உஷ்ணம் தாங்காது மயிர்க் கால்கள் துடிப்பதுமாக இருந்தன. தனது அறைக் கதவைத் திறந்து வைத்தான். வரப்போகிற ஆபத்து நிலையை உடனடியாகச் சமாளிக்கத் திறந்த கதவுகள் ஆதரவு தரலாம்.

வெளிப் பக்கத்திலே அவனுக்கு முன்னும் பின்னுமாக இருளின் கொடுமை துணை நின்றது. மனதிலுள்ள இருளின் துணை

கொண்டு தட்டுத் தடுமாறி, சன்னல் கதவுகள் ஓரமாக நகர்ந்தான். சன்னலின் மேல்பக்கத்துக் கதவுகள் மட்டும் திறந்து இருப்பன போல் தெரிந்தது. அடிக் கதவுகள் திறந்திருந்தால் குறிபார்ப்பதும் சுடுவதும் சுலபம். ஒரு கையால் கம்பியைப் பிடித்து மறு கையால் சுடவேண்டும், வீட்டிலுள்ளோர் விழித்துக்கொண்டு விளக்கைப் போட்டுவிடு முன்பாகத் தனதறைக்குள் பதுங்கவேண்டும்; ரிவால்வரை எப்படியோ கொண்டுவந்து போலீஸைக் கூப்பிடும் முன் அருகாக ஓடும் சாக்கடையிலே வீசியெறிய வேண்டும்.

எல்லாம் சிந்தனைக்குச் சுலபமாக இருந்தவை. செயலுக்குக் கடினமாக இருக்கிறவை. சன்னல் கம்பியைப் பிடித்தபோது விரல்கள் நடுங்கின. இந்தச் சமயம் பார்த்து, மேலே விட்டத்தில் யோக நித்திரையில் ஆழ்ந்திருந்த பூனை விழித்து எலுமிச்சை மரத்திற்குத் தாவியது, அவனுக்கு எமனே தாவுவதுபோலிருக்க, கை நடுங்கி நிற்கவும் ஓடவும் பயந்து சுவர் ஓரமாகச் சாய்ந்து விட்டான். குதித்த அவசரத்தில் சந்தடி கேட்கவே பூனை வெருண்டு மீண்டும் விட்டத்தில் குதித்தபோதுதான் அவனுக்குத் தங்கள் வீட்டுப் பூனை என்று பட்டது.

கையிலுள்ள ஆயுதத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சுவரில் சாய்ந்து பெருமூச்சுவிட்டான். பூனையினல் இவ்வளவு பயம் ஊட்ட முடியுமென்பதை அவனல் கற்பனை செய்ய முடியவில்லை... வாழைத் தண்டாகிவிட்டது உடம்பு. அந்த விநாடி பூனை குதித்திருக்காவிட்டால், தன் தம்பியின் சடலம் ரத்தத்தில் தோய்ந்து வீடே அல்லோலகல்லோலப் பட்டிருக்கும். இவ்வளவு பயமுள்ள தான் சுட்ட பிறகு தப்பி ஓடமுடியுமா? நின்று சமாளித்து நிரபராதி போல் நடிக்கவும் முடியுமா?

தன்னைத் தயார் படுத்திக்கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வந்தவன், கோலூன்றி தள்ளாடும் வயோதிகனைப்போல் இருளிலே நடக்க ஆரம்பித்தான். கன்னி முயற்சி, அதனல் தைரியம் நிற்கவில்லை. இருள் கோரமாக இருந்தது. மனத்தின் நிலையைத் தானே இயற்கை பிரதிபலிக்கும்? தன்னையும் மீறிக் கோவென அலறும் நிலையில் தடுமாறி படிக்கட்டில் காலை வைத்தபோது 'கிளிக்' என்ற ஓசை, இருளை விரட்டி எங்கும் ஒளி பரப்பிற்று. சன்னலுக்கு அப்பால், அஞ்சலை நின்ருள். வாசலிலே கையில்

பயங்கர ஆயுதம் தாங்கி நிற்கிறுன் ரங்கசாமி. எதிர்பாராத ஒளி தாக்கவே, அவனுல் முன்னும் பின்னும் அசைய முடியவில்லை. ஒரு கணத்தில் இறந்து பிறந்தவள் போன்ற உணர்ச்சியில் நின்ற அஞ்சலைக்கு வாய் திறக்க முடியவில்லை.

தன்னைவிடத் தன் பெரிய அத்தான் நடுங்குவதைக் கூர்ந்து கவனித்தபோதுதான், அவளுக்கு நிதானம் வந்தது. கத்தலாமா அல்லது நெருங்கிச் சென்று கூப்பிடலாமா என நினைத்தாள். நினைத்த எதையும் செய்ய முடியவில்லை. நடுங்கிய குரலில் பயம் துடிக்க, 'அஞ்சலை...... விளக்கை அணைத்துவிடு' என்று மிகவும் கஷ்டப்பட்டுச் சொன்னுன். அவனுக்கு இருளைவிட ஒளி மிகவும் பயங்கரமாக இருந்தது. அடுத்த விநாடி இருள் சூழ்ந்தது.

கதவுக்கு அப்பால் நின்றவள் கரிய உருவம் தட்டுத் தடுமாறி நடப்பதைப் பார்த்தாள். தன் அறைக்குள் தள்ளாடிப் போனுன். மெதுவாகக் கதவையும் சாத்திவிட்டான். கதவு சாத்தும் ஓசையைக் கேட்டதும் மீண்டும் அவள் ஸ்விட்ச் போட்டாள். இருள் பதுங்கிவிட்டது. அந்த ஒளியிலே இன்னும் ரிவால்வாருடன் ரங்கசாமி நிற்பதாகப் பிரமை! அவளை நோக்கிச் சுடுவதாகப் பீதி; எழுந்த பயம் தாங்க மாட்டாமல் 'ஓ'வென அலறினுள் அஞ்சலை. காமாட்சியம்மாள் "என்ன? என்ன?" என்ருள். தன்னைக் காட்டிக் கொடுத்து ரகசியத்தைச் சொல்லிவிடுவாளோ என்று ரங்கசாமிக்கு குரல்வளைவரை பயம்; அவன் நினைத்தபடி அஞ்சலை சொல்லவில்லை, புளுகிவிட்டாள். எப்படிப்பட்ட புளுகு?

"ஆமாம் அத்தை, பூனை பாயில் வந்து குதித்தது, பயந்து போனேன். வெளிப்பக்கம் யாரோ குதிப்பதுபோல இருந்தது. இங்கே வந்தபோதும் அதே பூனை பொத்தென்றது! அந்தக் கருப்பும் அது குதிக்கும் சத்தமும்" என்று சொன்னுள். உண்மையில் பூனை பாயில் குதித்தபோதுதான் விழித்தாள்; ஆனுல் தான் கண்ட கோரக் காட்சியை 'ஏனே' மறைத்துவிட்டாள்.

நெஞ்சுக்கு மேலாக மூச்சு வந்தது, நினைவு வந்தது. தாயார், 'அஞ்சலை நீ பயந்துவிட்டாயா? அது வீட்டுப் பூனைதான். நீ விளக்கைப் போட்டுவிட்டுத் தூங்கு" என்று சொற்கள் கொலை புரியவிருந்த மகன் காதில் விழுந்தது. அஞ்சலைக்குத் தூக்கம் வருமா? பெரிய அத்தான் ரிவால்வரும் கையுமாகத் தன்னை

நோக்கி வருவதாகப் பட்டது. யாரைச் சுட அவர் வந்தார்? உண்மையில் அவர்தானா? இல்லை திருடனா! திருடனுக்குத் தன் பெயர் தெரியுமா? இன்னோரன்ன மலைமலையான பயங்கர சிந்தனைகள். தான் கண்ட காட்சியை நெஞ்சத்துக்குள் சிறைபிடிக்க முடியவில்லை. தகப்பனாரையாவது எழுப்பிச் சொல்லிவிட வேண்டும்.

"நான் அடுத்த அறையில் விளக்கின்றி படுத்துக்கொள்ளுகிறேன். நீ தூக்கம் வரும்வரை விளக்கு வைத்துக்கொள்; இல்லை விளக்கோடு தூங்கினாலும் சரி......" என்று காமாட்சியம்மாள் தூக்கத்தை நாடிப் புகுந்துவிட்டாள். அஞ்சலையின் பாடு அரும்பாடு ஆயிற்று. தூக்கம் வரவில்லை. துயரங்கள் வந்தன. சிறு சப்தமும் பெரிதாகப்பட்டது. ஏதாவது பயம் போகப் படிக்கப் போனால், புத்தகங்கள் அந்த அறையில் இல்லை. பழைய பத்திரிக்கைகளைப் புரட்டினால் அதிலுள்ளவர்கள் அவளைச் சுட வருகிறவர்கள் போல மனமயக்கம் தருகின்றார்கள். அந்த வேளையில் அவளுக்குப் பின் 'பொத்'தென்ற மெல்லொலி, திடுக்கிட்டுத் திரும்பினாள். எதிர்பார்த்த பூனையல்ல, ஒருகாகிதச் சுருள் வந்து விழுந்தது.

அதை நடுங்கும் விரல்கள் பற்றின. பதறியபடி விரித்தாள். "நீ கண்ட காட்சியை யாருக்கும் சொல்லாதே, நீயும் பயப்படாதே என்மீது அன்பிருக்குமானால் நான் கொலையாளி அல்ல என்பதை நீ உணர்வாய், மற்றவை நேரில், உனதன்புள்ள, ரங்கசாமி" என்று கோணலும் மாணலுமாய் எழுதியிருந்தான். அட அசட்டு ரங்கா இதையேன் எழுதவேண்டும்! உயிரை வதைக்க எண்ணுகிறவன் தன் மதியைத்தான் முதன் முதலில் வதைக்க விரட்டிவிடுகிறானோ? தான் கொலையாளி அல்ல என்று வாதிட்டுக் கொள்ளுகிறான். அஞ்சலைக்கு ஸ்திரமாகிவிட்டது. தன் பெரிய அத்தான் ரங்கசாமியே ரிவால்வருடன் நின்றது. அந்தச் சுருளையெடுத்து பத்திரமாக வைத்துக்கொண்டாள். அதுதான் அவளுக்கு இனி ரிவால்வர்; பயங்கர ஆயுதம்! பயமுறுத்தும் ஆயுதம்.

ரங்கசாமிக்குக் கடிதத்துண்டினை சன்னல் வழியே எறிந்த பிறகு தான் நிம்மதி பிறந்தது. தன்மீது மிகவும் அன்புள்ள அஞ்சலை காட்டிக் கொடுக்கமாட்டாள் என்னும் அளவற்ற நம்பிக்கையும் இருந்தது. ஆனாலும், அவள் உளறிவிட்டால் எச்சரிக்கையாக

இருக்க தன் தலையணைக்குள்ளாக ஆயுதத்தை வைத்துக்கொண்டு கண்ணை மூடினன். தூக்கம் வருமா? அவனுக்கே இருள் எமன் வேஷம் போடுவதாகப் பட்டது. மீண்டும் ஒளியை நாடினன். எதிரே கண்ணாடியில் கொலைக்குறி முகம் தன்-சாயைத் தெரிவித்தது. தன் முகம்தானு என அஞ்சினன். பார்க்க அஞ்சி அஞ்சித் திரும்பிப் படுத்தான். விடிவதற்குள் அஞ்சலையைச் சந்தித்து யாரும் அறியாமல் அவள் வாக்குறுதி பெறவேண்டும்.

ஹால் கடிகாரம் இரண்டு அடித்தது. மூன்று நான்கு, ஐந்தும் அடித்தது. ரங்கசாமி இமை மூடவில்லை. கண் வலித்தது. இமை எரிச்சல் உணர்ந்தது. வீட்டுச் சமையல்கார அம்மாள் பின் பக்கத்திலே கிணற்றுப் பக்கம் போய்விட்டதற்கு அறிகுறியான இராட்டினத்துக் கரகரப்பு, ஓலம், மாடு கன்றுகளின் "அம்மா" என்ற ஓலம் எல்லாம் சேர்ந்து பொழுது விடிவதைச் சொல்லின.

விடியும் வேளை நெருங்கிக்கொண்டிருந்தது. தோட்டத்துப் பூக்களைத் தகப்பனர் எழுந்து வரும் முன்னதாகப் பறிப்பது வழக்கம். அதனல் அஞ்சலையைத் தோட்டத்தில் வரவேற்க எழுந்து போனன் ரங்கசாமி. எத்தனை முன் யோசனை, தூக்கம் இல்லாததாலும் துக்கம் நிறைந்த மனத்தாலும் அவன் முகம் பேயறைந்தது போலிருந்தது. அஞ்சலை வழக்கம் போல நிலங்கீறிப் பொழுது புலரும் வேளையில் தோட்டத்துக்குள் பூக்குடலையுடன் வந்தாள். புஷ்பங்களை எடுக்கும்போதே அவள் மனம் இரவுக் காட்சியில் அழுந்தியிருந்தது. திடீரெனத் தன் பக்கம் ரங்கசாமி வந்ததும் 'ஐயோ' என்றலறினள். நயமும் பயமுமாக," என்ன அஞ்சலை? என்ன விஷயம்? ஏன் பயம்?" என்ருன். எதுவும் அறியாதவன் போல.

"அத்தான் உங்கள் கையில்......"

"என் கையில் என்ன? அட பட்டிக்காடே."

சிரித்தான்... வலுக்கட்டாயமாகச் சிரிக்கும்போது முகத்துக்கு எவ்வளவு அசட்டுத்தனம் அம்பாரம் கூட்டுமோ அப்படிக் கூடியிருந்தது அசட்டுத்தனம்.

"நிஜமாகவா, நான் பயந்து போனேன். இரவு முழுவதும் தூங்கவேயில்லை. உங்கள் கையில் இருந்தது துப்பாக்கிதானே?"

"வெடி குண்டு என்று சொல்லேன்."

"நிஜமாக நீங்கள் துப்பாக்கி வைத்திருக்கவில்லையா?"

"நீ ஏதாவது கன்னமின்னு வென்று சொல்லாமல் இருந்தால் என் உயிர் பிழைத்துவிடும். வந்த திருடன் என்னைச் சுட்டுப் பொசுக்காமல் போய்விட்டான்."

சமயோசிதமான பொய் என்று எண்ணாத அஞ்சலை, "என்ன, திருடனா? நான் நினைத்ததும் சரிதானா?" என்று ஆச்சர்யப்பட்டாள். ரங்கசாமிக்கு அஞ்சலையிடம் ஓர் பொய் சொல்வது தான் கஷ்டமாக இருந்தது. அதன் பின்னர் வக்கீலைப் போல நன்கு ஜோடித்துவிட்டான். அவளும் ஒவ்வொரு வார்த்தையையும் நம்பினாள். யாரிடமும் சொல்வதில்லையென வாக்குறுதியும்தந்தாள்.

"நீ யாரிடமும் சொல்லாதே. திருடன் வந்ததே தெரியாது. நாளை மறுநாள் அவன் வரலாம். நான் அவனைச் சுட்டுத்தள்ளும் வரை யாருக்கும் தெரியக்கூடாது. ரகசியமாக இருக்கட்டும். நீ மட்டும் லைட் போட்ட சமயம் என்னை அந்தத் திருடன் பார்த்திருந் தால் என்ன ஆகும்?"

"ஐயோ, உங்களை அவன் சுட்டு வீழ்த்தியிருப்பான். நான் வெறும் பட்டிக்காடு."

"ஆனாலும் நான் சொன்னதும் நீ விளக்கை அணைத்தது என் உயிரையே அணைத்துக்கொண்டது போல."

"போங்கள் அத்தான். அந்தத். திருடனைத் தேடி இருட்டில் தாங்கள் வெளியே வரலாமா? உங்கள் உயிருக்கல்லவா ஆபத்து?"

"நம்முடைய வீட்டைக் கொள்ளையடித்துப் போகிறவன் என் உயிரை மட்டும் கொண்டு போனால் போகிறான்."

"உங்கள் உயிர் உங்களுக்கு அற்பமாக இருக்கலாம். ஆனால் அந்த உயிர் உங்களுக்குச் சொந்தமல்ல."

"பின் யாருக்குச் சொந்தம்?"

"தங்கள் அம்மா, தங்கள் தம்பி, எட்டின உறவில் என் அப்பா, நான் எல்லோருக்குமல்லவா சொந்தம்?"

"பேஷ். பேஷ். நான் செத்துப் போனால் நீ கூட அழுவாயா?"

"போதும் போதும். காலையில் என்னமாகத்தான் பேசி விட்டீர்கள்," என்று சிரித்தாள். அசட்டுத்தனம் போய்த் திருட்

டுத்தனம் அவன் முகத்தில் குடியேறிவிட்டது. தனது மாய்மாலம் வேலை செய்கிறது. அவள் யாரிடமும் இனிச் சொல்ல மாட்டாள்.

இருவரும் அதிகாலையில் தாமரை கண்ட சூரியனும், சூரியன் கண்ட தாமரையும் ஆனந்தக் கதிர்களால் இதழ் விரிந்து பரிமாறிக் கொண்டு இன்பம் பருகுவதைப் போல் இருப்பதைப் பார்க்கப் பெருமாள் பிள்ளையும் காமாட்சியம்மாளும் பூரித்துப் போய் விட்டார்கள். அன்பும் வாஞ்சையும் வடிவு எடுத்தது போன்று இருவரும் அவர்கள் கண்ணுக்குப் பட்டனர்.

"பார்த்தீர்களா, அண்ணாச்சி."

"ஆமாம் அம்மா. இருவரும் மனசில் என்ன நினைத்திருக்கிறார்களோ? எதற்கும் ஒருதரத்திற்கு நாலுதரம் யோசித்தே முடிவு செய்யவேண்டும். அஞ்சலையை நீதிபதி பிள்ளைவாள் மகனுக்கு உறுதி சொல்லாதது, எவ்வளவு......"

"நல்லதாகப் போய்விட்டது. ஆனால் இவர்கள் மனசையும் கேட்டுவிடலாம்."

"கேட்டால் போகிறது."

சூரியன் இள மஞ்சள் நிறத்திலே தோட்டத்துப் பரப்பிலே காய்ந்தான். செடிகளும் கொடிகளும் முக்கியமாக ரம்மியமாகத் துடித்தன. இளம் வெயிலில் கூச்சம் பட்டு அவள் மேனியும் கருவிழிக் கண்களும் மின்னின. கோவைப் பழ இதழிலே மஞ்சள் வெயில் பட்டுச் சென்றது. பட்டுடை மேனியிலும் சஞ்சல அவயங்களிலும் ஊடுருவ நினைப்பன போல் பதிந்தன. ஈரம் பட்டவுடன் ஒட்டிக்கொள்ளும் கோந்துப் பசைபோல அவள் உடம்பிலே இளம் வெயில் நன்கு பளிச்சிட்டது. ரங்கசாமிக்கு இரவெல்லாம் அவள் தோற்றத்திலிருந்த பீதி போய், மோகன நினைவு முகர்ந்தது. வேஷம் போட நினைத்த சந்நியாசி உண்மையாகவே பக்திமானாக மாறியதைப் போல அவன் மனம் மாறி நின்றது.

"ரங்கசாமி கூடப் பூப்பறிக்க வந்துவிட்டதாகப் படுகிறது. கடவுளர்கள் பூலோகத்தை விட்டு ஓடவேண்டியது தான்" என்று சிரித்தார் பெருமாள் பிள்ளை. ரங்கசாமி மனதில் இருந்த இன்பம் மீண்டும் துயருக்கடியில் பதுங்கிற்று.

"டேய் ரங்கா, நேற்று ராத்திரி தெரியுமோ" என்று காமாட்சியம்மாள் கேட்டதும், "அதைத் தானம்மா நான் சொல்லிக்கொண்டிருந்தேன். கருப்புப் பூனையைக் கண்டு நான் பயந்துவிட்டேன். இதைச் சொன்னால் பெரிய அத்தான் நம்பவில்லை" என்றாள் அஞ்சலை.

"ஆம்பிள்ளை சிங்கம் ஏண்டா ரங்கா" என்று பெரியவர் துள்ளித் துள்ளி அருகாக இருந்த வேப்பங்குச்சியை ஒடித்தபடியே கத்தினார்.

"ஆமாம் மாமா, ஆண்பிள்ளை சிங்கம்தான்."

"அப்படியானால் பெண்பிள்ளை, பூனையோ?" என்றாள் தாயார்.

எங்கும் சிரிப்பு; காலையில் மலர்ந்த மலரின் மணம் போன்று பரவிற்று. கூட்டத்தைவிட்டு ரங்கசாமியும் அஞ்சலையும் நழுவ நினைத்தனர். காமாட்சியம்மாள் "நாங்கள் வந்தது தவறு; ஆனால் ஒன்று கேட்டுவிடவே வந்தோம். 'ஏன் அண்ணாச்சி கேட்டுவிடுங்கள்" என்றாள்.'

"நீதான் கேட்கவேண்டும்."

இருவரும் இப்படி வாதாடுவதைக் கண்ட இளம் பிள்ளைகள் இருவரும் நாணத்தால் தலை குனிந்தனர்.

"ஏனம்மா, உன் மனசு எப்படி?" என்றாள் காமாட்சியம்மாள்.

"ஏண்டாப்பா, ரங்கா உன் மனம் எப்படி?" என்றார் பல் துலக்கிய பெருமாள் பிள்ளை.

ஏக காலத்தில் "போங்க மாமா... போங்க அத்தே" என்ற குரல்களும் ஐக்கியமாயின.

"வந்துவிடு காமாட்சி. ஏகமனதாகச் சொல்லிவிட்டார்கள்" என்றார் சிரித்தபடியே.

"அப்படியானால் வக்கீலுக்குச் சொல்லிவிட வேண்டும். இனி வேறு இடம் பாருங்கள் என்று, அப்படித்தானே?" என்று ரங்கன் முகத்தைப் பார்த்தாள் தாய். ரங்கன் இருதலைக் கொள்ளியாக விழித்தான். தன் மனசைச் சொல்ல முடியவில்லை. "வேண்டாம், அஞ்சலையை மணக்க முடியாது" என்று சொன்னால் சொல்வது சுலபம். அவள், தான் இரவு பூண்டகொடிய வேஷத்தை

அவிழ்த்துவிடுவாள். அப்புறம் சிறைவாசம் போகாமல் திரும்பினால் அதிர்ஷ்டம். அதனால் அசட்டுத்தனமாகச் சிரித்துக் கொண்டான்,

அந்த அசட்டுச் சிரிப்பையே சம்மதச் சிரிப்பாக அஞ்சலை எண்ணிவிட்டாள். நயவஞ்சகத்தோடு தன் கொடியச் செயலைப் பிறருக்குக் காட்டிவிடாதிருக்கச் செய்த சூழ்ச்சியென அப்போது யாரும் எண்ணவில்லை.

"ஏன்னடப்பா சிரிக்கிறாய்?" என்றாள் காமாட்சியம்மாள்.

"ஆமாம் அம்மா."

"என்ன ஆமாம்?"

"நான் அஞ்சலையை மணந்துகொள்ளப் போகிறேன்.'

"அடடே ரங்கனுக்கு வெட்கம் எப்படி பிடுங்கித் தின்கிறது" என்று பெரியவர் கேலி செய்தார். அடுத்த விநாடி சந்தோஷம் தாங்காமல் அஞ்சலையின் கையில் இருந்த குடலையைப் பிடுங்கிப் பூமாரி பெய்தார். ஒரு பூக்கூட மருமகன் தலையில் விழவில்லை. குடலையில் இருந்தால் அல்லவா விழும்.

"இவ்வளவு நேரம் ஒரு பூக்கூட பறிக்கவில்லையா, அஞ்சலை?" என்று மகளைப் பார்த்துக் கேட்டார். அவர் கேள்விக்குப் பதில் வராததைக் கண்டு திரும்பியபோதுதான் மின்னலைப் போல அவள் பின் வாசல் வழியே வீட்டுக்குள் பாய்வது தெரிந்தது.

"அண்ணாச்சி, நீங்க இந்த வீட்டுக்குள் காலடி எடுத்து வைக்கும் போது வலது காலை எடுத்து வைத்திருக்கணும். நம்ம மனசும் குளுந்தது. ஒன்று உடனே செய்தாகவேண்டும். நீங்கள் நீதிபதி வீட்டுக்குப் போய் 'அஞ்சலையைக் கொடுப்பதாக இல்லை, சீதாவை எடுத்துக் கொள்வதாக இருக்கிறோம்' என்று சொல்லுங்கள். ஏண்டா, ரங்கா......"

"ஆமாம் அம்மா" என்று நாணத்தால் முகம் சிவக்கச் சொன்னான்.

சந்தோஷம் தாங்காமல் பல் குச்சியை ஆகாயத்தில் சுழற்றி, வீசி அதை லாகவமாகச் சர்க்கஸ் வேலையில் பிடித்தார் பெருமாள் பிள்ளை. அவர் ஆனந்தம் அவ்வாறு செய்கிறது.

அதே சமயம் அவர்கள் வீட்டுக் கருப்புப் பூனை அவரைப் பந்தலிலே உல்லாசமாகத் தேன் குடித்துக்கொண்டிருந்த மஞ்சள்

சிட்டுக் குருவியின் மீது ஒரே பாய்ச்சலில் பாய்ந்து உயிரைக் கவ்விற்று. 'சோ......சோ......' வென யார் கத்தியும் குருவியைப் போடவில்லை பூனை. இரத்தம் சொட்டக் கவ்விக்கொண்டு மரத்திற்குப் பாய்ந்து ஏறிற்று. அதன் வெற்றி உடம்பில் முறுக்கேறி இருந்தது.

சிறிது நேரம் சிட்டுக் குருவிக்கு அனுதாபம்; பிறகு உலக அநித்தியப் பேச்சு, மீண்டும் வாழ்க்கையின் பழைய ஓட்டம் போல அந்தப் பங்களாவிற்குள் உயிரின் இயக்கம் துரிதமாக நர்த்தனமிட்டுக் கொண்டிருந்தது.

"மோகனரங்கம் உனக்கு என் குமாரியில்லை. உன் தங்கையை எங்கள் வேலய்யாவுக்குக் கொடு" என்று சொல்வதற்குப் புறப்பட்டார் பெருமாள் பிள்ளை. இரவிலே நடந்த தீய சிந்தனைகளும் காலையில் நடந்த கல்யாணப் பேச்சும் தெரியாத வேலய்யா, சோம்பல் முறித்துக்கொண்டு வெளியே வந்தான்.

எதிர் அறையில் அஞ்சலையும் தன் சகோதரனும் சிரித்து மகிழும் ஒலியை அவன் காதுகள் நம்ப மறுத்தன. ஆனாலும் அஞ்சலைபோல் சிரிப்பவர் வேறு யார் என எண்ணமிட்டபோது அண்ணன்-அஞ்சலை வாழ்வை அவன் மிகவும் ரஸித்தான். பெருமையும் பெருமிதமும் அடையத் தனக்குள்ளே சிரித்துக்கொண்டு, தாயாரிடம் வந்து "அம்மா நான் விழித்திருக்கிறேனா? தூங்குகிறேனா?" என்று கேட்டான்.

"என்னடா, கேலி!"

"அண்ணாச்சி அறையில் சிரிப்பும் கொம்மாளமும் கேட்கிறது; அதுவும் அஞ்சலையம்மாவின்—மன்னிக்கவும் மதனியாரின் சிரிப்புக் கேட்கிறது! அதனால்தான் கனவா, நனவா எனக் கேட்டேன்."

தாய்க்குத் தன் அன்புப் பெருக்கை மகிழ்ச்சி வெள்ளத்தைச் சொல்லச் சொற்கள் கிடைக்கவில்லை. அத்தனை ஆனந்தம் நிறைந்த தாய்மைக் கண்களை இதுவரை கண்டதே இல்லை வேலய்யா.

## 16. நீ எனது மகள்

நீலமேகம் பிள்ளைவாள் நீதிபதியாவதற்கு முன்-இருபது ஆண்டுகளுக்குமுன் காலப் போக்கு இவ்வளவு மோசமாக இல்லை

படித்தவர்களுக்கு கிராக்கியும் அந்தஸ்தும் இருந்தது. அவர் களுடைய செயலுக்குப் பக்கபலங்கள், பலன்கள் இருந்தன. ஐம்பது ரூபாய்க்கு மேலாகச் சம்பாதிக்கிறவர்களுக்கு 'வைப்பு' உரிமைப் பொருள். வைத்துக் கொள்ளாதவர்களுக்கு மதிப்பு அப்படி அப்படித்தான். அதை அலங்காரப் பொருளாக மட்டுமன்றி உத்தியோகத்துச் சின்னங்களில் ஒன்றாகக் கருதியது. இது, அந்தக் காலம்.

சந்திரமதி தன் வாழ்வின் லட்சியத்திற்கு வழிகண்டு, அதற் காகப் பலியானது சோகக் கதை. குடும்ப வாழ்வைக் கொள்ள முடியாத குலத்தில் பிறந்தாலும், அவள் மானமாக வாழ நினைத்தது தான் விசித்திரம், அதுவும் படித்தவரையே வாழ்க்கைத் துணைவ ராக ஏற்க இருந்தாள். அவர்களிடம் பலவீனம் தான் மோசடி அதிகம் என்பதை அவள் எங்கே கண்டாள்? பகுத்தறிவு வாதிகளை விட அப்பாவிகள் இம்மாதிரி காரியங்களில் அன்புக்குப் அடிமைப் பட்டவர்கள்: அன்புக்கும் ஊர்வாய்க்கும் பயப்படுகிறவர்கள், பட்டமும் பணவுதவியும் பலவசதியும் இருப்பவர்களுக்கு இரக்க சித்தம் இருப்பது துர்லபம், அவர்களுக்கு மனித உணர்ச்சியை விட, சட்டத்தின் வரம்புகள் தளபாடம். அதனால் சந்திரமதி போன்ற அபலைகள் ஏன்றும், ஏமாறும் நிலையை அடை வார்கள்.

ஏமாற்றுகிறவர்கள், ஏமாறும் நிலையை அடைவதுதான் சோகக் கதையாகப் போய்விடுகிறது. சந்திரமதியின் அழகில் சொக்கிப்போய் நின்ற வக்கீல் நீலமேகம் தமது அந்தஸ்துக்களை அழிக்கவும் அறிவைப் பணயம் வைக்கவும் முன் வந்தார். ஒரு வழக்கில் அவர் வாதாடப் போன சமயம் தஞ்சையில் சந்திர மதியைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. மாலை வேளையில் பெரிய கோவிலைச் சுற்றிப் பார்க்கும் சமயம் அவர் சந்திரமதியின் எழி லுக்கு அடிமையானார், தமது பிரயாணத்தை ஒத்தி வைத்தார். தமது உடல் பொருள் ஆவியை அவளது பாதார விந்தங்களில் வைக்கச் சம்மதித்தார். செல்வாக்குள்ள அவருடைய கட்சிக் காரர் தமது வக்கீலின் விருப்பத்திற்குத் தூண்டு கோலாக இருந்தார். சந்திரமதியின் லட்சியம் தெரிந்தபோது தமது யோகம் வானப் படகாக மிதப்பதாக அறிந்தார்.

தாம் கல்யாணம் ஆகாத பிரம்மச்சாரி என்றார். அதற்கு மேலாக எத்தனை எத்தனையோ பொய்கள். நம்பும் வகையில் சோடனைகள். ஊரில் அந்த வழக்கில் ஆஜராகியுள்ள பிரபல வக்கீல் தன்னை மணக்கப் போகிறார், மனைவியாக ஏற்றுக் கொள்ளப் போகிறார் என்ற திருப்தி பிறந்தது. தனது குடும்பத்தாருக்கும் இசைக் கலைக்கும் அவள் பாரமாக இருக்க விரும்பாமல் சிட்டுக் குருவியாக வெளியே பறக்கச் சித்தமானாள். வக்கீல் புத்திசாலி அல்லவா, தமக்கு ரிஜிஸ்தர் திருமணத்தைப் பதிந்து கொண்டார்.

அவர் வழக்கில் பெற்றதொகை ஐயாயிரம் ரூபாய். அதைவிட விலைமதிக்க முடியாத பெண் அவருக்குக் கிடைத்தாள். சந்திரமதியின் கொள்கைப்படியே தாம் நடக்கச் சித்தமாக இருப்பதாகச் சொன்னார். ஆனால் சமூகத்திலே இரு மனைவிகளை, ஒரே வீட்டுக்குள், வாழ அநுமதிக்கும் பழக்கம் இருந்ததே தவிர்த்துச் சந்திரமதியின் குலங்கிளர்த்துப் படலம் அதற்கு இடந்தரவில்லை. வக்கீலின் சுற்றத்தார்களின் கூக்குரல், அவருடைய சமூக அந்தஸ்தில் கவலையுள்ள தோழர்கள் எல்லோரும் அவருடைய செயலைக் கண்டிக்கவில்லை. அவருடைய சமத்துவப் போக்கைக் கண்டனம் செய்தனர்.

சந்திரமதி நம்பி வந்துவிட்டாள். அவர் மணமானவர், ஒரு குழந்தைக்குத் தகப்பன் என்ற விபரம் அறிந்தாள். இனி அழுதாலும் சிரித்தாலும் அவர்தான் தெய்வமென்று வாழ வேண்டும். புதிதாக மதம் மாறியவர்கள் தமது பக்தி பிறருக்குத் தெரிய அதிகமான தெய்வ சிந்தனையைப் பேசுவார்கள்; கோவிலை நாடிநாடி வலம் வருவார்கள்; பிரார்த்தனை செய்வார்கள். அப்படித்தான் உண்மைப் பத்தினிகள் செய்ய வேண்டுமென வகுத்த வழிகளையெல்லாம் மனமோடு செய்தாள். சந்திரமதி கடமைக்குக் கட்டுப்பட்டாள். ஆனால், அத்தனையும் வேட மென அவர் மூத்த மனைவி சொன்னதிலும் வியப்பில்லை.

குடும்பத்திற்குள் பூசலும், காதல் வாழ்வுக்கு நிம்மதி குலைவும் ஏற்படவே, ஆங்கில ராஜ்ய தந்திரிகள் பிரித்ததாளும் முறையைக் கைக் கொண்டார். தனி வீடு, தனி அறை, இரு மனைவியர்களும் எக்காரணம் கொண்டும் சந்திக்காத விதத்தில்

பணத்தின் சுக சௌகர்யம் ஈடு காட்டிப் பிரிவினை செய்தார். ஆனாலும் ஒரு முளையில் இரு யானைகள் கட்டுவது எவ்வளவு ஆபத்தானது என்பதை வலிவும் வனப்பும் போட்டியிட்டு உணர்த்தின. பொருமைக் கனல்கள் கனிந்தன; சமூக பந்தத்தை, உறவினர்கள் பாசத்தைவிட்டுவிட முடியவில்லை. உடலின்பத்தை, மனசிற்கு பிடித்த மாணிக்கத்தை, இழக்கவும் முடியவில்லை. ஆற்றிலும் சேற்றிலும் கால் வைத்ததாலோ வாழ்க்கையில் முன்னுக்கு வரும் பிழைப்பு வழியில் மண் விழுந்தது

வருமானம் குறைந்தால், வாழும் வழியேது? பிரமுகர்கள் செய்கிற காரியத்தை அவர் செய்யும் நிலையேற்பட்டது. கட்டிய மனைவிக்குள்ள கௌரவம் காதலிக்கு இல்லை. காதலியின் வரவினால், குடும்ப சுகம்குறைந்தது இந்நிலையில் அவருடையமனைவியின் ஏசலும் பூசலும் அவர் தொழில் முறை வளத்தைப் பாழ் செய்தன. அவருடைய மனைவியின் சகோதரர்கள் வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் பல இன்னல்களை இழைத்த காலத்தில் சந்திரமதி.தன் வாழ்வுக்கு மயான காண்டம் வந்துவிட்டதை உணர்ந்தாள். லட்சியங்கள் ஒழுக்கத்திற்கு எவ்வளவு எதிரானவை என்பதை எண்ணினாள். படித்தவர்கள், சமூகத்திற்குச் செய்யும் அட்டூழியம் கணக்கில் அடங்கா. தனக்கு வாழ்விலே அன்பையும் பணத்தையும் தருகிற வக்கீல் நீலமேகத்தின் ஆதரவை இன்னும் விரும்பினாள். காலத்தின் போக்கினாலோ, மனைவியின் சமாதானத்தாலோ, காட்டிவந்த வாய்ச்சொல் வீரத்திலும் குறைவு கட்டினார்.

அயலூருக்கு வழக்காடப் போயிருந்த சமயம் சந்திரமதியின் வீட்டில் சிலர் புகுந்தார்கள். பயமுறுத்தினார்கள். அவள் வேண்டிய பணத்தோடு ஓடிப் போகாவிட்டால் உயிரோடு நெருப்பிட்டுக் கொளுத்துவதாகப் பயமுறுத்தினர்தள். லட்சியத்தின் முடிவு நெருப்பின் உறவுதானா? அவள் திடுக்கிட்டாள். தீயின் கொழுந்துகள் வெந்து சாம்பலாக்கித்தன் உடலை அழிக்க முடியாத நிலையில் இருந்தாள். அங்கே தங்கி நிம்மதியுடன் இனியும் அவள் வாழ்வது இயலாத காரியம்.

அவர்கள் பேச்சுக்குச் செவி சாய்த்தாள். அவள் எதிர் பாராத வகையில் இருபதினாயிரம், ரூபாய் நோட்டுகள், அவள் கையில் திணிக்கப் பெற்றன. அவளை வாக்குத் தத்தம் செய்யும்

படி சத்தியம் கேட்டனர். "நான் இனி இந்த ஜில்லாவில்கூட தலை நீட்ட மாட்டேன். எனக்கும் இந்தக் குடும்பத்திற்கும் சம்பந்தம் இல்லை" என்றாள். மும்முறை சொன்னாள்.

"நாளை போலீஸில் ரிப்போர்டு செய்து இங்கே மீண்டும் வாழலாம்என்று நினைத்தால் உன் உயிர் போய்விடும்" என்று எச்சரித்தார்கள்.

சந்திரமதிக்குத் தன் வாழ்வு பெரிதாகப் பட்டது, லட்சியம் மறைந்தது. அந்த வீட்டில் தனக்குப் பிடித்தமான பொருள்களையெல்லாம் வாரி வாரி எடுத்துக்கொண்டாள். கை நிறைய நகைகள், கழுத்தில் நகைகள், எல்லாத் தங்க நகைகளையும் பணத்தையும் எடுத்துக்கொண்டு புன்னகை மட்டுமில்லாமல் அவள் மறைந்து போனாள். போனவள் போனவளே. வக்கீல் வந்தார். கத்தினார். வலைபோட்டு அரித்தார். அவள் வாழ்வில் கசப்பு ஏற்பட்டு ஆற்றிலோ குலத்திலே விழுந்து விட்டதாகச் சொல்லித் தேற்றினார்கள்.

நாட்கள் சென்றபின்னர் தற்கொலை செய்து கொண்டதாகக் கடிதம்கூட அகப்பட்டது. எல்லாம் அவர் மைத்துனர்கள் செய்த கைங்கர்யம். சந்திரமதி அசட்டுத் தனமாக அயலூர் சென்று வக்கீலின் குடும்பத்தாரைப் பழிக்குப் பழிவாங்க நினைத்தாளா? அவர்கள் உதவி செய்தவரை தர்மமே. பணம் நிறைய கொடுத்து அனுப்பிவிட்டார்கள். தான் செய்தது தவறு. மணமானவனை மணந்த குற்றம் தன்னுடையதுதானே? தன்னையே நொந்து கொண்டு சந்திரமதி போய்விட்டாள். அவள் எங்கே வாழ்ந்தாள்? என்னவானாள் என்றெல்லாம் நீலமேகம் அறியவில்லை. காலத்தின் சுழற்சிலே. இன்ப நினைவுகள் மயங்கி இளமை கரைந்து குடும்பத்திலே கலந்துவிட்டார்.

"என்ன யோசிக்கிறீர்கள்?" என்றார் மிருதுலதா.

"உன் அம்மாவைக் கெடுத்த பாவி நான்."

"பொய். என் அம்மாவின் பூர்வோத்தரம் யாரும் அறியாதது."

"அதோ பார்"

மிருதுலதா ஏறிட்டுப் பார்த்தாள், எத்தனையோ புகைப் படங்கள் கிடந்தன. அதிலே ஒரு படம், தன் தாய் மனம்விட்டுச் சிரிக்கும் காட்சியைக் கண்டாள், அசந்துவிட்டாள். எழுந்து அருகாகப் போய் கூர்ந்து பார்த்தாள். கண்ணீர்தான் வடிந்தது.

''அழாதே அம்மா. நீ சந்திரமதியின் குழந்தை.''

''என் அப்பா வக்கீல் என்றும் அவர் பால்யத்திலே இறந்துவிட்டதாகவும் அம்மா சொன்னாள்.''

''அப்படியா உன் அம்மா மயிலாப்பூரிலுள்ள உன் பங்களாவில் இருக்கிறாளா?''

''அவள் இல்லை. இந்த உலகத்தைவிட்டுப் போய் வருஷங்கள் நான்கு ஆகிவிட்டன.

''அப்படியா இந்தப் பாவியை எப்படி எப்படியெல்லாம் திட்டினாளோ?'' நீதிபதி கண்ணீர் உகுத்தார்; வாஞ்சை நிறைந்த மனத்தினராய் அவளைத் தடவிக் கொடுத்தார். மிருதுலதா எதிர்பாராதபடி வம்பு வளர்ந்துவிட்டது. அவர் தன் குழந்தையென்றார். அம்மாவின் புதிர் நிறைந்த வாழ்வுக்குக் காரண கர்த்தா கிடைத்து விட்டார்.

''என் வீட்டிலே ஒரு படம் இருக்கிறது.''

''கையிலே வேட்டை நாய் பிடித்தபடி நானும் சந்திரமதியும் இருக்கிறோமே அந்தப் படமா?''

''ஆமாம். அந்தப் படத்திற்கும் தங்களுக்கும் எவ்வித சாடையும் ஒற்றுமையும் இல்லை.''

''வருஷங்கள் எவ்வளவோ ஓடிவிட்டன. என் அநுபவங்கள் எப்படி எப்படியோ என்னை மாற்றிவிட்டன. நல்ல சமயத்தில் நீ என்னைத் தேடி வந்தது, எனக்கு மகிழ்ச்சி தருகிறது. உன் அம்மா எங்கே வாழ்ந்தாள். எப்படி இங்கே நீ குடியேறினாய்?''

''அதெல்லாம் கசப்பான கதைகள்: கிளறுகிறீர்கள், ஐயா என் அம்மா பல சம்பவங்களை என்னிடம் சொல்லவேயில்லையே. பணத்தின் சௌகர்யம் இருந்ததனால் அவள் வாழ்வு நிலையாக நிற்க முடிந்தது. இல்லாவிட்டால்......''

''இனி, கடந்து போன காரியங்களை மறந்துவிட்டேன். எனது கடமைகளை நான் உனக்காகச் செய்யக் காத்திருக்கிறேன். நீ என்னைத் தகப்பன் என்று உரிமை கொண்டாடினால் நான் அதை ஆனந்தமாக மனப் பூர்வமாக வரவேற்கிறேன்.''

மிருதுலதா கூர்ந்து பார்த்தாள். அவள் சிந்தனையில் மூழ்கி இருந்ததற்கு அதுவே பொருள். தனது லட்சியம் கடைத்தேறப் பெரியதொரு பொம்மை கிடைத்திருக்கிறது. இதை வைத்தே

சகல ஆட்டங்களும் ஆடவேண்டும், ஆட்டி வைக்கவேண்டும். திடீரென அழுதாள்.

"ஏனம்மா அழுகிருய்?"

"நான் வந்ததே தப்பு."

"இல்லை, இது உன் பங்களா போல நினைத்துக்கொள்."

"என் அம்மாவைத் தீயிட்டுக் கொளுத்த நினைத்தவர்கள் உங்கள் மூத்த மனைவி..."

"அவளும் இறந்து விட்டாள். நானும் குழந்தையல்ல. விபரங்களை விளக்கித் தெரிவிக்க வேண்டுமா?"

"தங்கள் குழந்தைகளும் தாங்களல்லவே! அவர்கள் என்ன என்ன செய்வார்களோ?"

"பயப்படுகிருயா அவர்களைப் பார்த்து?"

"ஆமாம். நான் யாரெனத் தெரிந்தால், என்னையும் கொல்ல நினைப்பார்கள்."

"அப்படிச் சொல்லாதே. மிருதுலதா."

"தாய் எப்படியோ, மகள் அப்படி என்பது மனுேத் தத்துவம்."

"தவறு. நீ என் பணத்தைப் பங்கு கேட்கும் நிலையில் இல்லை. என்னல் ஆகவேண்டியது எதுவும் உனக்கில்லை. என் அன்பை மட்டும் பெறலாம்..."

"அதுதானே உங்கள் மக்களுக்கு உரிமையான ஒரே பொக்கிஷம். நான் யாரோ என்று நினைத்துக் கொள்ளுங்கள் அப்பா. என் வாழ்வில் எனக்காகத் தலையிட்டு எதையும் செய்ய முன் வர வேண்டாம்."

"ஏன்? நான் உன்னைப் படுகுழியில் தள்ளிவிடுவேன் என்று பயப்படுகிருயா?"

"இல்லை"

"பிறகு?"

"என் வாழ்வின் விசித்திரம், என் சமூக அந்தஸ்து, பெருமை இவைகளுக்கு உங்கள் வாழ்க்கை மாறுபட்டது."

"உன் மனம் புண்பட்டால் நான் விலகி நிற்கிறேன். ஆனுலும் உன் அம்மாவுக்கு நான் இழைத்த துரோகத்திற்குப் பரிகாரமாக உனக்குச் சில நன்மைகளாவது நான் புரியச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும்."

நீதிபதிக்கு பழைய சபலம் நினைவில் தோன்றி கடமைக்காகப் பாடுபடும் நினைப்பு வந்தது.

"நிஜமாகவா, அப்பா? என் வாழ்வைத் தாங்கள் தழைக்கச் செய்ய நினைக்கிறீர்களா?" கிளிபோல் மழலை குழறி மாறிச் சொன்னாள் தலையசைத்தார். வெட்கத்தால் எதையோ சொல்லவந்தவள் விழுங்குவதைக் கண்டார், "உன் மனதைச் சொல். நான் என் கௌரவத்தோடு பாடுபடுகிறேன். என் பாக்கியமாகக் கருதுகிறேன்." என்ற பிறகு அவள் பேசாமல் இருக்க முடியுமா? மிருதுலதா, "நான் வேலய்யாவைக் காதலிக்கிறேன். அதை அவர் விரும்புகிறார். தாங்கள் தான் இதற்குத் துணைபுரிய வேண்டும். என் அம்மாவைப் போல நானும் நிற்கதியாக நிற்கும்படித் துணைபுரிய மாட்டீர்கள் என்று நம்புகிறேன்." என்று சொல்வதை அவர் எதிர்பார்த்தாரா?

பரக்கப் பரக்க விழித்தார். தமது உதவியை வாக்களித்ததற்காகச் சிறிது கலங்கினார். "கீதாவின் மனம் என்ன ஆகும்? கீதா..தன்னை என்னவாக நினைப்பாள்?"

"முடிந்தால்தான், அப்பா, முடியாததைச்செய்ய மனம்துணிய வேண்டாம்." என்று புறப்பட எழுந்தாள்: நீலமேகம், "அம்மா குழந்தாய். கீதாவின் மனம் தம்பியின் மீது இருக்கிறது. அதனால் அண்ணனை மணந்து, இருவரும் அங்கே வாழ்வது என் மனசிற்கு எவ்வளவு இன்பமாக இருக்கிறது தெரியுமா?" என்றார்.

"சும்மா சொன்னேன் அப்பா. கீதாவின் மனசிற்கு எதிராகச் செய்து அவள் அன்பிற்கு விரோதியாக மாறாதீர்கள். என் காதல் கைகூடினாலும் கூடாவிட்டாலும் கடவுள் விட்ட வழி."

"அப்படியானால் நீ அண்ணனை மணந்து கொள்வதும் அவள் தம்பியை மணந்து கொள்வதும் என் மனசிற்கு எவ்வளவு ஆனந்தம் தருகிறது தெரியுமா?"

"உண்மைதான் அப்பா. ஆனால், தாங்கள் என் தந்தையெனப் பிறர் அறிந்தால் உங்கள் குடும்ப கௌரவம் பாதிக்காதா?"

"உன் மீது அந்த ரங்கசாமியின் காதல் இருக்கிறது. அதனால் யாரும் ஏதும் சொல்ல முடியாது; மேலும்ஒரே குடும்பத்தார்கள். பிற குடும்பமாக இருந்தால் பாகுபாடுகள் வரலாம்."

"இருந்தாலும் கலியாணம் ஆகும்வரை நம்முடைய பாந்தவ்யம் தெரிய வேண்டாம் என்பது என்னுடைய எண்ணம்."

"ஏன்?"

"வேலய்யாவின் மனம் என் தங்கை கீதாவின் மீது திரும்பாமல் போய்விடலாம்."

"நீ நினைப்பது தவறு" என்றார் நீதிபதி.

"என்னைப் போல அவளையும் நினைத்தால், என்ன நடக்கும்? நான் உலகத்தோடு பழகிவிட்டேன். எனக்கு எதிர்ப்புகளோ வீழ்ச்சிகளோ மனத்தளர்ச்சி தராதவை, தங்கைக்கு அப்படியா?"

"சரி. ஆனாலும் என் குழந்தை இப்படிப்பட்ட செல்வாக்கை அடைந்திருப்பதைக் கண்டு பெருமையடைகிறேன்."

"என் வெற்றிக்குத் தங்கள் அறிவும் அநுபவமும் துணை நிற்பதைக் கடவுள் தந்த துணையாக நான் கருதுகிறேன்."

இருவரும் முன்னைப் பழக்கங்களையும் வருங்காலக் கற்பனைக் கோட்டைகளையும் பேசிப் பேசிப் பொழுது போனதே தெரியாமல் இருந்தார்கள். இரவின் பெரும்பகுதி கழிந்துவிட்டது. தூக்கம் கண்ணைச் சுழற்றவே, அவள் எழுந்தாள். "இங்கேயே தங்கிப் போகலாம்" என்றார். அவள் தட்ட முடியவில்லை அவருடைய படுக்கையிலேயே படுத்துவிட்டாள். நீலமேகம் சாய்மான நாற்காலியில் சாய்ந்தபடியே கண்ணை மூடினார், ஆனாலும் அவர் மனக்கண் முன்பு சந்திரமதியின் இன்ப நினைவுகள், எழில் வதனம், சௌந்தர்ய மேனி, மலர்ப் புன்னகை, எல்லாம் நிழல் படம் போல ஓடிக் கொண்டிருந்தன.

விடிந்தது.

அந்தப் பங்களாவின் கலகலப்பு ஆரம்பமாயிற்று. இரவு வந்தவள் தங்கிவிட்டாள், போகவில்லை. அதுவும் மாடியறையிலேயே தங்கிவிட்டாள். இரவு முழுவதும் தூக்கமின்றி மன உளைச்சலினால் அவதிப்பட்டவர், காலைப் பொழுது வந்தும் நீலமேகம் எழவில்லை. சமையல்காரனுக்கு அதிசயம். அவர் படுக்கையில் வந்தவள் தூங்குகிறாள். கீதாவுக்கு வந்துவிட்டது விபரம். மோகனரங்கத்துக்கும் சாடைமாடையாகச் சொன்னான். பெற்ற தகப்பனையே பிள்ளைகள் மனதளவில் சந்தேகித்து விட்டார்கள். வந்த பெண்ணைத் தங்கள் குடும்பத்தைச் சின்னாபின்னம் செய்ய வந்த கோடரிக் காம்பாக

நினைத்தார்கள். இந்த உலகத்தின் அர்த்தமற்ற போக்கு. ஊன்றி உணராமல் திடுமென முடிவுக்கு வந்துவிடும் செயல்தான்.

கீழே அறையில் தந்தையின் விபரீத போக்கை அண்ணனும் தங்கையும் மௌனமாக வாதிட்டுக் கொண்டிருந்தார்கள். இந்த வேளையில் மிருதுலதா இறங்கிவந்தாள். "என்னை இன்னார் என்று தெரியுமா?" என்றாள். கீதாவின் வாய் "வாருங்கள் சிறிய தாயாரே" என்று சொலல்லத் துடித்தது. ஆனால் மோனரங்கம் நிதானமாக "வாருங்கள். மிருதுலதா. அப்பா இன்னும் எழு வில்லையா?" என்றான்.

"அவர் இரவு முழுவதும் தூங்கவில்லை. நான் வந்தது முதல் அவர் மனம் சஞ்சலமடைகிறது."

இருவரும் அவளை விழுங்குபவர்கள் போன்று பார்த்தனர். விபரீதக் கற்பனை மிருதுலதாவுக்கு உதயமாகவில்லை. ஆனாலும் தன் உறவை அவள் சொல்லிவிட்டாள். கீதா திடுக்கிட்டாள். மோகன் திடுக்கிட்டான்.

"ஆமாம் நான் சந்திரமதியென்ற பெண் ஜென்மம் இருந்ததே அவளுடைய புதல்வி, இதைத் தயவு செய்து யாரிடமும் சொல்ல வேண்டாம். இது அப்பாவின் வேண்டுகோள்.

மோகனரங்கன், "சந்தோஷம் மிருதுலதா. நாம் எல்லோரும் நல்வாழ்வில் ஒருவரை யொருவர் சந்திக்கும் பாக்கியம் கிடைத்தது. கீதா, உனக்கு நினைவு இருக்காது. எனக்குச் சின்னம்மாவின் நினைவு நன்றாக வருகிறது. எவ்வளவு பிரியமாக இருப்பாள் தெரியுமா? நான் வளர்ந்தது அங்கேதான். சின்னம்மா என்னைக் கொன்று விடுவாள் என்று நம் அம்மா சந்தேகப்படுவாள், சின்னம்மாவின் அன்பும் ஆதரவும், நம் அம்மா கூட எனக்குத் தரவில்லை" என்று ஆனந்தக் கண்ணீர் விட்டான் மோகன்.

கீதா என்ன இருந்தாலும் பெண்! தன் கௌரவத்திற்கே மாறு பட்டவளைச் சகோதரியாக எண்ணவோ, உபசரிக்கவோ மறுத் தாள். அவளால் சிரித்து உபசரிக்கவும் மனம் விட்டுப் பேசவும் முடியவில்லை.

"கீதா என்மீது கோபம் கொண்டால். நான் இப்போதே போய் விடுகிறேன். நம்முடைய தந்தையென்ற பாசத்தால் தான்

இருந்தது தவறு. அண்ணா உன் அன்பு எனக்கு நிச்சயமாகக் கிடைக்குமா அண்ணா?"

"கீதாவுக்குச் சின்னம்மாவைப்பற்றிதெரியாது. ஐந்தாறு வருடம் நான் சின்னம்மாவிடம் வளர்ந்தேன். எப்படிப்பட்ட தாயன்பு அவள் வயிற்றில் பிறக்காத குறையொன்றுதான். அவள் அன்பு என்னை அடிமைப்படுத்திவிட்டது. அவள் நினைவு இன்றும் இருக்கிறது. அம்மா எங்கோ போய்விட்டாள். அன்று நான் அழுதழுது ஜுரமாகப் படுத்தேன். ஆறு மாசம் பாயும் படுக்கையுமாக இருந்தேன். எனக்காகக் கூட அப்பாவிடம் சந்திரமதியை அழைத்து வாருங்கள்" என்று அம்மா வாதாடினாள்" என்றுசொல்லும் போது மோகனரங்கம் கண்களில் நீர் தேங்கி நின்றது.

"இருக்கலாம், அண்ணா" என்னம்மாவுக்கு கொடுமைகள் செய்து ஊரைவிட்டுத் துரத்தினாலும், பணம் கைநிறையக் கொடுக்காமல் இருந்திருந்தால் எங்கள் வாழ்வு என்னாகும். அது ஒன்றே போதும். அனாதையாகத் துரத்தாமல் பணத்தோடு துரத்திய தங்கள் தாய்க்கு நான் மிக மிகக் கடமைப்பட்டவள்" என்றாள் மிருதுலதா.

"நான் இன்று எனது சின்னம்மாவைச் சந்தித்தது போலவே நினைக்கிறேன். அவளிடம் உள்ள அன்புக்கு இணையாக நான் யாரிடமும் இன்னும் எதிர்பார்க்கவில்லை. மிருதுலதா, அம்மா எங்கே இருக்கிறாள்? அதைக் கேட்க மறந்துவிட்டேனே?"

"அவள் இறந்து ஐந்தாறு வருஷங்கள் ஆகிவிட்டன."

"இறந்து விட்டாளா?"

மோகனரங்கம் பெருமூச்சு விட்டான். கண்ணீர் மாலை மாலையாக உருண்டது. எதிரே இருப்பவன் அழுவதையும் அடைகின்ற துக்கத்தையும் பார்த்து, கூட அழுதாள். இருவரும் ஒருவரையொருவர் தேற்றிக்கொண்டனர். "கீதா இவள் நமது சகோதரியம்மா." என்று அன்பு கனியைச் சொன்னான். கீதாவுக்கு அவள் பெயரே பிடிக்கவில்லை.

"அண்ணா, நாம் தப்பி பிறந்தவர்கள். உன் அம்மாவுக்கும் எவ்வளவு பகை இருந்திருக்குமோ. நான் பார்த்தறியேன். அதைக் கீதாவின் கண்களில் இப்போது பார்க்கிறேன். அன்று உன் அம்மாவின் மனம் பட்டிருக்கும் பாட்டை, இன்று கீதாவின் கண்கள்

சொல்லுகின்றனை. நான் போய் வருகிறேன். அப்பா எழுந்ததும் சொல்லு அண்ணை. இந்த அறையை இந்த வீட்டுக்குள் வந்தது தவறு. கீதா இனி நான் காலடி எடுத்து வைக்கமாட்டேன். உன் இன்பங்களுக்கு இடையூருக, தகப்பனுரின் அன்பைப் பகிர்ந்து கொள்ளும் மனத்தோடு நான் வரவில்லை. அண்ணு என் மன்னிப்பை அப்பாவிடம் தெரிவிப்பாயா?"

மிருதுலதாவின் குரல் உலகத்து கதாநாயகிகள் அத்தனை பேரும் அடைந்த துக்கக் கலவைகளின் துயர கீதமாக ஒலித்தது. மோகனன் வாதாடியும் எடுத்துச் சொல்லியும் கேளாமல் காப்பி குடிக்காமல் புறப்பட்டாள்.

"என்ன இருந்தாலும் அப்பாவிடம் சொல்லிவிட்டுப் போ."

"வேண்டாம். அவர்கள் மனமும் புண்பட்டு இந்தவீட்டைவிட்டு நான் கிளம்ப வேண்டாம். கீதா, நானும் உன்னைப் போலப் பெண். என்னை வித்தியாசமாக நினைப்பது தவறு அம்மா. ஆனல் அன்பை வழக்காடிப் பெறமுடியாது. வாய் மூடிப்பெற முடியும், வருகிறேன்." என்று வெளியே போய்க் காரில் ஏறினள். அவள் கீழே இறங்கியபொழுது எண்ணமிட்டு வந்த கற்பனைகள் வேறு. கீதாவும் மோகனரங்கமும் தன் வரலாற்றைக் கேட்டு அநுதாபம் கொள்வார்கள். அன்பைக் கொடுப்பார்கள். அவர்களோடு தானும் வேற்றுமையின்றிக் கலந்து உறவாடி உண்டு போகலாம் என்று நினைத்தாள். அவள் நினைப்புத் தவறென்பதை கீதா உணர்த்திவிட்டாள்.

கார் புறப்படுவதை அறிவித்தது ஹாரன். ஓசையில் விழித்துக்கொண்ட நீலமேகம் பிள்ளைவாள் மேலே மாடியிலிருந்து கீழே எட்டிப் பார்த்தார். பொழுது விடிந்து இவ்வளவு நேரம் தூங்கியது ஆச்சரியமாக இருந்தது. கண்ணைக் கசக்கியபடியே "இந்தாம்மா புறப்பட்டுவிட்டாயா?" என்று கேட்டார். மோட்டாருக்குள்ளிருந்தபடியே "ஆமாம், வருகிறேன்" என்றதும், "இரு. புறப்படலாம்" என்று இறங்கினர். அந்த வயதில் அவ்வளவு வேகமாக அவர் இறங்கிய ஓசையை யாரும் கேட்கவில்லை. அத்தனை பாசம். ஓடியே போய் மோட்டார் கதவைத் திறந்து "உன்னைப் பார்த்தால் காபி சாப்பிடவில்லையென்று தெரிகிறது; முகம் சுத்தம் செய்துகொள்ளவில்லை. அப்படி என்ன அவசரம்? வா. என்

ளோடு சாப்பிடலாம். மோகன், கீதா, நீங்கள் என்ன சொன்னீர்களோ?'' என்றார் லதாவைப் பார்த்து.

''அதனால்தான் நான் தங்களிடம் சொல்லாமலே புறப்படும் நிலை வந்தது. எனக்காகக் கீதாவைக் கோபித்துக் கொள்ளாதீர்கள்.?''

''கீதா என்ன சொன்னாள்?''

''நான் கீதாவின் நிலையில் இருந்தால், இதற்குமுன் மிருதுலதாவைக் கேட்டுக்கு வெளியே தள்ளி இருப்பேன் அப்பா.''

''இறங்கு, போகலாம்' என்று கையைப் பிடித்து இழுத்து வந்தார். உட்பக்கம் நின்றபடி இந்தக் காட்சியைக் காண கீதாவுக்கு நெஞ்சு பதைத்தது. தன் அன்புக்குப் போட்டி வந்துவிட்டது. நீண்ட நாட்களாக மறைந்திருந்த அன்பு இனி எப்படிக் கவரும் கிளையுமாக வீசப் போகிறதோ? அவள் உள்ளமும் உதடும் துடித்தன. தந்தையும், தந்தையின் அபிமான புத்திரியையும் திட்ட வேண்டுமெனத் துடித்தாள். அவசரம் ஆபத்துத் தருமென, அன்பாக நடிப்பது போலப் பாசாங்கு செய்தாள்.

''கீதா'' என்றார் தந்தை.

''என்ன அப்பா''

''இது உன் சகோதரி. மோகன் இது...''

''தெரியும் அப்பா. நான் தெரிந்து கொண்டேன். எவ்வளவோ சொன்னேன். தாங்கள் வருவதற்குள் ஓட நினைத்தாள் தங்கை. உங்களிடம் அகப்பட்டுக் கொண்டாள்,'' என்று மோகன் சிரித்துப் பேசினான். கீதாவை ஒரு கையில் பிடித்துக் கொண்டார். மிருதுலதாவை ஒரு கையில் பிடித்துக்கொண்டார். இருவரையும் நோக்கி ''இருவரும் எனது குழந்தைகள். உங்கள் அன்புக்கு எதிரிடையாக நான் நிற்கவில்லை. உங்கள் சந்தோஷத்தில் எனக்குச் சம பங்கு உண்டு. இருவரும் இரு கண்கள்'' என்றார். கீதா மனம் விட்டுப் பார்த்தாள். பிறகு ஒருவரையொருவர் கட்டிக் கொண்டார்கள். இருவருடைய அன்பையும் பார்த்து நீலமேகம் ஆனந்தத்தில் கண்ணீர் விட்டார்.

''மிருதுலதா உனக்குக் காரியம் இருந்தாலும் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம். அவசரமானால் வீட்டுக்கு டெலிபோன் செய்துவிடு.''

"இல்லையப்பா. எவ்வளவு பெரிய தவறு செய்யவிருந்தேன்? கீதாவின் அன்பைச் சந்தேகித்தேன். தவருக நினைத்தேன். தாங்கள் நேரில் சொன்னதும் அவள் மனம் உவந்து விட்டாள் இந்த வீட்டிற்குள் நேற்றிரவு நான் நுழைந்தபோது இருந்த சந்தோஷத்தைவிட இன்று பன்மடங்கு சந்தோஷம் அடைகிறேன் ஏன் கீதா?" என்று தலையை நிமிர்த்திஞள்.

கீதா நாணத்தால் தலை நிமிரவில்லை. சமையல்காரன் அசந்து போஞன். காலைப் பந்தியில் சிரிப்பும் விளையாட்டுமாக ஒருவருக்கொருவர் அன்பைப் பறிமாறிக்கொண்டார்களே தவிர உணவைப் பறிமாற விடவில்லை. அந்த வேளையிலே பெருமாள் பிள்ளை சிவ பெருமான் போல நெற்றி நிறையத் திருநீரும் காது நிறைய வில்வ இலையுமாக அங்கே வந்தார். காலை ஆகாரத்துக்குப் பிறகு பேச்சு வளர்ந்தது.

"ஏது அதிகாலையில்?" என்ருர் நீதிபதி.

"சொல்வதற்குத் தயக்கமாக இருக்கிறது. அஞ்சலை, தனது பெரிய அத்தான் ரங்கசாமியை மணப்பதாகச் சொல்லுகிருள். ரங்கனும் அதையே சொல்லுகிருன். இன்று காலையில் சொன்ஞர்கள். அதைத் தெரிவித்துப் போகவே வந்தேன்"

நீதிபதி, "அதஞல் என்ன? திருமணம். இருவர் மனம் ஒத்துப் போக வேண்டிய காரியம் அதற்குமேல் என்ன இருக்கிறது?" என்று மேல்பரப்பாகச் சொன்ஞலும் உள்ளூர வருத்தம் இருந்தது.

கீதா, "அப்படியா, அஞ்சலை வாய்விட்டுச் சொன்ஞளா?" என்ருள்.

"ஏன் கீதா அஞ்சலை ஊமையா? வாய்விட்டுச் சொல்லத் தெரியாதவளா?" மிருதுலதா பலமாகச் சிரித்தாள்.

"இல்லையக்கா. அவளே சொன்ஞளா? இல்லை இவர்களாகக் கட்டாயப் படுத்திஞர்களா? அதைக் கேட்க வேண்டும் பார்."

"கீதா, கேட்டதும் சரியான கேள்வி. ரங்கசாமியும் அஞ்சலையும் மனப்பூர்வமாகச் சொன்ன விஷயம். அதை முன்னதாகத் தெரிவிப்பது நன்மை பயக்கும். அதஞல்தான் வந்தேன்." என்ருர் அஞ்சலையின் தந்தை.

"நீங்கள் சொன்னவரையில் திருப்தி. ஏன் லதா, உன் பேச்சு" என்று நீலமேகம் ஆரம்பிக்கும் முன் குறிப்பார்த்த மிருதுலதா.

"யார் யாருக்கு எப்படி முடியுமோ அப்படி நடக்கட்டும்" என்று குறுக்கிட்டாள். வேலையா செத்துப் பிணமான சேதியை அவன் எதிர்பார்த்திருந்த சமயம் அதற்கு மாறான சேதி வந்ததால் அவன் ஆச்சரியப்பட்டாள், தன் மனப்பறவையின் சிறகு ஒடிந்த துக்கத்தால் மோகனரங்கமும் துக்கமடைந்தான். இருவரும் தங்கள் தங்கள் மனோ நிலையை யொட்டிய தன்மையை நாடினார்கள்.

கீதாவுக்கு இரண்டுங்கெட்டானாக இருந்தது. எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டு மிருதுலதா காரில் ஏறிப் போனாள். அவள் மனசிலே முதல் முதல் சந்திக்க விரும்பிய பேர்வழி ரங்க சாமி. ஒரு வேளை கொலை செய்த ரங்கன் தன் பங்களாவை யடைந்தால், நான் நீதிபதி வீட்டில் அவரோடு தங்கி இருந்தது சாட்சியமாகும் என்ற நினைப்பிலே அங்கே இரவு தங்கினாள். அவள் மனோரதத்தின் அச்சாணி முறிந்தது போலிருந்தது அஞ்சலை யின் திருமணப் பேச்சு.

சிந்தனையில் ஆழ்ந்த அவளுடைய கார் பங்களா நோக்கிப் பறந்து கொண்டிருந்தது

மாம்பலத்திலிருந்து மயிலாப்பூர் எல்லை குறுகிக்கொண்டு வந்தது.

## 17, திருமணப் படலம்

காமாட்சியம்மாளுக்குக் கட்டுக்கடங்காத ஆனந்தம்; இரு பையன்களுக்கும் மனதிற்கிசைந்த பெண்கள் வாய்த்துவிட்டார்கள் என்ற பெருமை. யாரிடமாவது அக்கம் பக்கம் தன் மகிழ்ச்சி யைச் சொல்ல வேண்டும், அவள் தோட்டத்தில் நின்றபடியே பேச்சை வலுக்கட்டாயமாகப் பேசித் தன் மனத்தின் பாரத்தை இறக்கிக் கொண்டிருந்தாள். நல்ல கைதேர்ந்த ஜோஸ்யர் நாலாவது பங்களாவிலிருந்து வந்துவிட்டார். அவர் வந்த விபரம் வேலையா வுக்குத் தெரிந்தபோது நம்ப முடியவில்லை. முன்னிரவிலே தமையன் பாகம் பிரிக்க நினைப்பதையும் பிரித்துக் கொடுக்க வேண்டியதின் அவசியத்தையும் தாய் சொல்லியிருந்தாள், ஒரு இரவிலே எவ்வளவு மகத்தான மாறுதல்,

அஞ்சலையும் அண்ணனும் வாழப் போவதை, தானும் கீதா வும் வாழப்போவதை எண்ணியெண்ணிச் சிரித்தான். தன்

தாயின் ஆனந்தம் எப்படியெனக் கற்பனை செய்தான். பாகப்பிரிவினை இனி நடக்காமல் போகலாம், எல்லோரும் ஓர் குடும்பமாக வாழ்வது அவனுக்கு இனிமையாக இருந்தது. அண்ணனை நேரில் கண்டு, தன் வந்தனத்தைச் செலுத்த வெண்ணி வலுக்கட்டாயமாக அவன் அறைக்குள் நுழைந்தான். அந்த அறையில் கன்னத்தில் அடிப்பட்டதற்கு அப்புறம் அவன் போனவனல்ல. முன்னைப் போல சுவர்களில் ஹாலிவுட் முதல் தமிழ்நாட்டு நட்சத்திரங்கள் சிரிப்பதும், பல்லைக் காட்டுவதும், முதுகை நெளிப்பதும், கண் சிமிட்டுவதும் அலங்கோலமான உடையில் இருப்பது இன்னும் இருந்தன. ஆனால் மேஜையிலே சிறிய வெள்ளி ஸ்டாண்டில் மூத்துப் பற்களைக் காட்டிக் கொண்டு நின்ற மிருதுலதா படத்திற்குப் பதிலாக, தன்னால் எடுக்கப்பட்ட அஞ்சலையின் அழகு போட்டோ இடம் பெற்றிருந்தது. அப்படம் மேஜையில் மேல் இருந்தது; தமையன் நெஞ்சில் அஞ்சலை இருப்பதாக உணர்ந்தான்.

"அண்ணாச்சி.' என்றான், தமையன் இல்லையென்பதை உணராத வேலையா.

"இல்லையே. அவர்கள் இப்போதுதான் வெளியே புறப்பட்டுப் போனார்கள்" என்று அங்கே சுத்தம் செய்து கொண்டிருந்த அஞ்சலை சொன்னாள்.

"ஆஹா. உத்தரவு, மதனி" என்றான் சிரித்தபடியே. தமையன் மனைவி என்ற கௌரவம் கொடுத்துவிடவேண்டும்; இனி மாமன் மகள் அல்ல அவள்.

"என்ன சின்ன அத்தான் கேலியா செய்கிறீர்கள்?"

"இனிமேல் தாங்கள் என் மதிப்புக்குரியவர்கள்."

"அதற்குள் எனக்கு மரியாதை பட்டம் கொடுத்தது போதும். நான் இன்னும் மாமன் மகள்தான்.

"என் அம்மா சொன்னாள். உங்கள் அப்பாவும் சொன்னார்கள். சூரியன் மேற்கே உதித்து விட்டதோ என்று ஆச்சரியப்பட்டேன். அந்தச் சந்தோஷத்தை அண்ணாச்சியிடம் தெரிவிக்கத்தான் இப்படி வந்தேன். ஆமாம் இரவு கருப்புப் பூனை வந்ததாம். தாங்கள் பயந்து கூச்சல்..."

மேலே வேலையா பேசுமுன், பூனையென்றதும் கைநடுங்கி, துடைத்துக்கொண்டிருந்த பிங்கான் யானையைக் கீழே போட்

டாள். ஊதுபத்திப் புகையைச்சுழல்விடும் யானை அது சுக்குநூறாக உடைந்துவிட்டது. அவளுக்குத் திடீரென உடல் நடுங்குவதையும் அவள் கண்களில் பயம் மிதப்பதையும் கண்டவன், "ஏன் மதனி இப்படி பயந்துவிட்டீர்கள்?" என்றான். பீங்கான் விழுந்த சப்தம் கேட்டு காமாட்சியம்மாள் வந்தாள். பீங்கான் தூள் சிதறிக் கிடப்பதையும் மருமகள் அஞ்சலை பயந்து நிற்பதையும் பார்த்து. "கை தவறிவிட்டதா?" என்று கேட்டாள். வேலைய்யா பூனையின் விருத்தாந்தத்தைச் சொன்னான்.

"இழவெடுத்த பூனையின் பேச்சை விட்டுத் தொலை. அவள் பயந்து சாகிறாள்" என்று அஞ்சலையைத் தட்டிக்கொடுத்து ஆறுதல் சொன்னாள். அஞ்சலையின் நினைவிலே பூனைக்குப் பதிலாகக் கரிய உருவம் கனத்த ரிவால்வருடன் நின்ற காட்சி நினைவிற்கு வரவே கை நடுங்கி யானையை விட்டு விட்டாள். தன் அத்தான் கேட்டுக்கொண்டே குறிப்புப்படி அவள் பிறருக்குத் தெரிவிக்கவில்லை. தெரிவிக்கக் கூடாது என்பதும் அவள் நினைப்பு. ஆனால் திருடன் மீண்டும் வராமல் இருக்க வீட்டாருக்குத் தெரிந்திருப்பது நல்லதுதானே? சொல்லிவிட்டால் நல்லது. இப்படியும் யோசனை வரும். சொல்லத் தயங்கினாள்.

அந்த வேளையில் ஜோஸ்யர் தலைநீட்டவே, மேலே அவள் சிந்தனைக்கும், மனசின் பாரத்திற்கும் விடிவு ஏற்பட்டது. அவரை வரவேற்று முகூர்த்த நாள் குறிக்கும்படி சொன்னார்கள். அவர் கணக்குப் போட ஆரம்பித்தார்.

"மாமா எங்கேயம்மா?" என்றான் வேலைய்யா.காரணத்தோடு தான் கேட்டான். அவர் இருந்தால், பாதி ஜோஸ்யத்தின் வண்டவாளம் வெளியாகும்.

"அவர்கள் சீதா வீட்டிற்குப் போயிருக்கிறார்கள். அஞ்சலையைப் பெண் கொடுப்பதாக இல்லையென்ற விபரம் தெரிவிக்க"

"ஓகோ"

"சொல்லிவிட வேண்டாமா?"

"சரி. நான் ஆபீஸ் போக வேண்டும். வெந்நீர் எடுத்து வைத்துவிடச் சொல், அந்த அம்மாளை."

சமையல் கட்டையும் தாண்டிக் காமாட்சியம்மாள் உத்தரவு பிரயாணம் செய்தது. கலியாணச் செலவுகள், நகை நட்டுகள் சம

எடை, சம அந்தஸ்துடன் செய்யவேண்டுமென்றும், கலியாணத்திற்கு அப்பால் சொத்தைச் சம பங்காகப் பாகப் பிரிவினை செய்வதென்றும் ஒரு கோடியை நாலுக்காகச் சொல்லி வைத்தாள். தாயின் பேச்சுக்கு மாறுபட்ட பிள்ளையல்ல, வேலய்யா, தாயின் மனத்திற்கு உகந்தபடியே சகல காரியங்களையும் நடத்தலாம் அதில் தனக்கென எந்தத் தனித் தன்மையும் வேண்டாமென உறுதி கூறினான். இவ்வளவு சுளுவாகவும் சுலபமாகவும் குடும்பத்திலே சுப காரியம் நிகழப் போவதானால் யாருக்குத்தான் தலைகால் புரியும்?

ஜோஸ்யர் அந்த மாதத்தில் இரு கல்யாணத்திற்கும் ஒரு முகூர்த்தம் குறித்துத் தன் சிரமத்திற்கு முன் பணமும் பின்னால் கல்யாணத்திற்குத் தன் உத்தரவையும் பதிந்துகொண்டு புறப்பட்டார். வேலய்யாவின் நெஞ்சிலே புதைந்திருந்த ரகஸியத்தைச் சொன்னான். லட்ச ரூபாய் தமையன் எடுத்துக்கொண்டதும் இதை மிருதுலதாவிடம் கொடுத்ததும் அதனால் மானேஜர் நீக்கப் பட்டதும் மகன் சொல்லத் தாயார் புரிந்துகொண்டாள்.

"இனி அப்படி நடக்காது, அந்தச் சினிமாக்காரியின் உறவும் விட்டுப் போகும்."

"பணத்திற்காகச் சொல்லவில்லை. நாளை உன் மருமகள் கண்ணைக் கசக்கி நின்றால் உன் மனம் வேதனைப்படும். அதனால் தீர விசாரித்து இந்தக் கல்யாணத்தை ஏற்பாடு செய்."

"இல்லையடா. தம்பிக்குள்ள முன் யோசனை தாய்க்கும் இருக்கும். அஞ்சலையின் சாதுரியம் யாருக்கு வரும்? உன் அப்பாவின் போக்குக்கு உன் அண்ணன் போக்கு உரைபோடக் காணாது. எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நாளை அவன் கெட்டுப்போனால், நாம் குறுக்கே நின்று தடுக்க முடியுமா?"

"யோசித்துக் கொள். அஞ்சலையம்மா உன்னைக் குறை சொல்லக் கூடாது."

"வியாபாரத்தை நீ கவனிப்பது, அதற்கு ஒரு சம்பளம் தனியாக எடுத்துக்கொள், குடும்பச் சொத்துக்களைச் சம பங்காக பிரித்துவிடு. லாப நஷ்டம் அவரவர் பக்கம். உனக்காக அவன் மனம் கோணவேண்டாம். நீ அவனுக்காகப் பாடுபடவும் வேண்டாம். தன் பணம், தன் பொறுப்பு என்றால் அழிக்கும் போதும் ஆக்கும்போதும் யோசனை இருக்கும்."

"ஆகட்டும் அம்மா. எதற்கும் அண்ணாவின் மனசுப்படியே இந்தத் திருமணம் நடக்கிறது என்பதை ஒன்றுக்குப் பத்து முறை வற்புறுத்திவிடு; நான் சொன்ன லட்ச ரூபாய் சமாசாரத்தையும் கேட்டுவிடு. உனக்குத் தெரிந்திருக்கும் விபரம் அறிந்தால் பயம் நெஞ்சில் இழையும். திருமணம் நடக்கும் வரை சுபமாகக் காலம் ஓடவேண்டும்" என பெருமூச்சு விட்டான்.

"கடவுள் துணை நிற்பார்."

"பழைய இரும்பு கொள்முதல் செய்ய ஜப்பானிலிருந்து ஒரு கம்பெனி ஆள் வந்திருக்கிறான். நான் இரவுதான் வருவேன். போய் வருகிறேன்" என்று விடைபெற்றுச் சென்ற பிறகுதான் காமாட்சியம்மாள் மனசிலே பொங்கிய துன்பம் பொத்துக் கொண்டு வந்தது. லட்ச ரூபாய் எடுத்துக் கொடுத்துவிட்டதைத் தன். னிடம் சின்ன மகன் சொல்லியதும், பெரிய மகன் சொல்லாமல் இருந்ததும் துளைத்தன. பணத்தின் அருமை தெரியாமல் நடந்து விட்டதை எண்ணி எண்ணிக் கண்ணீர் விட்டதோடு சரி. தாயும் மகனும், தனியாக பேசிக்கொண்டிருந்து வேலய்யா போய்விட்ட பிறகு அஞ்சலை வந்தபோது அத்தை வருந்துவதையும் கண்ணீரின் உவர்க் கோடுகள் தடந்தடமாக பதிந்திருப்பதையும் கண்டாள்.

"ஏன் அத்தை அழுகிறீர்கள்?" என்ற குரல் கேட்டுத் திடீ ரென்று முந்தானையால் துடைத்து நிலையைச் சமாளித்தாள். தன் முகத்தைப் பார்த்து அஞ்சலையும் துயரத்தின் ரேகை படரவிட்டுக் கொள்வதை விரும்பவில்லை. ஏதோ காரணம் சொன்னாள். அஞ்சலைக்கு முதல் நாள் தமையன் ரிவால்வர் சகிதம் இருந்ததைத் தம்பி சொல்லிவிட்டாரோ, அதை நினைத்துத்தான் அழுகிறாளோ என்று நினைத்தாள். தானும் சொல்ல முடியாதபடி சபதம் குறுக் கிட்டது. லட்ச ரூபாய் சமாச்சாரத்தை அஞ்சலைக்குச் சொன்னால் அவள் மனம் நோவலாம். இப்படியே இருவர் மனசிலும் இரு ரகசியங்கள் புதைந்துவிட்டன.

"உங்கள் கலியாணக் கோலத்தை, உன் மாமா இருந்து பார்க் கக் கொடுத்து வைக்கவில்லையே. அதை நினைத்துத்தான் என் நெஞ்சம்..........."

விதவையின் கண்ணீர் என்றறிந்ததும் அஞ்சலை எதுவும் பேச முடியவில்லை. வாழ்க்கையில் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஏதா

வது காரணத்தை முன்னிட்டுப் பொய் சொல்வது தவிர்க்க முடியாத காரணம். லட்ச ரூபாய் கொண்டு கொட்டித் தொலைத்து விட்டதை எண்ணிக் காமாட்சியம்மாள் மனசிற்குள் புழுங்கினள். கையில் ரிவால்வர் வைத்திருந்ததை மனசிற்குள் வைத்து புழுங்கினள், அஞ்சலை. இருவரும் ஒருவரை ஒருவர் ஏமாற்றப் பல காரணங்கள் சொல்லிக்கொண்டார்கள். இருவருடைய மனத் துயருக்கும் காரணம், ஒரே நபர் ரங்கசாமி.

அவன், இந்த மனங்களின் துயரை அறியாமல் மேலும் பாவச் செயல் புரிய எங்கு அடைக்கலம் புகுந்தானே, அங்கே சரணுகதிப் படலம் படித்துக் கொண்டிருந்தான்.

அழகுக்கு அடிமைப்பட்டு ஒளியை நாடி வரும் விட்டில் பூச்சிகள் போல் ஆண்கள் வந்தார்கள். அழகோடு இளமையும் இருந்ததனல் வயோதிகர்கள் கூட நப்பாசைப்பட்டு வந்தார்கள். அழகோடு இளமை, அத்தோடு பணம் ஆக மூன்று கலங்களும் பரிபூரணமாக இருந்ததினல் மிருதுலதாவின் மீது வஞ்சகர்கள், காமுகர்கள், பெரிய மனிதர்கள் போர்வைக்குள்ளான கனதனவான்கள் எல்லோரும் மண்டியிட்டு அவள் மலர் புன்முறுவலுக்கு ஏங்கி நின்ருர்கள். ஆனல் அவள் உடல் பசி என்ற போதையில் காலந்தள்ள நினைத்திருந்தால் இன்று அவள் அழகு தேய்ந்து பணம் குவிந்திருக்கும். அந்தஸ்தும் செல்வாக்கும் காலியான பவுடர் டின்களைப் போலக் குவிந்திருக்கும், மலைமலையாக. அவள் சினிமாத் துறையில் புகழ் பெற்றும் சாகஸத்தால் தானே முன்னுக்கு வந்தாள், வாழ்க்கைத் துணைக்குத் தான் விரும்பிய ஆடவனையே மணக்கும் வரை 'நாடகம்' போட்டு எல்லோருக்கும் அபிமான சுந்தரியாகக் காட்சி தந்தாள்.

இனி அவள் வாழ்வில் அன்புக்கு ஒரு வாய்க்கால், வாழ்க்கைக்கு ஒரு தோணி கிடைக்க வேண்டும். அவள் கிட்டிய பொருள் எட்டிப் போகவே, தன்னை மட்டும் பெரிதாக நினைத்ததால் அவள் மனத்தின் அன்பு முழுதும் குரோதமாக வளர்ந்தது. ஆங்கிலேய ராஜ தந்திரிகள் போன்று நரியை வைத்தே நரியை வேட்டையாட நினைத்தாள். அவள் எண்ணத்திற்குக் கையாளாக இருந்தவன் அண்ணன், மடியாக இருந்தவனே அவன் தம்பி.

அன்று நீலமேகம் பிள்ளை வீட்டில், பெருமாள் பிள்ளை சொன்ன சொல் அவளுக்கு நெருப்பாக இருந்தது. ரங்கசாமி கொல்லவில்லை; வேலையா மடியவில்லை. இனித் தானே புகுந்து காரியம் சாதிக்கவேண்டும் என்று திட்டமிட்டாள். யாரையும் உள்ளே அனுமதிக்க வேண்டாம் என்று வெறுப்போடு குண்டப் பாவுக்குச் சொல்லியிருந்தாள். குண்டப்பா, மிருதுலதாவின் நோக்கம் தெரிந்து பிடிகொடுக்கும் ஆள். ரங்கசாமி வந்து கெஞ்சிய போதும் அவனை உள்ளே அனுமதிக்கவில்லை; ரங்கசாமிக்கு ரோஷம் வந்தது.

"நான் வந்திருக்கிறேன் என்று சொல்."

"ஐயோ, எஜமான், தாங்கள் இன்னாரென்று எனக்குத் தெரியாதா? அம்மா படுகோபமாக இருக்கிறார்கள். நான் உள்ளே போக முடியாது. எமனே வந்தாலும் உள்ளே போனால் செத்துப் போவான். இன்னும் இரண்டு மணி பொறுத்து வாருங்கள். அம்மா கோபம் ஆறிவிடும்..." நயமாகச் சொல்லி ஆளை வெளியே அனுப்பிக்கொண்டிருந்தான். ரங்கசாமிக்குத் தேர்தல் தோல்வியினால் மனம் மாறுபட்டு "என்ன இருந்தாலும் சாதிப் புத்தியைக் காட்டிவிட்டாள்" என்ற நினைப்பு ஓடிற்று. தன்னுடைய பலவீனத்தை அவளிடம் விவரிக்க வந்தால் அவள் நடையேறக் கூடாதபடி தடுத்துவிட்டாள். இனி அவள் முகத்தில் விழிப்பதில்லை என்ற வைராக்கியத்தோடு திரும்பினான்.

லட்ச ரூபாய் வந்த விபரம் மட்டும் குண்டப்பாவுக்குத் தெரியும். அதனால் அம்மாவிடம் சற்று அனுமதி பெறத் தலையை நீட்டினான் குண்டப்பா. "என்ன?" என்றாள். தலையைச் சொரிந்தபடியே வந்த நபரின் பெயரை உச்சரித்தான். வேண்டா வெறுப்பாக 'அனுப்பு உள்ளே' என்றாள். ஓடிப்போய் "வாங்க சார்......அம்மாவிடம் போய்ச் சொன்னேன். அனுமதி தந்தார்கள்" என்றான். வைராக்கிய புருஷன் நெஞ்சிலே, சபலம்; இந்தச் சபலம் யாரைவிட்டது? ஒரு கணம் முன் வைத்த கால் பின் வாங்கத் தயங்கிற்று.

"சும்மா வாங்க." என்றான் குண்டப்பா. திரும்பிய ரங்கசாமி குழைய நினைக்காமல், சூடாக நாலு வார்த்தை திட்டுவதென்ற மனப்பான்மையுடன் நுழைந்தான்.

உள்ளே நுழைந்த ரங்கசாமியை மிருதுலதா அன்பொழுக அழைத்தாள், ஆசைகனியப் பார்த்தாள், தேன் சிதறப் பேசினாள், "வாருங்கள் வாருங்கள். புது மாப்பிள்ளைவாள், வாருங்கள்" என்றாள். அவனுக்கு எப்படி இருக்கும்?

"என்ன சொன்னாய்?"

"அஞ்சலையின் அன்பரே, வருக! உங்கள் இல்வாழ்க்கையில் இன்பம் பொங்கட்டும். இன்றுபோல் என்று மிருங்கள் என்று வாழ்த்துரை வழங்கிவிட்டேன்."

அவள் பரிகாசப் பேச்சு நெஞ்சை தீய்த்தது. தான் செய்த வாக்குறுதியை 'இவள் எப்படி அறிந்தாள்? யார் வந்து சொன்னது?

"அது பொய்!"

"எது பொய்? தாங்கள் அஞ்சலையை மணப்பது பொய்யா? என்னை ஒரு முறை ஏமாற்றலாம்; இருமுறை ஏமாற்றலாம், மூன்றும் முறை ஏமாற்ற முடியாது. முடிந்தாலும் ஏமாற்றுதீர்கள்"

"மிருதுலதா உனக்கு யாரோ பொய் சொல்லி இருக்கிறார்கள்"

"பொய்யா? உண்மை, என்ன?"

ரங்கசாமி இரவில் சுடப்போனது முதல், நடந்தது வரை சொன்னான். உற்சாகமாக, 'உம்' போட்டு வந்தாள். நடந்தவை யெல்லாம் சொல்லிவிட்டு பித்தனாக உட்கார்ந்திருந்தான் ரங்கசாமி.

"பேஷ். பேஷ், அஞ்சலைக்குப் பயந்து அவளை மணப்பதாகச் சொன்னீர்கள். எனக்குப் பயந்து என்னை மணப்பதாகச் சொல்லுகிறீர்கள் இன்னும் யார் யாருக்கு வாக்கு தத்தம் செய்யப் போகிறீர்கள்?"

"லதா நிலைமையைச் சமாளிக்க அப்படி ஒரு பொய் அவசிய மாகப்பட்டது."

"பொய் பேசுவது உங்களுக்கு எப்போதும் அவசியமாகப் போய் விட்டது. உண்மையாகச் சொல்லுகிறேன். தாங்கள் அஞ்சலையோடு ஆனந்தமாக இனிது வாழுங்கள். அவளுக்காவது உண்மையுள்ளவராக வாழ்ந்தால் போதும்."

"அதைச் சொல்லாதே நான் சொல்வதைக் கேள்."

"உங்கள் பணந்தானே. இருங்கள். எடுத்துத் தந்துவிடுகிறேன். அடடா அதை முன்பாகவே சொல்லக் கூடாதா?"

அவனையும் அவன் பேச்சையும் அலட்சியம் செய்ய பாவனை யில் எழுந்தாள். ரங்கசாமிக்கு இதயமே வெடித்து மூர்ச்சை வந்து அமுக்குவதாகப் பட்டது.

"பணம், யார் கேட்டது?"

"நீங்கள் கேட்டு நான் கொடுக்கலாமா? என்னைக் குறிப்புத் தெரியாத அசடாக நினைக்க வேண்டாம்."

ரங்கசாமி எழுந்து, பணப்பெட்டி அறைக்குள் லதா நுழை யாதபடி வழி மறித்தான். இருவர் கண்களும் சந்தித்தன. அவள் கண்களிலே எவ்வளவு வெறுப்பு? எவ்வளவு அவமானம்? புலி யின் கொடிய கண்களைப் பார்த்த ஆட்டுக்குட்டி போல 'பே...பே பே' யென்று உளறினான். அவன் புத்தியும் பேச்சும் நிலையற்றுப் பம்பரமாகச் சுழன்றன. தன் பலவீனத்தை ஒப்புக்கொள்ள வந்தவன், தனக்குள்ள ஆண்மையைக் கற்பனை செய்தான். அவள் கண்களின் கோபப் பார்வை அவனிடம் எதிர்ப்பு உணர்ச்சி யைத் தூண்டிற்று, அவன் வீரத்தைத் தொட்டு உருவாக்கிற்று.

"அன்பரே தயவு செய்து என்னை அவமதித்து விளையாடாதீர் கள். ஆண்களின் கைப்பொம்மையாக நான் வாழமாட்டேன். எனக்கும் மானம் உண்டு. இதயம் உண்டு. உங்களைப் போல நானும் கோழையல்ல."

எங்கிருந்துதான் அந்த வீரம் வந்ததோ. தீப்பற்றிய வெடி மருந்து பூமியைவிட்டு ஆகாய மார்க்கமாகக் கிளம்பி நெருப்பைக் கக்குவது போல அந்த அறையெங்கும் எதிரொலிக்க, "யார் கோழை, நானா கோழை?" என்று கத்தினான். எதிரே நிற்பவனுக் குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்ற நிலையில் பயந்து போனாள் மிருதுலதா. தன் பார்வைக்கு அத்தனை விஷத் தன்மை இருப்பதை அவள் கண்டாளா? வாய்விட்டு எதையாவது கத்தி விடுவானோ என்ற பயமும் பிடித்துக் கொண்டது. பதமாக இருப்புக்குச் சூடு போட்டு உருக்காக மாற வேண்டுமேயல்லாது தெறித்து வீணாகி விடக் கூடாதே? காந்தத்தின் கவர்ச்சியை இழந்துவிடக் கூடாதே? அதனால் உணர்ச்சியை உண்டாக்கிக் கொண்டு ஆடுகிற ஆட்டத்திற்குத் தாளம் போட வைத்தாள்.

"மன்னியுங்கள் நான் என்ன இருந்தாலும் பெண்தானே, அஞ்சலையை மணக்கப் போகிறீர்கள் என்றதும் துடித்து விட்டது."

"விட்டுத் தள்ளு. நான் ரங்கசாமியாக இருந்தால் இன்னும் ஒரு வாரத்தில் முடித்து விடுகிறேன்."

மோகம் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது; அந்த நிமிடம் ரங்கசாமிக்கு எதிரே வேலய்யா வந்திருந்தால் சுடப்பட்டிருப்பான். அப்படிப்பட்ட தலைக்கிறுக்கு வேகத்தை அதிகமாக்கினாள் மிருதுலதா.

"ஐயோ பாவம், அவர் என்ன செய்வார் அப்பாவி?"

"இல்லை. கர்வம் பிடித்த பயல், பணம் தன்னுடையது என்ற மமதை; உன்னை மணக்க முயற்சி செய்வான்."

"உங்கள் தம்பிதானே."

"இல்லை என் விரோதி."

"அவர் விலகிப் போய்விட்டால்? வேண்டாம். நான் அவசரப் புத்தியால் தங்கள் மனதிற்குத் தொல்லை தந்துவிட்டேன். அதை எடுத்துக்கொண்டு வந்துவிட்டீர்களா?"

"எதை?"

"ரிவால்வர்"

"நான் முடித்துவிட்டே வந்து நிற்பேன்."

ரங்கசாமிக்கு வெறி முறுக்கேறி நின்றது. என்ன செய்கி றோம் என்ற பிரக்ஞையில்லாமல் எதிரே நின்றவளை அணைத்து முத்தமிட்டான்; அவளை அப்படியே தள்ளிவிட்டு மடமடவென ஓடிக் காரில் ஏறிக்கொண்டான். மிருதுலதா "மிஸ்டர், மிஸ்டர்" எனக் கூப்பிட்டும், "நான் சபதம் முடிக்காமல் வரமாட்டேன்" என்று போய்விட்டான்.

அவன் நரம்புகளிலே 'பழி வாங்கு! வாங்கு பழி!!" என்ற என்ற சப்தம் துடித்தது. தன் சொத்துக்கும் மன ஓட்டத்திற்கும் என்றும் தம்பி எதிராளி என அறிவு சொல்லிற்று. தன் மிருது லதாவை எப்படியாவது வஞ்சித்துக் கொள்வான் என்று வரும் காலம் உணர்ந்தான், அந்த ஞானி. அவன் போய்க்கொண் டிருந்த வேகம் கணக்கு வழக்கு அற்றது. மாம்பலத்தைவிட்டுத் தன் பங்களா வருவதற்குப் பதில் அவன் எங்கோ போய்க் கொண்டிருந்தான். கொஞ்சம் அமைதியேற்பட்டபோதுதான் பல்லாவரம் பக்கம் தான் போய்க்கொண்டிருப்பது தெரிந்தது.

காரை திருப்பி வீட்டுக்கு வந்தபோது அவன் எதிர்பாராத

# 18. பங்களூர் ரிவால்வார்

"பங்களூர். முக்கியம் ஏலத்துக்கு நல்ல சாமான்கள் கிடைக்கிறன. உடனே புறப்படவும்" என்ற தந்தியைப் பார்த்தது முதல் வேலய்யாவுக்கு விபரத்தை விட்டு மனம் வேறு எங்கும் போகவில்லை. குறைந்த பட்சம் ரூபாய் பதினாயிரம் கிடைக்கக் கூடிய லாபத்தை விடவும் மனம் இல்லை. அதனால் போய்விட்டுத் திரும்புகிறது என்று முடிவு செய்தான். அது பொய்த் தந்தியென்று அவன் எங்கே கண்டான்? அவனிடமிருந்து வேலையை விட்டு விலகிய மானேஜர் வெறுப்பினால் பழி வாங்கும் பொருட்டு இந்த மாதிரி செய்தார். இந்த உதவி தோன்றாத் துணைவனாகச் செய்த உதவி, இல்லையெனில் அண்ணன் ரிவால்வாருக்கு இரையாகியிருப்பான்.

பிரயாணம் திடீரென்று நிச்சயிக்கப்பட்டதால் வீட்டுக்கு வந்து தாயிடம் சொல்லிவிட்டுப்புறப்பட்டான். எவ்விதக் கலியாண ஏற்பாட்டையும் தன் அநுமதியில்லாமல் வாக்குறுதி செய்ய வேண்டாமென்று சொல்லிவிட்டான். அம்மாவுக்கு என்னென்ன வாங்கிவர வேண்டுமென்று கேட்டான்.

"அஞ்சலையைக் கேள், உனக்கு என்ன வேண்டும் என்று?'

"மதனியாருக்கு என்ன வேண்டுமாம்?"

"கொழுந்தனார் குறும்பு மட்டும் போக வேண்டும்."

"பங்களூரில் நல்ல சில்க் உண்டென்பார்கள், குறும்புக்குப் பெயர் போனது உங்கள் திருநெல்வேலிதான்."

"நீங்கள் மட்டும் அந்த ஊர்தானே."

காமாட்சியம்மாள், "பட்டுக் குங்குமம் வாங்கிக் கொண்டுவா" என்று சொன்னாள்.

"இங்கே கிடைக்காத குங்குமம் அங்கே கிடைக்கப் போகிறதா சரி' குங்குமம் வாங்கிவிடுகிறேன். இவ்வளவுதானே"

"எங்களுக்கு இவ்வளவுதான் உங்கள் கீதாவிடம் கேட்டால் என்னென்ன அடுக்குவாளோ" என்று குறுநகை புரிந்தாள் அஞ்சலை. அப்போதுதான் அவனுக்கு கீதாவின் நினைப்பு வந்தது. அதனால் தன்னுடைய திடீர் பிரயாணத்தை கீதாவிடம் சொல்லி

விட்டுப் போக ஆசை பிறந்தது. அடிக்கடி வரும் கீதா இரு நாட்களாக வராததும் அவன் நினைவிற்குத் தொல்லை தரவே "அம்மா நான் அப்படியே ரயிலுக்குப் போகிறேன். நான் போய்ச் சில நாள் தங்கினால் விலாசம் எழுதுவேன். நீ கடிதம் எழுது. அவசர காரியமாக இருந்தால் தந்தி கொடு" என்றான்.

மகனை வழியனுப்பிவிட்டு அஞ்சலையுடன் பேச ஆரம்பித்தாள் காமாட்சியம்மாள்.

கொல்லையில் கட்டப்பெற்றிருந்த கன்றுக்குட்டி வீறிட்டுக் கத்திற்று. ஓடிப் பார்த்தால், இளங்கன்றை, தலையிற்றுப் பெரிய கன்று முட்டி மோதிக்கொண்டிருந்தது. "அடடா, எத்தனை பொறாமை, ஏன் பாயறே?" என்று அதட்டி ஓட்டினாள்.

"ஆமாம், அத்தை, தாயிடம் தான் நெருங்க முடியவில்லையே என்று பெரிய கன்று நினைக்கலாம், தனக்குரிய அன்பைக் கவர அடுத்தது முளைத்துவிட்டதே என்ற எண்ணமாக இருக்கலாம்."

"இருக்கலாம், சின்னக் கன்று பாவம் பசலை, இதைக் கொண்டு போய் கூடத்தில் கட்டி வை, பெரிய கன்று என்ன செய்யும்?" என்று கழியை எடுத்து விரட்டிவிட்டு வருவதற்குள் குழந்தையை நெஞ்சோடு அணைத்துக்கொண்டு போவதைப் போல அலக்காகத் தூக்கிக்கொண்டு நடந்தாள். அஞ்சலைக்குக் கிராமத்துப் பழக்கம்; கன்றுக் குட்டியைத் தூக்கும் சக்தியும் லாகவமும் அவளுக்கு உண்டு.

காமாட்சியம்மாள் தான் செய்த பாக்கியத்தை எண்ணி எண்ணிக் கனவுலகில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்தாள். அந்த வேளையில் அவள் தமையனார் முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு வந்தவர், "ஜட்ஜூக்குக் கொஞ்சம் மன வருத்தம் இருக்கும் போலத் தெரிகிறது. என்னிடம் அவ்வளவு கலகலப்பாகப் பேசவில்லை. ஒப்புக்குப் பேசினார். இப்போது தான் பிள்ளையார் கோவிலில் பார்த்தேன்" என்ற பாரதத்தை ஆரம்பித்தார்.

"ஏன் அண்ணாச்சி, பெண்ணைக் கொடுப்பது நம்முடைய இஷ்டம்; பெண்ணினுடைய இஷ்டமும் வேண்டும். படித்தவர்கள் கூடச் சமயத்தில் பைத்தியக்காரத்தனமாக நடந்துகொள்ளுகிறார்கள்."

"உன் மருமகளைத் தம்முடைய மருமகளாக ஏற்க நினைக்கிறார். அதற்கு ஆண்டவன் கருணை குறுக்கிட்டால் நாம் என்ன செய்வது?" என்றார்.

"நீங்கள் வருத்தப்படுவானேன்? நாம் சொல்லலாம்."

"அப்படியில்லையம்மா. இதனால், கீதாவை இங்கே கொடுக்க முடியாது என்று அவர்கள் வீண்வாதம் செய்தால் அந்த வம்பு எதற்கு என்று யோசிக்கிறேன்."

காமாட்சியம்மாள் இதை யோசிக்கவில்லை! தங்களுக்கு மறுத்துச் சொல்லும் உரிமை இருப்பது போல, கீதா வீட்டாருக்கும் அந்த உரிமை இருப்பதை மறந்துவிட்டாள். இரண்டு மூன்று நாட்களாகக் கீதா வராமல் இருந்த நினைப்பும் சேர்ந்துகொண்டது. அப்படி ஏதாவது நடந்துவிட்டால்? அவள் யோசனை, பல கிளைகளாக வெடிக்க ஆரம்பித்தது. தன் அருமை மகன் வேலைய்யாவின் இதயம் ஒடிந்து போகுமே. குடும்பத்தின் கௌரவத்தை, பொக்கிஷத்தை விருத்தி செய்கிறவன் வியாகூலப்படலாமா? ஆனால் அதற்காக மூத்த மகன் தன் மனசிற்கு நினைத்த பெண்ணைத் துறப்பதா? யாருக்காக யார் வாழ்க்கையைத் தியாகம் செய்வது? ஆனால், தனது அண்ணைச்சி மகளைப் போல ஓர் புத்திசாலி தனக்கு வாய்க்கப்போவதில்லை. சபல புத்தியும் சபல நினைப்புமுள்ள பெரிய மகன் திருந்த வேண்டுமானால், அஞ்சலையை விட்டுவிடக் கூடாது; மற்றபடி வேலைய்யா பிழைத்துக்கொள்ளும் புத்திசாலி.

"ஏனம்மா யோசனை செய்கிறாய்?" என்றார் பெரியவர்.

"ஒன்றுமில்லை. அவரவர் இஷ்டம். தலைவிதி எப்படியோ அப்படியே நடக்கட்டும்" என்று பூசி மெழுகினாள். கீதாவைக் கொடுத்தாலும், கொடுக்காவிட்டாலும், அஞ்சலையைக் கொடுக்க அவள் விரும்பவில்லை. ஆயிரம் கீதாக்களை விட அஞ்சலை உயர்ந்தவள் என்ற நினைப்பு அவள் இதயத்திலிருந்து மறையவில்லை.

"நான் ஒன்று நினைக்க விதி வேறு விளையாட்டுச் செய்கிறது. என்றால் வேலைய்யா மனம் புண்படக் கூடாதே."

"நீங்கள் மனசை அலட்டிக்கொள்ள வேண்டாம். நோஞ்சானான பிள்ளைக்குத்தான் தாயன்பு அதிகம் வேண்டும். ரங்கசாமிக்கு என் அன்பு அதிகம் உண்டு. அதனால் அவன் மனம் புண்பட என்றால் சகிக்க முடியாது."

"இல்லையம்மா. இந்தக் கிழவன் வந்தான். இவன் பெண்ணால் எங்கள் குடும்ப வாழ்வு குலைந்தது என்று அண்ணன் தம்பி அடிபிடி போடக்கூடாதே."

"அதற்காக நீங்களும் நானும் பயந்து சாக முடியுமா? அண்ணன்-தம்பிச் சண்டையைத் தீர்த்துவிட முடியுமா?" என்று சொல்லும்போது ரங்கசாமி ரிவால்வரை உள் சட்டைக்குள் மறைத்துக் கொண்டு காரை விட்டு இறங்கினான். அரைகுறையாக இந்த வாக்கியம் விழவே, அவன் திடுக்கிட்டான். தன்னைப்பற்றி இழிவாகச் சொல்லுவானேன்? உடனே அஞ்சலை தன் செயலைச் சொல்லி விட்டாள் என்ற முடிவும் கொண்டான். தவறு இழைத்தவர்களுக்கு மர நிழல் கூட மனசாட்சியின் உருவமாகத் தோன்றும். அப்படியே தாயும் மாமனும் தான் சுட நினைத்ததைப்பற்றியே பேசுவதாக முடிவு கொண்டான்.

மகன் இறங்கி வருவதைக் கண்ட தாய், "டேய் ரங்கா இங்கே வா" என்றாள். ரங்கசாமி இடுப்பில் சொருகியிருந்த ரிவால்வரை நழுவி விழாமல் இருக்கக் கோணல்மாணலாக நடந்து தன் அறைக்குள் ஓடினான். அதை அலமாரியில் பத்திரமாக வைத்துப் பூட்டிவிட்டு, வியர்த்து விறுவிறுத்த முகத்தைத் துடைத்துக்கொண்டு, சிரித்தபடியே வந்தான். ஆனால் முகத்தில் பிரேதக் களை சொட்டிற்று.

தன் அண்ணாச்சி சொல்லிய தகவலை மகனிடம் தெரிவித்தாள். அத்தோடு தனது தீர்மானத்தையும் சொன்னாள்.

"எல்லாம் சரி, தம்பி எங்கே?"

"அவன் பங்களூர் போயிருக்கிறான்."

அவனுக்கு இடி விழுந்த மாதிரி இருந்தது. தன் மனதை அறிந்து ஓடிப் போய்விட்டானா?

"உன் தம்பி பங்களூர் போனால் என்ன? ஏதோ வியாபார விஷயமாய்ப் போயிருக்கிறான். நீ என்ன சொல்லுகிறாய்?"

"தம்பியின் விஷயம் வேறு; எனக்கு அவன் வாழ்வைப்பற்றி அக்கறை இல்லை. அவன் சீதாவை மணந்தாலும் சரி, இல்லை ஒரு சோதாவை மணந்தாலும் சரி, எனக்கு அக்கறை இல்லை. இதைச் சொல்லத்தானா என்னைக் கூப்பிட்டாய்?"

"ஆமாம். இதைத்தான் நானும் மாமாவிடம் சொன்னேன். அஞ்சலையை நீ மணந்து கொள்வதில் எவ்விதத் தயக்கமும் கிடையாது."

"கிடையாது, அம்மா."

இந்தச் சமயம், அஞ்சலை தொழுவத்துப் பக்கமிருந்து "யாராவது ஓடி வாங்க, வாங்க" என்று கத்தினாள். அதை யடுத்து, "பாம்பு பாம்பு" என்று கத்தவே அந்த இடத்தைவிட்டு எங்காவது போக நினைத்த ரங்கசாமி அஞ்சலை குரலைக் கேட்டுத் தோட்டத்தின் பக்கம் ஓடினான். அப்போது "டேய் முன்னைப் போல வழுக்கி விழுந்திடாதே" என்று தாய் எச்சரித்தாள். அவனுக்குச் சுரீர் என்று நெருப்பு பட்டதுபோல் இருந்தது.

"எங்கே, எங்கே?" என்று மற்றிருவரும் வந்தார்கள். அஞ்சலை, ஒரு செடியின் அருகாகக் காட்டி "இங்கேதான் அதோ அந்தப் பொந்தில் போனது பாருங்கள், பாருங்கள்" என்றாள். எல்லாரும் ஆவேசத்தோடு பார்த்தார்கள். இப்படிப் பார்த்த போது "நான் உள்ளே போய் ஒரு கம்பு எடுத்துக்கொண்டு வருகிறேன்" என்று வந்தாள். அவள் கம்புகள் கிடந்த விறகுப் பரண் அறைக்குள் நுழையாமல் ரங்கசாமியின் அறைக்குள் நுழைந்து அலமாரியை இழுத்தாள். அவள் நினைத்தபடி அது திறந்து கிடக்கவில்லை. பூட்டிய சாவியைக் கையோடு வைத்துக் கொண்டு, ரங்கசாமி பாம்புப் புற்றருகே நின்றான்.

அவள் ஏமாந்தாள். இளங் கன்றுக்குட்டிக்கு நாலு பில் பிடுங் கத் தோட்டத்திற்குள் வந்தவள், பெரிய அத்தான் அறைக்குள் நுழைந்ததைப் பார்த்து வேடிக்கை செய்ய வந்தவள், ஒளித்துக் கொண்டுவந்த ரிவால்வரை அலமாரிக்குள் வைப்பதைக் கண்ட தும், திடுக்கிட்டாள், அந்த ரிவால்வரை அப்புறப்படுத்தவே, தோட்டத்திற்குள் பாம்பு என்ற பொய்யைச் சொல்லி வைத்தாள். ஆனால் அவள் நினைத்தபடி ரிவால்வரை எடுக்க முடியாமல் போகவே ஏமாந்தாள். ஆனாலும் தன் குட்டு வெளிப்படாமல் இருக்க விரைவாக விறகுப் பரண் அறைக்குள் நுழைந்து நாலைந்து விறகைத் தூக்கிக்கொண்டு பரபரப்பாக வந்தாள்.

"பாம்பு வெளியே வரவில்லையே?" என்று ஆவலோடு கேட்டாள்.

"நான் நிற்கும் போது வந்துவிடுமா?" என்றான் ரங்கசாமி.

"பாம்பு விஷமுள்ளது" என்று ஏதோ சொல்லிக் கையில் இருந்த விறகைக் கொடுத்தாள். அவள் தகப்பனாரும் விறகை ஓங்கியபடி நின்றார். அரைமணி ஒரு மணியாக அந்தப் பொந்தில் கல்லையடித்தும் வரவில்லை. தோட்டக்காரனும் வந்து சேர்ந்தான். ஆகப்போக நேரம் போனதுதான் மிச்சம். அலுப்புத் தட்டி விட்டது.

"பாம்பு இந்தப் பட்டணத்துக்குள்ளே ஏது?" என்ற முடிவுக்கு வந்தார்கள்.

"அரணையாக இருக்கும்."

"இல்லை, மரப்பல்லியாக இருக்கும்."

"மண்ணுழியாக இருக்கலாம்."

ஒவ்வொருவரும் ஒரு முடிவுக்கு வந்து சேர்ந்தனர். எல்லார் முடிவையும் அஞ்சலை ஏற்றுக்கொண்டாள். அந்தப் பொந்தை வெட்டியும் பார்த்துவிட்டார்கள். நிம்மதி பிறந்தது. ஒன்றுமில்லை, ஆனால் ஒரு பெருச்சாளிமட்டும் தன் உயிரைத் துறக்க நேர்ந்தது!

எல்லோரும் மறுபடியும் வீட்டிற்குள் வந்து சேர்ந்தார்கள். வெய்யிலில் நின்று வியர்வை கொட்டியதால் களைப்பு ஏற்பட்டது, ஏகமனதாக மோர் சாப்பிடுவது என்று முடிவு செய்தார்கள். "மாமா, உங்கள் மகளை அருமையான மோர் கரைத்துக் கொண்டுவரச் சொல்லுங்கள்" என்றான் ரங்கசாமி. பெரியவர், "ஏன் நீயாகச் சொன்னால் மிகவும் ருசியாகக் கரைத்துக்கொண்டு வருவாள், ரங்கா. நான் பெற்ற தகப்பன்தானே, வரப்போகிற கணவன் என்றால் அந்த மகிழ்ச்சி தனி" என்று பதிலுக்குச் சொன்னார். இவர்கள் பேச்சைக் கவனியாமலே மோர் கரைக்கப் போய்விட்டாள் அஞ்சலை.

"பங்களூர் போய்ச் சேர்ந்திருப்பானோ?" என்றார் பெரியவர்.

"போயிருக்கலாம். பிளேன் தானே. அதிக சீக்கிரம் போய் இருக்கும், பங்களூரிலிருந்து பட்டுக் குங்குமம் பட்டுச் சேலைகள் எடுத்து வரச் சொல்லியிருக்கிறேன், அண்ணாச்சி."

"அப்படியா, அம்மா. யாருக்கு, கீதாவுக்குத்தானே?" என்று ரங்கன் கேட்டான்.

"ரங்கசாமி, நீ கொடுத்துவைத்தவன். உனக்குப் புடவை ரகங்கள் என்ன தெரியும்? உன் தம்பி எல்லா விதத்திலேயும் சூரன். ஆமாம், காமாட்சி எனக்கு என்ன வாங்கிவரச் சொன்னாய்?"

"அங்கே வீர சைவர்கள் உள்ள இடம், உங்களுக்கு நாலு லிங்க மாலை வாங்கி வரும்படி நானாக இருந்தால் சொல்லுவேன்." என்றான் ரங்கசாமி.

."நானாக இருந்து உனக்கு என்ன வாங்கச் சொல்லுவேன் தெரியுமா?" என்றுசொன்னாரே எதுவும் சொல்லமுடியாமல்யோசித்தார்.

"சொன்னால் டாண்ணு சொல்லணும். யோசிக்கப்படாது. எனக்குப் பங்களூரிலிருந்து என்ன வாங்கி வருவான், வேலையா?" என்று திரும்பத் திரும்பக் கேட்டான். பெரியவர் மோட்டுவளையைப் பார்த்தபடியே யோசனையில் ஆழ்ந்தார். ரங்க சாமியின் குரல், மோர் எடுத்து வந்தவள் காதில் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தது. அவள் உள்ளே ஹாலுக்குள் நுழையும்போதும் அக் குரல் கேட்கவே, என்ன பேசுகிறோம் என்ற நினைப்பின்றி "ரிவால்வர்" என்று மனசிற்குள் அழுந்திக் கிடந்த சொல்லைச் சொன்னாள். ரங்கசாமிக்குத் தூக்கிவாரிப் போட்டது. அப்படி அவள் விளையாட்டாகச் சொன்னது ஆத்திரத்தை மூட்டியது. எரிப்பவன் போன்று பார்த்தான். காமாட்சிக்கும், அவள் தமையனுக்கும் ஒன்றும் புரியவில்லை.

இருவரும், "அதென்ன ரிவால்வர்" என்றார்கள் சிரித்துக் கொண்டு. எல்லோருக்கும் தன் செயல் தெரிந்துவிட்டது; அதை நினைத்துச் சிரிக்கிறார்கள்; என்று ரங்கசாமி யூகம் செய்தான். ஆனால் நிலையைச் சமாளிப்பதாக நினைத்து, "என்ன ரிவால்வர்?" என்று ரங்கசாமி கேட்டான், அப்பொழுதுதான் தன் பலவீனத்தை உணர்ந்தாள் அஞ்சலை. தோட்டத்திற்குள் பாம் பைக் கொண்டுவந்த மாதிரி இன்னொரு பொய்யை உடனடியாகக் கொண்டுவர முயற்சி செய்தாள்.

"யாருக்கு ரிவால்வர் வாங்கப் போயிருக்கிறான் - வேலையா?" என்று வியாக்கியானமாகக் கேட்டார் பெருமாள் பிள்ளை.

"என்ன வேண்டாத பேச்சு? மோரை குடியுங்கள்" என்று காமாட்சி அசிரத்தை காட்டினாள்.

ரங்கசாமி "இல்லேம்மா. அது என்னவென்று தெரிய வேண்டாமா? ஏன் அஞ்சலேயம்மா, அது என்ன ரிவால்வர்?" என்று துருவிக் கேட்டான்.

"ஒன்றுமில்லே" என விழுங்கினாள்.

ரங்கசாமி இந்த விஷயத்தை அடியோடு மறக்கவும் இனிச் சந்தேகங்கள் தோன்றுமல் இருக்கவும், சற்று விளேயாட்டாகவும் ஆனல் அஞ்சலே மனசில் பதியும்படியும் பேசத் திட்டமிட்டான். "அஞ்சலே, இது என்ன பைத்தியக்காரத்தனமான பேச்சு? உங்கள் அப்பா என்ன கேட்டார்கள் தெரியுமா?" என்று சீறி விழுந்தான். ரங்கசாமியின் சீற்றத்தைக் கண்டு, "என்ன மாப்பிள்ளே, அவள் விளேயாட்டாக ஏதோ சொன்னல் இத்தனே கோபமா?" என்று சமாதானத்தை விடுத்தார். அந்தச் சமாதான வலே பெரிய ஆபத்தில் சிக்க வைத்துவிட்டது.

"மாமா, இதில் விளேயாட்டு என்ன இருக்கிறது? நீங்கள் கேட்டீர்கள். அண்ணனுக்கு என்ன வாங்கி வருவான் பங்களூரி லிருந்து என்பதாக. அதற்குப் பதில் ரிவால்வர் என்ருல் இதன் அர்த்தமென்ன?" என்று வாதாடினன்.

"என்னடா குழந்தைமாதிரி பிடிவாதம் செய்கிருய்? விளே யாட்டாக மாமா கேட்டார்கள். இதில் என்ன தப்பு இருக் கிறது? பங்களூருக்குப் போய்த்தான ரிவால்வர் வாங்க வேண்டும்?"

"தம்பியின் மனம் அவளுக்குத் தெரிந்திருக்கலாம். அவன் சொல்லியும் இருக்கலாம். ஏன் அஞ்சலே அப்படித்தான் தம்பி சொன்னனே? ரிவால்வர் வாங்கி வருவதாக?" என்ருன் குற்ற முள்ள ரங்கசாமி.

"அட எதற்காக இப்படிக் 'கத்துகிருய்?" என்று தாய் சமாதா னம் சொன்னள். மேலும் மேலும் கத்தினன் ரங்கசாமி. ரிவால்வர் சமாசாரம் சொல்லாதவரையில் தான் விடப் போவ தில்லே என்று இரைந்தான்.

"சொல்லுகிருயா இல்லேயா?" என்ருன்.

"சும்மா விளேயாட்டுக்குச் சொன்னேன்."

"ரிவால்வர் வைத்து என்ன விளேயாட்டு? உன்னிடம் வேலேய்யா சொல்லியிருப்பான்."

"சும்மா, பழி சுமத்தாதீர்கள்" என்று அடுக்களைப் பக்கம் திரும்பினாள். வழி மறித்தான் ரங்கசாமி. காமாட்சியம்மாளும் பெருமாள்பிள்ளையும் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள். அவள் கண்களில் "குட்டை உடைத்துவிடுவேன்" என்ற எச்சரிக்கையைப் படித்தும் அவன் தன்னை நிரபராதி என நிரூபிக்க வாதாடினான்.

"பங்களூரிலிருந்து ரிவால்வர் வருமா? வந்தால் எதற்கு?" அலுத்துப்போன அஞ்சலை பொறுமையை இழந்து "நான் சொல்லுகிறேன். இந்தச் சாவிக்கொத்தின் மீது சத்தியம் செய்யுங்கள்" என்று எட்டிப் பிடுங்கினாள். அவன் பேச்சு சுவாரஸ்யத்தில் சாவிக் கொத்தை மெதுவாகப் பற்றியிருந்தவன் அவள் பிடுங்கவும் விட்டுவிட்டான்.

"சத்தியம். ரிவால்வர் எங்கே வந்தது?"

பெரியவர், "அடேடே இதில் ஏதோ தமாஷ் இருக்கிறது போல் தெரிகிறதே. அது என்னம்மா" என்று மகளை அவர் கேட்குமுன் அவள் அங்கிருந்து மின்வெட்டில் மறைந்து ரங்கசாமியின் அறைக்குள் ஓடினாள். அடுத்த விநாடியில் அறையின் கதவு படாரென்று சாத்தப்பட்டது. ரங்கசாமியின் மனக் கதவு திறந்தது. உள்ளே அறைக்குள் அலமாரியில் ரிவால்வர்; அந்த அலமாரியின் சாவி, அஞ்சலையின் கையில் இருக்கிறது. இனி தன் ஜம்பத்தைத் தணிக்கவேண்டும், இல்லாவிட்டால் புதிர் புரிந்துவிடும். தன் மீது பழி விழும்.

உள்ளே போனதும் பெருமூச்சு வாங்கிற்று; நிதானமாக நின்றுகொண்டாள். அலமாரியைத் திறந்தும் ரிவால்வரை எடுத்துக் காட்டிவிடுவதா, வேண்டாமா? இதனால் பின்னர் தீமை விளைந்தால் அதன் பயன் என்ன? முடிவுக்கு வந்தாள்.

"பார்த்தியா காமாட்சி, உன் மருமகள் என்ன இருந்தாலும் பயந்தாங்கொள்ளி? எங்கே ரங்கசாமி உதைத்துவிடுவானோ என்று பயந்து, அவன் அறைக்குள் போய் பம்மிக்கொண்டாள்."

வெளியே தகப்பனாரும் அத்தையும் சிரிக்கும் சிரிப்பு கேட்டது. அவள் மனசில் இன்னும் வேதனை அதிகமாயிற்று. தன் கடமை என்ன? ரங்கசாமியைக் காட்டிக்கொடுப்பதா? கொடுத்தால் தன் வாழ்வு என்னாகும்? மணக்க மாட்டான். ஆனால் வேலய்யா சாவது நிச்சயம். பிறர் செத்துத் தான் வாழ்வது வேண்டாம்.

"நாங்கள் இருக்கும்போது உன்னை அடித்துவிடமாட்டான். நீ வெளியே வா" என்றாள் காமாட்சி.

உள்ளே அலமாரியைத் திறக்கும் ஓசை; இதயம் நிற்பது போல இருந்தது ரங்கசாமிக்கு, அடுத்த விநாடி அறைக் கதவைத் திறந்தவள் கையிலே ரிவால்வரைப் பிடித்தபடி வந்தாள். முன்பு ஒருநாள், ரங்கசாமி இருளிலே எப்படிப் பிடித்து வந்தாரோ அப்படியே வந்தாள். இந்த எதிர்பாராத காட்சியைக் கண்ட காமாட்சியம்மாளும் அவள் தமையனும் நடுங்கிவிட்டார்கள். உயிரைக் குடிக்கும் ஆயுதம், ரங்கசாமி அறைக்குள் இருக்கிறது. அஞ்சலைக்கு அசட்டுத் துணிச்சல் பிறந்து, "என்ன ரிவால்வர் அத்தான்?" என்று சுடுவதுபோலப் பாசாங்கு செய்தாள். அவளுக்கு எப்படிச் சுடுவது எனத் தெரியாவிட்டாலும் அவள் செய்யும் தவறினால் குண்டு பாய்ந்துவிடலாம்.

"அதை ஒன்றும் செய்யாதே" என்றாள் காமாட்சி.

"இல்லை, அத்தை. இது ரிவால்வர். உங்கள் பெரிய மகன் கேட்ட ரிவால்வர்" என்று வாசற் பக்கமாக வீசி எறிந்தாள். அடுத்த கணம் அந்த பங்களா அதிரும்படி ஒரு வேட்டுக் கேட்டது. எல்லோரும் திடுக்கிட்டுத் திகைத்து நின்றார்கள். ஒருவரை ஒருவர் பார்த்தும், பார்வையற்ற நிலையில் நடுங்கினார்கள். ரங்கசாமிக்குக் கோழைத்தனம் தலைதூக்கி நின்றதே தவிர, வேறொன்றும் செய்ய இயலவில்லை. எறிந்த ரிவால்வரை எடுத்துக்கொண்டு வந்து "அத்தை இந்த ரிவால்வர் யாருடையதாக இருந்தாலும் சரி, தாங்கள் பத்திரமாக வைத்திருங்கள்; இது உங்கள் பொருள். இது வந்த மாயமோ, இதை யார் வைத்திருக்கிறார்கள் என்ற மாயமோ நாம் அறிய வேண்டாம்" என்று கையில் கொடுத்தபோது, கை நடுக்கத்துடன் வாங்கினாள்.

"இந்தாருங்கள் சாவிக்கொத்து! நான் எவ்விதமான தகவலும் அறியாதவள். தங்கள் அலமாரியில் அது இருந்தது எனக்குப் பிடிக்கவில்லை, அத்தான்" என்று கண்ணீர் சோர அவன் முன்னிலையில் நின்றாள். ரங்கசாமிக்கு எல்லாம் கனவாகப்பட்டது. அவ்விடமிருந்து ஒவ்வொருவரும் தனித்தனியே பிரிந்தனர்.

எங்கும் மௌனம், பிசாசுத்தனமான மௌனம் குடிகொண்டது.

# 19. கீதாவைக் காணோம்!

சிலருக்கு யோகம் பால்யத்திலும், பலருக்கு யோகம் வயோதிகத்திலும் வருவதை இந்த உலகில் பார்க்கிறோம். ஆனால் நீதிபதி நீலமேகத்திற்கு இத்தனை நாளாக இல்லாத கவலை சூழ்ந்து கொண்டது. தம்முடைய மகளிர் இருவரும் ஒரே வீட்டில் அண்ணன் தம்பி யரை மணந்துகொண்டு இனிதாக வாழவேண் டும்; தனது மகன், அஞ்சலையை மணந்துகொண்டு வாழவேண் டும். தான் எந்த நிமிஷத்திலும் பரமபதம் அடையச் சித்தமாக இருக்கவேண்டும். ஆனால் அவர் எண்ணத்திற்கும் மனக் கட்டுப் பாட்டுக்கும் அப்பால் விதி போராடிக்கொண்டிருக்கிறது. மிருதுலதா, ரங்கசாமியைக் காதலிப்பதாக அவர் எண்ணி விட்டார். அவள் அந்தரங்க எண்ணத்தை அவர் புரிந்துகொள்ள முடியுமா? பணக்காரக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டால் அநேக குறைபாடுகள் சூரியனைக் கண்ட பனிபோல நீங்கிவிடும் என்பது தெரியும். இதற்கு எதிரிடையாக ரங்கசாமியின் திருமணம் நடக் கப் போகிறது. தமக்கு இரட்டிப்பு நஷ்டம், மகனுக்கும் திருமணம் இல்லை, மகளுக்கும் திருமணம் இல்லை. இதற்குப் பழிவாங்க கீதா வைப் பயன்படுத்தினர். வேலைய்யாவை அவள் மணக்க முடியாது என்று உணரும்படி வெளிப்படையாகப் பேசினர்.

கீதாவுக்குக் கோபம் வந்தது. தன் வாழ்வில் குறுக்கிட்ட மிருதுலதா மீது ஆங்காரம் பிறந்தது. தந்தையின் மனம் பட்டப் பகலாகப் புரிந்த பின்பு வேறு என்ன இருக்கிறது? தன்னைப் பலி யிடத் துணிந்துவிட்ட அவருடைய மூளையை வியந்தாள்.

"நீங்கள் சொல்வதை முழுதும் நான் நம்பமுடியாது."

"போதும் கீதா, நீ சிறுபிள்ளை!"

"இல்லையப்பா; என்னை வாழவிடாமல் படுகுழியில் தள்ளவே இந்த கடிகை வந்து சேர்ந்தாள். உங்கள் புத்தியும் பேதலித்து விட்டது" என்று சீறினாள்.

"கீதா, நீ படித்த பெண்ணாகப் பேசவில்லை,"

"அவள் வாழ்வுக்காக என்னைப் பலியிட எண்ணுவானேன்?"

"அவள் என் மகள், நீயும் என் மகள்?"

"நாங்கள் இருவரும் ஒன்றுதானா? வேற்றுமை இல்லையா? அவளும் நானும் உங்கள் கண்ணுக்கு அப்படி இருக்கலாம் உலகத்தின் முன்னிலையில்?"

"உலகம் எனக்குப் பெரிதன்று. உள்ளமே பிரதானம்."

"நான் வேண்டுவதில்லையா? உங்கள் அருமைப் பெண்தானா வேண்டும்?"

"ஏன் இத்தனை விகல்பமாகப் பேசுகிறாய்? சற்று அமைதியாகப் போனால் எல்லோர் மனசும் குளிரும்."

"உங்களுக்குப் பெற்ற பாசம் இருக்கலாம், அப்பா. தாங்கள் அந்த மிருதுலதாவின் வீட்டுக்குப் போவதுகூடத் தவறு. அவளைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. அவள் பொல்லாதவள்."

"பொறாமைப்படுகிறாய். அவள் கியாதியும் செல்வாக்கும் நமக்கில்லையே என்று நினைத்துப் பொருமுகிறாய்."

"என் கையில் சோறு தின்ற நாய்கூடப் பொறாமை கொள்ளாது, அவள் அத்தனை கொடியவள்."

"சும்மா உளராதே, கீதா! நான் உன்னோடு வாதாட விரும்பவில்லை. அந்த வேலய்யாவின் பங்களாவிற்கு என் அனுமதியின்றி இனி நீ போகக்கூடாது."

"ஏன்?"

"உனக்கு அவ்வளவு சுதந்திரம் வந்துவிட்டதா?"

"அவர்கள் இஷ்டம், பெண்ணைக் கொடுப்பதும் கொடுக்காமல் வைத்துக்கொள்வதும்."

"அந்த உரிமை நமக்கில்லையோ?"

"உங்களைப்போல் நானும் படித்தவள். எனக்குள்ள சட்ட ஞானம் கிராமத்து அஞ்சலைக்கேது? என் உரிமையில் தடை செய்ய வேண்டாம். அண்ணாவின் கல்யாணமோ உங்கள் அருமைப் பெண் கல்யாணமோ என்னைத் தடை செய்ய முடியாது."

"அப்படியா? பிறகு உன் இஷ்டம். இன்னார் பெண் என்ற கௌரவத்திற்காகத்தான் சொல்லுகிறேன். இவ்வளவு பணம் உள்ளவள் என்ற நிலைமைக்குத்தான் உனக்கு மதிப்பு"

"பெண்ணைப்பற்றி நீதிபதி சொல்லும் தீர்ப்பு இது. கோர்ட்டுக்குச் செல்லுபடியாகும். வீட்டுக்குள் அந்தப் பேச்சு வேண்டாம். ஒரு நிபந்தனை, தங்கள் சொல் கேட்கிறேன்."

"என்ன?"

"இனி அந்த மிருதுலதா எக்கேடு கெட்டாலும் சரி, அவள் இங்கே காலெடுத்து வைக்கக்கூடாது. வைத்தால் அடுத்த நிமிஷம் நான் வெளியே போய்விடுவேன்."

"அவள் மீது அத்தனை வெறுப்பு என்ன?"

ஆவேசமாகக் கையில் வைத்திருந்த பத்திரிகையை அவர் அருகே போட்டாள். அது பொதுமக்களுக்குத் தொண்டு செய்ய புறப்பட்ட ரசாபாசமான பத்திரிகை. அதிலே பிரபலஸ்தர்கள் மானம் கப்பல் கப்பலாக ஏற்றுமதியாகியிருந்தது. பணத்தாலும் செல்வாக்காலும் ஊரில் வேட்டையாடும் காலிகளின் கூத்துக்கள், பத்தி பத்தியாக வெளியாகியிருந்தன. அத் திருக்கூட்டத்தில் மிருதுலதாவின் திருநாமம் பல அடைமொழிகளுடன் அச்சேறி இருந்தது. தமிழ் மொழியில் அச்சுக்கு வராமல் ஆபாசமாக எவ்வளவு வார்த்தைகள் உண்டோ அத்தனையும் இடம் பெற்றிருந்தன. ஆசை நாயகர்கள், அவர்கள் லீலைகள், அவள் செய்யும் தகடுதத்தங்கள் வெளியாகி இருந்தன. நீலமேகம் கண்ணீர் சோர, அத்தனையும் வரிக்கு வரி படித்தார். அவர் ஊன்றிப் படிப்பதைப் பார்த்தபடியே நின்றாள் சீதா. தகப்பனார் கண்ணீர் சோரப் படிப்பதையும் பார்த்தாள்.

பெருமூச்சு விட்ட நீலமேகம், "இத்தனையும் பொய் புரட்டுகள். பொதுமக்களை ஏமாற்றிப் பிழைக்க வந்த ஆசிரியர்கள் செய்துள்ள சூழ்ச்சி. படித்த பெண்ணாக இருந்தும் நீ இதை நம்புவது விநோதமான காரியம்: இதை யார் வாங்கி வந்தது?" என்று கத்தினார்.

"உங்களுக்கு அவள் மேல் ஏன் இத்தனை பாசம், அப்பா? கட்டிய மனைவியின் பெண்ணைவிட அவள் பெரிதாகப் படுகிறாள். புகையில்லாமல் நெருப்புக் கிளம்பாது" என்று பதட்டத்தில் உளறவும் செய்தாள். நாலு தினங்களுக்கு முன் மேற்படி பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஒருவருக்கு என்ன தீர்ப்பு ஆயிற்று என்பதை அவர் அறிவித்தார். பொது மக்கள் நலனைக் கருதி வெளியிடுவதாகச் சொல்லிக்கொண்டு ஆபாசக் களஞ்சியமாக அச்சடித்த குற்றத்திற்காக ஆறுமாதம், அல்லது ஐயாயிரம் ரூபாய் அபராதம் என்று விதிக்கப்பட்டது. அந்தக் கதையைக்

கீதா கண்டாளா? மகளுக்கும் தந்தைக்கும் மேற்படி பத்திரிகையின் தரத்தையும் தன்மையையும் அதர்மத்தையும் பற்றி வாக்குவாதம் நடந்தது. தகப்பனும் தங்கையும் இரைந்து பேசுவதைக் கேட்ட மோகனரங்கம் மாடிக்கு வந்தான்.

"என்னப்பா விஷயம்?" என்றான். திரும்பிப் பார்த்தான், கண்ணீர் தோய்ந்த முகத்தோடு அருமைத் தங்கை நிற்பதைக் கண்டான். "ஏன் அழுகிறாய், கீதா?" என்று பரிவாகக் கேட்டுத் தன் தந்தையைப் பார்த்தபோது, அவர் முன்னால் அந்தப் பத்திரிகை கிடந்தது. மோகனரங்கம் கண்ணில்," நடிகை மிருதுலதாவின் மின்வெட்டு ரகசியங்கள்" எனப் பெரிதான எழுத்துக்கள் படவே அவனுக்கு ஒன்றும் ஓடவில்லை.

"அண்ணா, நான் வேண்டாதவள், அந்த மிருதுலதாதான் அப்பாவுக்கு வேண்டியவள்." தமையன் மனம் கசிந்தது. "அப்புறம் பேசிக்கொள்ளலாம், நீ போம்மா" என்றான். அவள் நகரக் காணோம். பத்திரிகையை முரட்டுத்தனமாக எடுத்துத் தமது பலமெல்லாம் சேர்த்துக் கசக்கித் தொலைவில் எறிந்தார் நீலமேகம். தமக்கே புரியாத பாசத்தின் விளைவை எண்ணி எண்ணிப் பார்த்தார், தமது கடமை, மிருதுலதாவை நல்ல இடத்தில் மணம் முடித்துக் கொடுப்பது; அவள் வாழ்வுக்குத் துணை செய்வது; பெரிய இடத்துப் பெண், அந்தஸ்து, என்ற பெயரையும் வாங்கிக் கொடுத்துவிடுவது; இம் முடிவுக்கு வந்தார். கீதாவின் அழுகையும் கோபமும் விரைவில் நின்றுவிடும். பிறகு தமது சொல்லுக்குக் கீதா கட்டுப்படுவாள் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. இதுவரை தமது மகள் என்ற நினைப்பு மிருதுலதா மேல் இல்லாததால் இந்த பத்திரிகை சம்மந்தத்திற்குப் பின் அந்த உணர்ச்சி அதிகமாகப் படம் விரித்துக் கொண்டது. அதனால் கீதாவின் மெல்லிய மனசைக்கூட அவர் புரிந்துகொள்ளாமல் நடந்துகொண்டார்.

கீழே காரின் ஓசை கேட்டது. அது மிருதுலதாவின் கார். "அப்பா அந்தப் பெண் வந்துவிட்டாள். வரக்கூடாது என்று நீங்கள் சொல்லுங்கள், இல்லை, நான் சொல்லுவேன்" எனக் கத்தினாள் கீதா. நீதிபதிக்கு இரண்டும்கெட்டான் நிலைமை, கோபமாகக் கண்களை உருட்டி வெறித்துப் பார்த்தார். "பேசாதே.

உள்ளே போ,'' என்ற அதிகாரம் அதில் மிளிர்ந்தது. கீதா "போ என்று நீங்கள் சொன்னால் இந்த வீட்டை விட்டே போய் விடுகிறேன். நீங்களே அவளைக் கட்டிக்கொண்டு அழுங்கள்,'' என்று சற்று ஆவேசமாகக் கூவிவிட்டுத் தடதடவென இறங்கினாள். பெண்களுக்கு ஒரு பெண்ணைப் பிடிக்காவிட்டால் எது வேண்டுமானாலும் சொல்லிவிடுவார்கள். தாக்குதலுக்கு ஆளான நபர் யாராக இருந்தாலும் கவலைப்பட மாட்டார்கள், தனக்குள்ள அன்பு, தனக்குள்ள மன உரிமை இவைகளில் பங்கு போடும் பெண் மீது யாருக்குத்தான் பச்சாதாபம் உண்டு? பெண்ணினத்துக்குரிய பிழையை அவள் செய்து முடித்ததில் வெற்றிப் புன்முறுவல் கூடச் செய்தாள். எதிரே ஒய்யாரமாக ஊசலாடி வந்த மிருது, "என்ன கீதா? அப்பா எங்கே? அண்ணா எங்கே?'' என்று உறவாடிக் கொஞ்சுதலாகக் கேட்டாள்.''

"அண்ணாவும் அப்பாவும் அந்தப் பத்திரிகைக்குள் வர வேண்டுமோ? அப்படியானால் போடியம்மா, போ; மாடிக்குச் போ. குஷாலாகப் போ.''

அவள் பழிச் சொல் மிருதுவுக்குப் புரியவில்லை. கோபத்தில் பிறக்கின்றன என்று யூகம் செய்துவிட்டாள். மிருதுலதா போனை விரும்பாமல் மாடிக்கு வருவதற்குள். கீதா வெளிக் கேட்டைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தாள். அவள் சொன்னபடியே மிருதுலதா காலடி வைத்ததும் அந்தப் பங்களாவை விட்டுப் போய் விட்டாள். அவள் வெளியே வந்தபோது தெருவில் உள்ள ஒரு மோட்டார் தன் பங்களாவை நோக்கி வந்ததையும் அதிலுள்ள இரண்டொருவர் தங்கள் பங்களாவைக் கூர்ந்து பார்த்ததையும் கண்டாள்.

கீதா மேலே நடந்து சென்றபோது அந்தக் கார் அவள் அருகாக நின்றதும் "ஏனம்மா நீலமேகம் பங்களா இதுதானே'' என்றார்கள். தலையை அசைத்தாள். "இங்கே ஒரு அம்மாள் வந்தார்களே'' என்று மேலும் கேட்டார் ஒரு நபர்.

"ஆமாம் அந்த நடிகை மிருதுலதா வந்தாள்!'' என்று கோபமாகச் சொன்னாள்.

"தாங்கள் சொல்லிய விபரத்திற்கு நன்றி. மிருதுலதா இங்கேதான் போனாளா?'' என்றே காரை விட்டுக்கொண்டு போய்விட்

டார்கள். அவர்கள்தான் மஞ்சள் பத்திரிகைக்காரர்கள். கீதா சற்றுதூரம் நடந்து திருவல்லிக்கேணியில் உள்ள தன் சிநேகிதி நளினி வீட்டிற்குப் புறப்பட்டாள்.

மிருதுலதா மாடிக்கு வரும்போதே கீதாவின் அழுத முகத்தை தரிசித்துவிட்டு வந்தாள். தனக்குள்ள வருத்தத்தை மறைத்துக் கொண்டு மாடியில் நுழையும்போது, மோகனரங்கம் முகத்தில் எண்ணெய் வழிய நிற்பதையும் நீலமேகம் பேயறைந்தவர் போல் காட்சி தருவதையும் கண்டாள். ஏதோ குடும்பத்திற்குள் சலனம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று யூகித்தபடியே தன் ஒய்யார நடையை விட்டுக்கொடுக்காமல் சரக் சரக்கென நகர்ந்து காலில் தட்டுப்பட்ட பேப்பர் பந்தை ஒரு எற்றுக் கொடுக்க, அது நீலமேகம் மடியில் வந்து விழுந்தது. எதிர்பாராத விதமாக இப்படிப் போய் விழவே, மிருதுலதா பயந்து மன்னிப்புக் கோரும் பாவனையோடு "அடடா, உங்கள் மேலே வந்து விழுந்துவிட்டதே அப்பா" என்று அதை மரியாதையுடன் எடுக்கப் போனாள் அதற்குள் அவர் ஆத்திரம் தீராது எடுத்துக் கைப்பிடிச் சுவருக்கு அப்பால் எறியவே, அது குறிதவறிச் சுவரில் பட்டு மீண்டும் உள்ளேயே வந்து கிடந்தது.

யாரும் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார்கள். அவர் பச்சையாக நேரில் கேட்க வெட்கப்பட்டார். கேட்காமல் விட்டுவிட மனசும் இல்லை. நிலைமை மிகவும் சங்கடமாக இருக்கவே "அப்பா இன்னொரு சமயம் பார்க்கிறேன்" என்று நின்றபடியே நழுவ ஆரம்பித்தாள் மிருது.

"அப்படி உட்காரம்மா" என்றார்.

அவளும் உட்கார்ந்தாள். தமது துக்கத்தையும் மன வேகத்தையும் இருமிக் கட்டுப்பாடு செய்துகொண்டு, "நான் சொல்வது உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம்; நான் சொல்லுவது தவறாக வும் இருக்கலாம்; உன் வாழ்க்கையில் இதுவரை நடந்துபோன சம்பவங்களைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. இந்த நிமிஷம் முதல் நீ என் குமாரி; இந்த அந்தஸ்துக்குப் பங்கம் வராமல் வாழ முற்படவேண்டும். உன்னால் கீதாவின் வாழ்வும் உனது தமையன் வாழ்வும் பாழாகிவிடக் கூடாது. உன்னைப்பற்றிய அவதூறுகள் பொய்யாக இருக்கவேண்டுமெனக் கடவுளைப்

பிரார்த்திக்கிறேன். அவதூறுக்கு ஆளாகாமல் வாழ வேண்டும்.''

"அந்தப் பத்திரிகையைப் பார்த்துவிட்டு நீங்கள்கூட இப்படியா முடிவு செய்தீர்கள்? அத்தனையும் புரட்டு, அப்பா.''

''எனக்குத் தெரியும், உனக்கும் தெரியும். கீதா என்ன கண்டாள்? உலகம் எதைக் கண்டது? எது எப்படியானாலும் நீ வாழும் சுக வாழ்வு பிறர் பொறாமைக்கு இடம் தரும்; அச்சுக்குப் போகும்படியான வகையில் வாழவேண்டாம். அச்சில் வருவது அத்தனையும் பொய்யோ, மெய்யோ. ஜனங்கள் உண்மையென நினைக்கும் இந்த விளம்பரம் உனக்கு வேண்டாம்.''

''பிரபலமானவர்களிடம் குற்றம் குறை சொல்லி ஊரை ஏமாற்றிப் பிழைக்கிறார்கள், வலிவற்ற பேனா வீரர்கள். அவர்களை நான் லட்சியம் செய்யவில்லை.''

"இன்னும், இனி மோசம் அவதூறுகள் வேண்டாம்; புகழைவிட அவமரியாதை சுலபத்தில் வந்துவிடுகிறது. என் மனம் பட்ட பாட்டை நான் சொல்லித் தெரிவிக்க முடியாது. எதற்காக இத்தனை வருடங்களாகப் உன்னைப் பார்க்காது இருந்தவன் இப் போது பார்க்க நேர்ந்தது என்று கூட எண்ணமிட்டேன். என் மனம் புண்பட வேண்டும் என்ற காரணத்திற்காகவே உன்னை அறியும்படி நேர்ந்ததோ, என்னமோ. இனி உன்மீது எந்த வம்பு களும் வரக்கூடாது. வராமல் நடப்பது கஷ்டமான காரியம் இல்லை.''

பெற்றவர் புத்தி போதனை செய்தார். குஷியாகச் சிரித் துக்கொண்டு வந்தவள் எதிர்பாராத இந்தச் சிக்கலைக் கண்டதும் சிறிது மனக்கிலேசம் கொண்டாள். "தாங்கள் இப்படிச் சொல்ல உரிமையுள்ளவர்கள். தங்கள் பெயருக்குக் களங்கம் ஏற்படுமென எண்ணினால், நான் இந்தப் பங்களாவிற்குள் வருவதை நிறுத்தி விடுகிறேன், அப்பா. எனக்கு வேண்டாத நபர்கள், பொதுமக்க ளுக்கும் வேண்டாத நபர்கள், தங்கள் ஜீவனத்திற்காக இப்படிக் கன்னாபின்னாவென எழுதுவதை நாம் என்ன செய்ய முடியும்? தவறு இருந்தால் திருத்தலாம்; இல்லாதத் தப்பிதத்தைத் திருத்து வது முடிகிற காரியமா?'' என்று கேட்டாள்.

''முடிகிறதோ, இல்லையோ? உனக்காகக் கீதாவிடம் நான் சண்டை போட்டுக் கொண்டேன். அவளைவிட உன்மேல் எனக்கு

அக்கறை அதிகம் என்று கூட அவள் எண்ணிக்கொண் டாள்.''

''பாவம், உங்களுக்கு இப்படிக் கஷ்டம் வருமெனத் தெரிந் திருந்தால் நான் இங்கு வரவே மாட்டேன். என் வரவினால் கீதா வின் மனம் புண்பட்டால் அது நியாயமில்லை. தங்கள் அன்பிலே பங்கு பெற நான் வந்ததும் தவறுதான். இனி நான் வரவில்லை,'' என்று எழுந்தாள்.

மிருதுலதாவின் கோபத்தைக் கண்டு நீலமேகத்திற்குச் சஞ்ச லம் பிறந்தது. பாவத்திலிருந்து மீட்டும் நல்வாழ்க்கையில் ஈடுபடுத் திக் கௌரவமான பெயரைச் சம்பாதித்துக் கொடுக்க எண்ணிய தால் அவர், ''மிருதுலதா என்மீது நீ கோபங்கொண்டால், மாற்ற முடியாது. உன்னைக் கட்டுப்பாடு செய்ய நான் உரிமையற்றவன் என்று கூட நீ வாதாடி வழக்காடலாம். ஆனாலும் பாசம் ஒன்று தான் என்னைப் பேச வைக்கிறது. நீ நல்லவளாக வாழ்ந்தால் என் மனம் சந்தோஷப்படும்; நீ கெட்டவளாக வாழ்ந்தால் என் மனம் வருத்தப்படும். என் சுக துக்கம் உனக்கு அக்கறையில்லாது போகலாம். உன் வாழ்வில் நான் அக்கறையுடன் இருக்கிறேன். கையாலாகாத பாசத்தால் பயன் இல்லை. என் அன்புத் தளையை மீறிக்கொண்டு நீ போய்விடலாம். நான் அப்படி இருக்க முடியாதவன். இத்தனை வருடங்களாக உனக்குச் செய்யாத கடமைகளை இப்பொழுது செய்ய வருவது உனக்கு வெறுப்பாக இருந்தால் என்னை உதறித் தள்ளிவிடலாம். தள்ளிவிட்டுப் போ. உனக்காக நான் இங்கே கடவுளைத் தியானித்துக் கொண்டுதான் இருப்பேன். உன் மனதில் என் மீது அன்பு பிறக்கக் கடவுள் அருள் செய்வார் என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''

மிருதுலதா திகைத்தாள். அளவற்ற புத்திரி வாஞ்சை இருப் பதைக் கேட்டும் பார்த்தும் ''அப்பா உங்கள் மனம் புண்படும்படி நான் நடக்கிறவள் அல்ல. இந்த நிமிஷம் முதல் உங்கள் மனதிற்கு இனிய செயலையும் சிந்தனையையுமே நான் செய்யப் பாடுபடு வேன்'' என்று கண்ணீர் சோர அழுதாள்.

நீலமேகத்தின் மனம் திருப்தி பட்டது. மிருதுலதா தம் மனசுப்படி நடக்கப் போகிறாள், கீதாவையும் வழிக்குக் கொண்டு வந்துவிடலாம், இனிக் குடும்பத்தில் ஆனந்தம் தவிர வேறென்ன?

தமக்கு ஏற்பட்ட ஆனந்த மிகுதியால் 'பலே' என்று தமது புத்திரன் முதுகில் ஒரு அடி கொடுத்தார்; அடுத்த விநாடி "கீதா கீதா," என்று குழந்தையைப் போல் கத்திக்கொண்டு மாடியிலிருந்து இறங்கி உள்ளே வந்தார். "அம்மா இங்கே இல்லே" என்றான் சமையல்காரன். தன்னிடமோ, வீட்டில் வேறு யாரிடமோ சொல்லாமல் கொள்ளாமல் போகிறவளல்ல. "கீதா எங்கே?" என்றார்.

கீதா எங்கே? அடுத்த பிரச்சினைக்கு வழி தேட முயன்றார். மோகனரங்கனைக் கூப்பிட்டுக் கேட்டார்.

"எங்கே போய்விடுவாள்? அவதிப்படாதீர்கள்."

"அவள் ஒரு நாளும் சொல்லாமல் போக மாட்டாளேடா; எங்கே போயிருப்பாள்?"

எங்கே போயிருப்பாள்? அதுதான் எல்லோருக்கும் தெரிய வேண்டிய விஷயம். தெரிந்துகொள்வதற்காகச் சென்னைப் பட்டிணம் முழுவதும் வலைவீசினார்கள்.

கீதா எங்கே?

# 20. உடனே புறப்படவும்!

நாகோஜி ராவ் திடுக்கிட்டுப் போய் உட்கார்ந்து விட்டார் வேலய்யாவின் தந்தி அவருக்கு அதிசயமாக இருந்தது. தம்முடைய கம்பெனிப் பெயரை உபயோகித்து யார் அப்படிப்பட்ட தந்தியைக் கொடுத்தது? நல்லவேளையாகப் பதில் தந்தி தமது கைக்கு வந்ததைக் கவனமாக இருக்க பயன்படுத்திக் கொண்டார். விமான நிலையத்திற்குப் போய்ச் சேர்ந்தது அவருடைய கார்.

குறிப்பிட்ட நேரத்தில் விமானத்திலிருந்து வேலய்யா இறங்கி வருவதைக் கண்டதும் இன்னும் ஆச்சரியப்பட்டார். இருவரும் ஒருவரையொருவர் வணங்கி வெளியே வந்தபோது, "தாங்கள் வருவதைக் குறித்து நான் ஆச்சரியப்பட்டேன். தங்கள் வரவைத் தந்திமூலம் தெரிவித்தது நல்லதாகப் போயிற்று" என்று சந்தோஷமாகத் தெரிவித்தார்.

"நான் தந்தி கொடுத்து ரயில்வே ஸ்டேஷனில் உங்கள் கார் வந்து நிற்க வேண்டாம், பிளேனில் வருகிறேன்" என்று தெரிவிப்பதற்கே.

"அதுவும் நன்மைக்கே. முதலில் தந்தியை நம்முடைய கம்பெனி கொடுக்கவே யில்லை."

"நீங்கள் கொடுக்கச் சொல்லவில்லையா?"

"இல்லை."

"அப்படியானல், உங்கள் பெயரைச் சொல்லி யார் கொடுத்திருக்க வேண்டும்?"

"ஏதோ மோசடியான கருத்தோடு நடத்திருக்க வேண்டும். நீங்கள், ரயிலில் வருவீர்கள் என அந்த மோசக்காரன் நினைத்திருக்க வேண்டும், அதனல் பங்களூர் விஜயத்தைச் சற்று ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ளுங்கள்."

வேலையாவின் தலை சுழன்றது, யாருடைய மோசடியாக இருக்கலாம்? தனது தமையன் தன்னை வெளியூர் அனுப்பிவிட்டு மோசடி நடத்துகிருனு? இல்லை, இன்னுரெனப் புரியாத விரோதி மறைமுகமாக இருந்து குழி பறிக்கிருனு? சிந்தனையில் ஆழ்ந்தபடியே நாகோஜிராவ் மோட்டாரில் வந்து ஏறினன்.

"தாங்கள் என் வீட்டில் இருக்கிற வரைக்கும் எந்த ஆபத்துக்கும் அஞ்சவேண்டியதில்லை, பயப்படாமல் போகலாம்" என்று மோட்டாரை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். மறைமுகமாகத் தீங்கு செய்ய நினைக்கும் எதிரியைக் கண்டுபிடிப்பதில் வேலையா ஆழ்ந்திருந்தான், மிருதுலதாவின் கையாள் செய்யவேண்டும், அல்லது தமையன் ஏவல் நடக்க வேண்டும். தனது குடும்பக் களேபரங்களைக் கண்ணியமான வியாபாரச் சிநேகிதரிடம் சொல்ல வெட்கப்பட்டு, சிரிப்பும் விளையாட்டுமாக இருந்து கொண்டான்.

நாகோஜிராவ் பங்களாவிற்குள்ளிருந்து மாலையில் கடைவீதிக்குப் புறப்பட்டபோது, எதிர் சிறகில் தன்னை யாரோ கூர்ந்து கவனிப்பதைப் பார்த்தபோது தனக்கு அறிமுகமான முகமாகப் பட்டது. யோசித்து யோசித்து அந்த நபர் யாரென அறிந்துவிட்டான். தமது கம்பெனியிலிருந்து மானேஜர் பதவியை இழந்தவருடைய மச்சான், மானேஜருக்காக அடிக்கடி கம்பெனிக்குக் காபிப் பலகாரம் எடுத்துக்கொண்டு வருவதைப் பார்த்த ஞாபகம் வந்தது. வஞ்சனை தீர்க்கத் தனிப்பட்ட முறையிலோ, அல்லது பிறர் தூண்டுதலினுலோ மானேஜர் தந்தியை அடித்திருக்கிருர்.

"அதோ போகிறவன் எங்கள் கம்பெனி மானேஜர் இருந்தாரே, அவர் மச்சான்."

"இருந்தாரே என்றால் இப்பொழுது இல்லையா?"

"இல்லை, நாகோஜிராவ்."

"தான் லீவில் வந்திருப்பதாக நாலைந்து தினங்களுக்கு முன் சொன்னார் உங்கள் மானேஜர். ஏன் வேலையைவிட்டுத் தள்ளி விட்டீர்கள்."

"கணக்கில், என் அனுமதியின்றி லட்ச ரூபாய் கொடுத்து விட்டார்."

"அப்படியா? என்னிடம் வேலையில் இருப்பதாகச் சொன்னதும் பொய்யா?"

"மோட்டாரைத் திருப்புங்கள். உங்கள் பங்களாவின் காவலாளியிடம் கேட்கலாம்" என்றதும் மீண்டும் பங்களாவை நோக்கிக் கார் வந்தது' காவலாளி மரியாதையாகக் காரின் பக்கம் வந்து கன்னடத்தில் பேசினான்.

"அவனிடம் என்னைப்பற்றி யாராவது விசாரித்தார்களா, என்று கேளுங்கள்."

அவர் கேட்டதற்குக் காவலாளி, அவர் வந்த தகவலை யாரோ கேட்டுப் போனதாகவும், எந்த மார்க்கமாக வந்தார், காரிலா, ரயிலிலா, பிளேனிலா என்று கேட்டதாகவும் சொன்னான், மேலும் தான் வந்த விபரம் அறிந்ததாகவும் ஆனால் எந்த வாகனம் என அறியாதவன் என்றும் சொன்னான்.

"சரி, மிஸ்டர் நாகோஜிராவ், இது மானேஜர் வேலைதான். அவருடைய மைத்துனன் இங்கே இருக்கிறான். அவனைக் கண்டு பிடிக்க உங்கள் கம்பெனி ஆட்கள் மூலம் முயற்சி செய்யுங்கள்."

"தொலைகிறான், மிஸ்டர் வேலைய்யா. நமக்குக் கேடு செய்ய நினைக்கிறவன், தானே கேடு அடைவான்."

"ஒன்று, உங்கள் கம்பெனி பெயரை உபயோகித்து தந்தி கொடுத்தது தவறு. இரண்டு, என்னை ஏமாற்ற நினைத்தது. அதனால் இதைக் கண்டுபிடித்துப் போலீஸில் ஒப்புவிக்க வேண்டும். நாளை நமக்குள் வியாபார நிமித்தமாகத் தந்தி கொடுத்தாலும் சந்தேகம் வருமல்லவா?"

"வாஸ்தவம். அந்தத் தந்தியின் வாசகம் நினைவிருக்கிறதா?"

"தங்கியே இங்கே தான் இருக்கிறது."

கார், போலீஸ் ஸ்டேஷன் பக்கம் போய் நின்றது. நடந்த விபரங்களைச் சொல்லிவிட்டு, இருவரும் போய் விட்டார்கள். வேலையா தன் தாய்க்கு வாக்குக் கொடுத்தபடி, பட்டுப் புடைவை களும், பட்டுக் குங்குமமும், வாங்கக் கடைவீதிக்கு வந்தான். நாலைந்து புடைவைகள் அருமை அருமையான வர்ணங்களில் வாங் கினான். நாகோஜிராவின் வேண்டுகோளைத் தட்டமுடியாமல் இரண்டு நாள் தங்கி இருந்து மூன்றும் நாள் புறப்படுவதாக ஒப்புக் கொண்டான்.

நாகோஜிராவ் விருந்தினரை உபசரிப்பதில் பெரிய கை. வேலையாவின் கம்பெனி மூலமாக ஏராளமான லாபத்தை அடைந்தவர். அதனால், மோசக்காரர்கள் வலையில் விழுந்து விடா மல் இருக்க இமைபோல் காத்தார். அவனைத் தனியாக அனுப் பாமல் தாமும் உடன் செல்லப் பழக்கப்படுத்திக் கொண்டார். மைசூரில் தசரா சமயமாக இருந்ததனால் இருவரும் மைசூர் போய் திரும்புவது என்று முடிவு செய்து கொண்டார்கள். மைசூரில் நாகோஜிராவுக்குக் கிளைக் கம்பெனி இருந்ததினால் இவர்களுக்கு அங்கே பல சௌகர்யங்களுக்கும் வசதியுண்டு. ஊரை விட்டு வெளி யூர் வந்ததாலும், குடும்பத்தில் அமைதி ஏற்படும் என்ற எண்ணத் தாலும் நாகோஜிராவுடன் மைசூர் புறப்பட்டான் வேலையா. தங்களுடைய பயணம் எங்கே யென நாகோஜிராவ் யாருக்கும் தெரிவிக்கவில்லை. வேலையாவின் எதிரி உளவு தெரிந்து ஆபத் துக்கு அடிகோலாதிருக்க, ரகஸியமாகவே இருந்துவிட்டார்.

வேலையா. மைசூரில் ஒரு நாள் இரண்டு நாள் தாமதிக்க நினைத்தவன் தசராவின் ஆடம்பரத்தைக் கண்டு அதிக நாள் தங்க எண்ணிவிட்டான். இதனால் தாயாருக்குத் தான் புறப்பட்டுவரும் தேதியைக் குறித்துக் கடிதம் எழுதியிருந்தான். மிகுந்த யோச னைக்கப்பால் கீதாவுக்கு ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்த் தான். அவன் நினைத்தபடி பதில் வரவில்லை. தாயார் மட்டும் "உடனே புறப்பட்டு வரவும்" என்று எழுதியிருந்தாள். அதனால், "உன்னுடைய வரவை உடனே எதிர்பார்க்கிறேன். குடும்பத்தில் சில சிக்கலான பிரச்னைகள் இருக்கின்றன" என்று சுட்டாக எழுதியிருந்தாள் காமாட்சியம்மாள்.

காமாட்சியம்மாள் விவரித்து எழுதக்கூடிய விஷயமா ரிவால்வர் விஷயம்? அதனால், குறிப்பாக உடனே வரவேண்டு மென்று எழுதினாள். ரிவால்வரை எடுத்து அஞ்சலை வாசலில் வீசிய அந்த நிமிஷம் முதல் ரங்கசாமி உணர்வற்றுக் கிடந்தான். யாரிடமும் பேசவில்லை. அவனுடைய முகக் குறியே அவனுடைய அகக் குறியை வெளிப்படுத்திற்று. அன்றுமுதல் தண்ணீர்கூட அருந்தாமல் கிடந்தான். தாயும் மாமனும் எவ்வளவோ சொன்னார்கள்; அறையைவிட்டு அவன் வரவேயில்லை. தன்னுடைய ரகஸியம் அம்பலப்பட்டுப் போனதோடு, நடிகை மிருதுலதா கேலி செய்வாளே என்ற அவமானம் வேறு. அஞ்சலையின் வேண்டுகோளின் படி காமாட்சியம்மாள் நடுங்கும் கையோடு அந்த ரிவால்வரை இரும்புப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டிவிட்டாள். இதனால் ரிவால்வரை இனி எடுத்துக்கொண்டு போய்த் திருப்பிக் கொடுப்பதுகூட நடக்காத காரியம். இப்படிப் பல்வேறு மன உளைச்சல்களில் ஒரு நாள் முழுவதும் பட்டினியாகக் கிடந்தான். என்ன இருந்தாலும் தாய்ப் பாசம் விடுமா?

"வேலெய்யாவிடம் ஒரு ரகஸியம் சொல்லவில்லை. நடந்தது நடந்துவிட்டுப் போகிறது. இனியாவது நீ நல்லவனாக இருப்பாயா? உன்னைப்பற்றி இவ்வளவு கேவலமாக உன் தம்பி நினைக்கமாட்டான். யாராவது ரிவால்வரை பற்றிச் சொன்னாலும் சிரிப்பான். மறந்து விடு, நானும் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன்" என்று அன்பாகச் சாப்பிட அழைத்தாள். கதிகலங்கி பயந்து கிடந்த ரங்கசாமிக்குத் தாயின் வார்த்தைகள் நம்பிக்கை தந்தன. ஆனாலும் தம்பிக்குத் தெரியாமல் இருக்காது. தெரியும் காலத்திலே தன் உயிருக்கே உலை வைப்பான். அதனால், தாயிடம் சிக்கிக்கொண்ட ரிவால்வரை எப்பாடுபட்டாவது வாங்கிக்கொண்டு போய்விடவேண்டும். அதை இனிப் பிரயோகம் செய்யக்கூடாது. மிருதுலதாவிடம் சேர்ப்பித்து அவளுக்கு நமஸ்காரம் செய்த பின்பு, திரும்பிப் பாராமல் வந்துவிட வேண்டும் என்று எண்ணினான்.

மிகவும் நல்ல எண்ணமே. ஆனால் நிறைவேற்றும் சமயம் எப்படி எப்படி கோணக்கிளைகள் வெடிக்குமோ? பெற்ற பிள்ளை என்றாலும் உடன் பிறந்த சகோதரனுக்கு உயிர் வாங்க ஆயுதம் தாங்கியபிள்ளை. அதனால் சிறிது முன் யோசனையும் விழிப்பும் கொண்டாள் தாய்.

"அம்மா, நான் செய்தது தவறு. அந்த நடியின் பேச்சைக் கேட்டுத் தம்பிக்குத் துரோகம் செய்ய நினைத்தேன். அஞ்சலை மட்டும் இன்று சொல்லாதுபோனால் நான் தம்பியைச் சுட்டிருப்பேன்."

"அப்படியென்ன துரோகம் செய்தான்? அவன் உழைத்த காசுகள் தான் நீ இருக்கும் படுக்கை, நீ வசிக்கும் அறை, நீ உண்ணும் சோறு. எல்லாம் அவன் ரத்தம்; அந்த ரத்தத்தையே குடிக்க நினைத்துவிட்டாய். உன்னைச் சொல்லிப் பயன்? என் கருமாந்திர வினை."

தாய் விம்மி விம்மி அழுவதைக் கண்டதும் ரங்கசாமியின் கொடிய உள்ளங்கூடக் கொந்தளித்தது. எவ்வளவு மகத்தான தவறு. உண்மையில் தம்பி யோக்கியன், நல்லவன். அவன் மீது துவேஷம் கொண்டிருந்தது தவறு. மாய வலையில் தன்னைச் சிக்க வைத்து மிருதுலதா பொம்மலாட்டம் ஆட்டிவிட்டாள். அஞ்சலைக்குள்ள விசுவாசம் தனக்கில்லை.—இவ்வாறு எண்ணியவன் குழந்தைபோல விம்மி விம்மி அழத் தொடங்கினான். தன்னிலையை உணர்ந்து அழுகின்ற மகனைக் கண்டதும் தாய்க்கு அவன் மீதிருந்த கோபம் கரைந்து அன்பு பிறந்தது. தன் மன்னிப்பைக் கோரி நிற்கும் ரங்கசாமிக்கு அவள் மனமாற மன்னிப்புத் தந்தாள் அவன் முகத்தைத் துடைத்துப் பல் துலக்கச் சொன்னாள். "ரிவால்வரைப்பற்றி உன் தம்பியிடம் நான் சொல்லுவதில்லை; உங்கள் அன்பு வளர வேண்டும் என்ற நன்மைக்காக நான் சொல்லவில்லை" என்று வாக்குறுதி கொடுத்தாள்.

ரங்கசாமிக்கு உயிர் வந்தது. உணர்ச்சியும் வந்தது. எழுந்து தாயின் மனம் கன்றிப்போகாதிருக்க ஏதோ சாப்பிட்டான். மீண்டும் அறைக்குள் வந்து குப்புறப் படுத்துக் கொண்டான். யோசனை, யோசனை, அர்த்தமற்ற யோசனைகள், அவன் மூளையில் ஓடிக் கொண்டிருந்தன. வீட்டுக்குள் காமாட்சியம்மாள் 'அண்ணாச்சி, நான் அவனுக்கு வாக்குறுதி சொல்லிவிட்டேன்" இந்தச் சம்பவம் நடந்ததாக வேலய்யாவுக்குச் சொல்லாதீர்கள். வேலய்யாவுக்குத் தெரிய வேண்டாம். அஞ்சலை நீயும் மனசிற்குள் வைத்துக்கொள்" என்றாள்.

"நீங்களும், ரிவால்வரை இரும்புப் பெட்டிக்குள் பூட்டியே வைத்துக் கொள்ளுங்கள். அதுவரை ரகசியமாக இருக்கட்டும்."

"அவன் அழுத அழுகையை நீ எங்கே கண்டாய்? அத்தனை அழுகை அழுதான். ஏதோ அவசரப்புத்தி, இனிமேல் அப்படியெல்லாம் நடக்காது. தெரிகிற காலத்தில் தெரியட்டும். இப்போது தெரிந்தால் விபரீதம்" என்று 'இருவரையும் தன்னோடு கூட்டுச் சேர்த்துக் கொண்டாள் பெற்றவள்.

வீட்டிற்குள் எல்லோரும் கலங்கிய மனத்தோடு இருக்கும் நிலையில் மோகனரங்கம் வந்தான். "கீதா இங்கே வந்தாளா?" என்று படபடப்பாகக் கேட்டான். அவன் கேள்வியிலிருந்து கீதாவை இரண்டு நாளாகத் தேடுகிறதுபோல அறிந்து கொண்டார்கள்.

"கீதா வரவில்லையே. சொன்னாளா இங்கே வருவதாக?" என்று பெரியவர் கேட்டார். மோகனரங்கம் தயங்கியதைப் பார்த்துவிட்டு, "சொல்லுங்கள் என்ன நடந்துவிட்டது" என்றார்.

"நேற்றுப் போனவளைக் காணோம். நேற்று மாலையில் வருவாள் என்று எதிர்பார்த்தோம். அவள் வரவில்லை. எங்கெங்கோ போய்ப் பார்த்தும் காணவில்லை, இங்கே வந்திருக்கலாம் என்ற முடிவில் தேடிவந்தேன்."

"ஐயோ இங்கே வரவில்லையே" என்றாள் காமாட்சியம்மாள். கீதாவின் மறைவைக் கேட்டதும் மன அதிர்ச்சி கொண்டாள்.

"உங்கள் பிள்ளைகள் யாருமில்லையா?"

"பெரியவன் இருக்கிறான். டேய் ரங்கசாமி, வாடா! உள்ளே அறையில் இருக்கிறான். சின்னவன் வேலய்யா வெளியூர் போயிருக்கிறான்."

"என்றைக்குப் போனது?"

அஞ்சலைக்கு அக்கேள்வி அநாகரிகமாகப் பட்டது. "அவர்கள் வெளியூர் போய் ஒரு வாரம் ஆகிறது. நீங்கள் நினைக்கிறபடி நடந்திருக்க முடியாது" என்று சொல்லவே அவமானத்தால் தலை குனிந்தான் வக்கீல். கீதாவை அழைத்துக் கொண்டு வேலய்யா ஓடிவிடவில்லை என்பதைக் கூறிவிட்டாள் அஞ்சலை.

"உங்களுடன் துணைக்குப் பெரியவனை அழைத்துப் போங்கள். கீதாவின் சிநேகிதிகள் வீடெல்லாம் பார்த்தீர்களா?" என்று ஆவலோடு கேட்டாள் காமாட்சியம்மாள்.

பெரியவருக்கு ஞாபகம் வந்தது, "ரேடியோவில் காணாமற் போனவர்களை அறிவிக்கிறார்களே, நாமும் அறிவிக்கலாமே"

என்றார். வயது வந்த ஒரு பெண்ணைப்பற்றிக் கௌரவம் வாய்ந்த தங்கள் குடும்பத்தார், அறிவித்தால் அது கேவலத்துக்கு இடமாகும். வெளியே சொல்ல வெட்கப்பட்டு, நேற்றிரவு முதல் சென்னை முழுவதும் தேடுவதாகச் சொன்னான், மோகனரங்கம்.

வீட்டுக்குள் இருப்பதைவிட வெளியே போவதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைப்பதைப் பயன்படுத்த நினைத்து, "நானும் வரு கிறேன், உங்களுக்கு ஒத்தாசையாக" என்றான்.

"போய் ஒத்தாசை செய்யடா ரங்கசாமி" என்றாள் தாய். வீட்டை விட்டு வெளியேறி மோகனரங்கத்தோடு ரங்கசாமியும் காரில் போய்ச் சேர்ந்தான்.

"இது என்ன கூத்து. கீதா ஏன் வெளியே போய் விட்டாள்?" என்றார் பெரியவர்.

"என்ன மனஸ்தாபமோ? படித்த பெண்ணாக இருந்ததால் ஓட முடிகிறது. நம்முடைய அஞ்சலை ஓட முடியுமா?" என்று காமாட்சியம்மாள் அலுத்துக் கொண்டாள். தன் தமையனாரிடம் வேலய்யாவை திரும்பும்படி உடனே ஒரு கடிதம் எழுதிப் போடச் சொன்னாள்.

"கீதா ஏன் போயிருக்க வேண்டும்? நீங்கள் என்ன நினைக் கிறீர்கள்?"

"நான் எதை நினைக்க? கீதா இங்கே வராமல் இருக்கிறதை நினைத்தால் அவள் தகப்பனார் கோபப்பட்டிருக்க வேண்டும். கீதாவை அவள் இஷ்டத்திற்கு எதிராக யாரையாவது மணம் செய் யும்படி சொல்லியிருப்பார், அல்லது அவள் இங்கே வரக்கூடாது என்றிருக்கலாம்."

"கஷ்டகாலம் எப்படிச் சோதனை செய்கிறது. வேலய்யா வந்து அவள் தலைமறைவைக் கேள்விப்பட்டால் எவ்வளவு கஷ்டப் படுவான்?"

"வருகிற துன்பங்கள் வந்து தீரும். நாம் தடுக்க முடியுமா?" என்று வேதாந்தப் பாதையில் நினைவைச் செலுத்தினார். தபாலை எழுதியவர் தாமே எடுத்துக்கொண்டு பெட்டியில் போட்டுவிட்டுப் பிள்ளையார் கோவிலை வலம் வந்து தம் குடும்பத்தாருக்கு நேர்ந் துள்ள கஷ்டங்கள் பனிபோல விலக அருள் சுரக்க வேண்டுமெனப் பணிந்து வரம் வேண்டப் புறப்பட்டார்.

வேலய்யா, தன்னுடைய குடும்பத்தில் என்ன கஷ்டமென யூகிக்க முடியாதவனுகி உடனே புறப்பட்டுப் போக எண்ணி, "மிஸ்டர் நாகோஜிராவ், மைசூரில் இன்னும் இருக்க ஆசையாக இருந்தாலும் குடும்ப நலத்தை முன்னிட்டுப் போக வேண்டியிருக்கிறது. நான் உடனே போயாகவேண்டும்" என்று சொன்னுன். நாகோஜிராவ் மூட்டை முடிச்சுகளுடன் பந்தோபஸ்தாக அனுப்பி வைத்தார். வேலய்யா சென்னைக்குப் புறப்பட்டான்.

## 21. 'மிருதுலதா ஒழிக' — கீதா

தேடிப்போன செடி காலில் சிக்கிய கதையாக மோகன ரங்கன் எவ்வளவோ வலைபோட்டு அரித்துப் பார்த்தும் கிடைக்காத கீதா, ரங்கசாமியின் கண்ணில் சுலபமாக விழுந்தாள். தன் மீதுள்ள குற்றம் தாயாருக்குத் தெரிந்துவிட்ட காரணத்தால், ரங்கசாமி தாயின் முகத்தில் விழிக்க அஞ்சியும் அஞ்சலை முகத்தைக் காண பீதி கொண்டும், தனது பங்களாவை விட்டு வெளியே இருக்க எண்ணங்கொண்டவனுக்கு மோகனரங்கத்தோடு புறப்பட்டது நிம்மதி தந்தது. எங்கும் தேடிக் கிடைக்காமல் போகவே, தங்கள் பங்களாவிற்கே வரும்படி மோகனரங்கம் கூறியும் ரங்கசாமிக்குப் போக இஷ்டமில்லை. தனது நண்பர்களைப் பார்க்கப் போவதாகச் சொல்லித் திருவல்லிக்கேணி பக்கமாக இறங்கிக் கொண்டான்.

ரங்கசாமி தன் நண்பன் வீட்டுக்குள் நுழைந்த சமயம் யாரோ தன்னைத் தாண்டிப் போவதைக் கண்டான். போனவள் கீதா. தேடிப்போன செடி கண்ணில் சிக்கிவிட்டது. தனது அதிர்ஷ்டத்தை நினைத்து ஏதோ பேச வாயெடுத்தான். கீதா விடுவிடுவெனத் தன்னுடன் வந்த கலாசாலைத் தோழியோடு புறப்பட்டுவிட்டாள். ரங்கசாமியின் நண்பன் "வாடாப்பா ரங்கா, எங்கள் வீட்டுக்குள் கூட வரவேண்டுமெனத் தோன்றிற்றே. அதென்ன அப்படி முறைத்துப் பார்க்கிருய்? அது உனது மிருதுலதா இல்லை" என்று பரிகாசம் செய்தான்.

"அது யார் தெரியுமா?"

"தெரியும். நாலாவது வீட்டிலிருக்கிறவள் யாரோ நீதிபதியாம், அவர் மகளாம்."

"கீதா தானே."

"அப்படித்தான் பெயர் சொன்ன ஞாபகம் கீதா உன் கண்ணில் எப்படிச் சிக்கினாள்?"

"விளையாடாதே! அவளைத் தேடி அவள் அண்ணனும் நானும் பட்டணம் முழுவதும் சுற்றினோம். இங்கே இருப்பதைத் தெய்வமே எனக்குச் சொன்ன மாதிரி உன் வீட்டுக்கு வந்ததும் தெரிந்தது."

"சரி அதற்காக வெளியே நிற்கவேண்டுமா? உள்ளே வா."

"நான் கீதாவைச் சந்திக்கவேண்டும். நீயும் துணைக்கு வா. அந்தப் பெண் உனக்கு உறவோ?"

"எங்கள் குடும்பத்துக்கு எட்டின உறவு. இருவருக்கும் கலா சாலைப் பழக்கம் போலும், கீதாவை நீயேன் சந்திக்க வேண்டும்?"

"கீதா தன் அப்பாவிடம் கோபித்துக்கொண்டு வந்து விட்டாள்.

"அப்படியா, நான் சமாதானம் சொல்லி அவள் தோழியுடன் அனுப்புகிறேன்."

"இந்த இடத்தை விட்டுக் கீதா எங்காவது போய்விட்டால், அப்புறம் தேடுவது முடியாது, வா" என்று இழுக்கவே ரங்கசாமி யின் அன்புக்குக் கட்டுப்பட்டு நாராயணசாமி வெளியே வந்தான். நாராயணசாமிக்கு உள்ளும் புறமும் ஒன்றே, ஒளிப்பு மறைப்புக் கிடையாது. கலகலவெனச் சிரித்துக்கேட்கக் கூடாதவற்றைக் கூடகேட்டுவிடுவான். அத்தனை வெள்ளை மனசு.

"கீதாவின் மீது, உனக்குக் கண் இருக்கிறது ரங்கா."

"சே சே, சும்மா வாடா. நடுத்தெருவில் என்ன பேச்சு?"

"நான் அந்த வீட்டுக்குள் போய் என்ன சொல்வேன்; தெரியுமா?"

"எதையேனும் சொல். ஆளைக் கொண்டுபோய் அவள் அப்பாவிடம் சேர்ப்பிக்கவேண்டும்."

"அவர் பிறகு உன்னிடம் சேர்ப்பித்துவிடுவார்."

அப்படிப் பேசக் கூடாதென நாராயணசாமி முதுகில் ஒரு விளையாட்டு அடிகொடுத்தான் ரங்கன். இவர்கள் நாலாவது வீட்டுக்குள் நுழைந்த சமயம் தோழிகள் இருவரும் முகத்தைச்

சோப்பு நுரைக்குள் புதைத்துக்கொண்டு முற்றத்துக் குழாய் அடியில் நின்றார்கள்.

"இந்தா பார் ரங்கன்! அல்லா பண்டிகை வேஷம் போட்ட மாதிரி" என்று வெண்கலத் தொண்டையில் நாராயணசாமி சிரித்துப் பேசவே கீதா முகத்தை அலம்புவதற்குக் கூட யோசிக்காமல் அங்கே இருந்த துண்டில் துடைத்துவிட்டாள். அத்தனை வெட்கமோ மறதியோ.

"சரி சரி, நாம் மாடிக்குப் போகலாம். அம்மணிகள் மேக்கப் சமயம்" என்று மாடிக்குப் போனார்கள். கீதா வந்திருக்கும் நபர் யாரெனத் தெரிந்துகொண்டாள். தான் ஓடிவந்த விபரம் தெரியாதென்ற நம்பிக்கையும் இருக்கவே, "நான் சற்று முன் சொன்னேனே அவர்தான்" என்றாள். சோப்பு நுரைக்குள் முகத்தைப் புதைத்திருந்த தோழி பதில் சொல்லாமல் உம், உம் என்றாள். இருவரும் பத்து நிமிடங்களுக்கு அப்பால் நாகரிகமான உடை தரித்துக் கவர்ச்சியான முகத்துடன் மாடிக்கு வந்தார்கள்.

ஒருவருக்கொருவர் அறிமுகமாயிற்று. ரங்கசாமி கீதாவையும், கீதா ரங்கசாமியையும் மௌனமாகப் பார்த்துக் கொண்டார்கள். நாராயணசாமி "நளினியம்மா அவர்களே, தங்கள் சிநேகிதை வீட்டை விட்டுக் கோபித்து வந்தவள் என்ற விபரம் தெரியுமோ?" என்று சிரிக்காமல் கேட்டான். இதைக் கேட்டு "தெரியும் தெரியும். இங்கே வந்திருப்பவர் கூட யாரென்று எங்கள் கீதாவுக்குத் தெரியும். தங்கள் வாய் மூடி மௌனியாகலாம்" என்று சிரித்தபடியே சொன்னாள்.

கீதாவுக்கு பிறர் முன்னிலையில் தான் ஓடிவந்தவள் என்று சொன்னதும் தலை சுழன்றது. செய்யத்தகாத செயலைச் செய்து விட்ட உணர்ச்சி எழுந்தது.

"நானும் மோகனரங்கமும் நேற்று முழுவதும் ஊரெல்லாம் தேடினோம்" என்று ஆரம்பித்தான்.

"இருக்கிற இடத்தில் தேடவேண்டும்!" என்றான் நாராயணசாமி.

"இப்போது ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நாம் எல்லோரும் கீதா வீட்டுக்கே போகலாம்!" என்றாள் நளினி.

"ஏனம்மா நான் இருப்பது உங்கள் சொந்தப் பேச்சுக்கு இடைஞ்சலாக இருந்தால் இப்பொழுதே போய்விடுகிறேன்" என்று கோபங் கொண்டது போல் நடித்தாள் கீதா,

"அப்படிப் போய்விட்டால் நாங்கள் உண்மையிலேயே சண்டை போட்டுக்கொள்வோம்" என்று நாராயணசாமி விஷமமாகச் சிரித்தான்.

"சண்டையோ சச்சரவோ. அதுதான் ருசியாக இருக்கிறது. சண்டை மனஸ்தாபம் இல்லாத வாழ்க்கை சப்பென இருக்கிறது" என்றாள் கீதா.

"அப்படிச் சொல். மிருதுலதாவுக்கும் உனக்கும் என்ன சண்டை?" என்றாள் நளினி.

மிருதுலதா பெயரைக் கேட்டதுமே எண்ணெய்ச் சட்டி கடுகு போலப் பொறியக் காத்திருந்தாள் கீதா. தன் வீட்டு மனஸ்தாபத்தையே ரங்கசாமி எண்ணிக்கொண்டிருந்தான். மிருதுலதாவுக்கும் கீதாவுக்கும் மனப்புகைச்சல் இருப்பதை அறியாதவனாகி, "மிருதுலதாவிடம் எனக்குப் பகையில்லையடா, நாராயணசாமி" என்று அன்போடு சொன்னான். கீதாவுக்கு ரங்கசாமி மீது ஆத்திரம் பிறந்தது. அவளுடைய சாகஸங்களைத் தெரிந்தும் எப்படி அன்பு இருக்கிறது, என ஆச்சரியங் கொண்டாள். தன் எண்ணத்தை மனதிற்குள் வைத்துக்கொள்ளாமல் பொங்கும் பால் நுரை போல அன்புத் தீயை அணைக்க முயற்சித்தாள்.

"அவள் பெண் ஜன்மமே அல்ல, பெண் ஜன்மமாக நானும் இருப்பதைக் கண்டு வெட்கப்படுகிறேன். எனக்குத் தைரியம் இருந்தால் அவளைச் சுட்டுத்தள்ளிவிடுவேன். அத்தனை பெரிய வஞ்சகி,சாகஸக்காரி, உலகம் முழுவதும் தனக்கு வேண்டுமென நினைப்பவள்."

என்ன பேசுகிறோம் என்ற முன் யோசனையின்றிக் கீதா சொல்லிவிட்டாள். கறந்த பாலும் வாய் தவறிய சொல்லும் இனி மாற்ற முடியாதவை.

நளினி குறுக்கிட்டு "உலகம் என்பது அவரவர்கள் காதல் தானே? உன் காதலர் மீது அவள் மையல் கொண்டால் அதற்காக உலகத்து மக்களை இழுப்பானேன்?" என்றாள்.

நாராயணசாமி, "என்னையே எடுத்துக்கொள்ளுங்கள். மிருதுலதாவைப் பொறுத்தவரை நான் விதிவிலக்கு, நளினி தவிர

யாருமே எனக்குத் தங்கைதான்; வயதானவர்களாக இருப்பின் தமக்கைகள்'' என்று சிரித்தான்.

"இல்லை, உங்களுக்கு மிருதுலதாவின் யோக்கியதைகள் தெரியாது. அவள் எத்தனை பேராக இருந்தாலும் அவர்கள் பணத்தைச் சுருட்ட வந்த பாங்கி. அவள் ஒழிந்தால்தான் இந்தப் பட்டணமே உருப்படும்.''

ஆத்திரம் தீர மேஜையில் தட்டிப் பேசவே, நாராயணசாமி சிரிப்பை மறந்து சிந்திக்கத் தொடங்கினான். தன்னருகே ரங்கசாமி இருந்ததால் ஏதும் சொல்லாமல் திகைத்தான். மாலையில் காபி சாப்பிட்டுவிட்டு வெற்றிலை பாக்குக் கடையில் பார்த்த சுவரொட்டி விளம்பரம் இன்னும் மனதில் ஓடிக்கொண்டிருந்தது. "மாய லீலைகள்; மனிதர்களின் களியாட்டம்'' என்ற வரிகள் வந்து வந்து பதிந்தன. தான் ஆசை மேலீட்டால் இரண்டணாக் கொடுத்து அந்தப் பத்திரிகை வாங்கிப் பார்க்க நினைத்ததும் பிறகு தள்ளி விட்டதும் நினைவில் வட்டமிட்டன. .

நளினி, "நமக்கென்ன கீதா, அவள் எக்கேடு கெட்டால் உனக்கென்ன, விட்டுத் தள்ளு'' என்றாள்.

"எப்படி விட்டுத் தள்ளுவது? நான் புகுந்த இடத்தில் எனக்கு ஓர்ப்படியாக வருவாள்; அவள் முகத்தில் நான் எப்படி விழிப்பது?'' என்றவள் தன் எதிரே ரங்கசாமி இருப்பதை நினைத்து நாணத்தால் பேச்சை நிறுத்தினாள்.

ரங்கசாமி சும்மா விடவில்லை.

"நான் ஒன்றும் சொல்லுவதற்கில்லை; நீ மேலே சொல்லு'' என்று உற்சாகப்படுத்தினான் அவன்.

"மன்னிக்கவும். கழிசடையைப் பற்றிய என் அபிப்ராயங்கள் தங்கள் மனதைப் புண்படுத்தலாம். என் அப்பாவும் அவள் பேச்சுக்குத் தலையாட்டியதால் நான் கோபித்துக் கொண்டு வந்து விட்டேன்.''

"அபபடியா, உங்கள் குடும்பத்துக்குள்ளும் அவள் புயல் வீச ஆரம்பித்துவிட்டாளா?''

"அவள் என் வீட்டிற்குள் வந்தால் நான் வெளியேறிவிடுவேன் என்றேன். என் அப்பா என் பேச்சை லட்சியம் செய்யவில்லை. எங்கள் வீட்டுக்கு அவள் வந்தாள், நான் வெளியேவந்தேன்.''

"ஓகோ ஏதோ மனஸ்தாபம் என்று மோகனரங்கம் சொன்னார். இன்னார் வந்தது, அதனால் இப்படிப்பட்ட மனஸ்தாபம் நேர்ந்தது என்பதையெல்லாம் அவன் சொல்லவில்லை."

"கீதாவின் தமையனும் அவள் வலையில் சிக்கிவிட்டானா, ரங்கா?" என்றான் நாராயணசாமி.

"என்னமோ? யார் கண்டது?"

"இதிலுள்ள வேடிக்கையைப் பார்த்தால் - ரங்கா, நீ கோபித்துக்கொள்ளக் கூடாது, மிருதுலதா தன்னதவள் என்று குறைந்தது ஒரு லட்சம் பேராவது எண்ணியிருப்பார்கள் போல் இருக்கிறது! அவள் கார் வைத்திருப்பதை வாங்கிக் கொடுத்தவர்கள் ஒருவராகத்தான் இருக்க முடியும். ஆனால் அந்தப் பெருமை நூற்றுக்கு மேலான நபர்களுக்குப் போகிறது. அதிலே நீயும் ஒருவன்.

"அவள் பேச்சைத் தள்ளு"

"என்ன? தாங்கள் உண்மையாகவே மிருதுலதாவை வெறுக்கிறீர்களா?"

"ஆமாம்."

"அதனால்தான் அஞ்சலையை மணப்பது என்ற உறுதிகூடச் செய்துவிட்டீர்களா?"

"நான் அஞ்சலையை மணப்பதாக யார் சொன்னது?"

"யார் சொன்னாலும் உண்மை உண்மைதானே?"

"நானாகச் சொல்லாதவரை உண்மைக்கு உறுதி கிடையாது."

"அஞ்சலையை நீங்கள் மணக்கப் போவதில்லையா?"

"ரங்கசாமி மௌனமாக இருந்தான். ரிவால்வர் சம்பவத்திற்குப் பிறகு அஞ்சலையின் மீது ஏற்பட்ட அரைகுறை பாசமும் பனிபோல விலகி வந்தது. எல்லோரும் எதைப்பற்றியும் பேசாமல் மௌனமாக வெகு நேரம் இருந்தார்கள்.

"ஏதாவது படத்திற்குப் போகலாம்" என்றான் நாராயணன்.

"படமா? அவள் முகத்தை நான் பார்க்கவில்லை."

"வேறு ஏதாவது ஆங்கிலப் படம்" என்றாள் நளினி.

"இல்லை, கடற்கரைக்குப் போகலாம்" என்றாள் கீதா.

கடற்கரைக்கு நடந்தே புறப்பட்டார்கள். தொலைவிலே கடலின் கோஷம். கரையில் ஜனக் கடலின் கசமுச சப்தம். பேப்பர்காரப் பையன்கள் கத்திக்கொண்டிருந்தார்கள்.

அதிலே ஒரு குரல்; ஆபாசப் பத்திரிகையின் நாமத்தை அறை கூவிற்று. பலாப் பழத்திற்கு ஓடிவரும் ஈக்கள் போல ஒரு கூட்டம் பையனைச் சுற்றியது. தனியாகக் குழுமிக்கொண்டார்கள்.

அந்தப் பத்திரிகை இதழ், அது மிருதுலதாவின் யோக்கியதையை, அவள் மர்மப் படலங்களை, வெளியிட்டு வந்ததில் ஓர் பகுதியைச் சொல்லிற்று. அரைகுறையான வர்ணனைகள் கடற்கரைக்குப் போய்க்கொண்டிருந்தவர்கள் காதில் விழுந்தது.

"என்ன ஆபாசமாகத் தலைப்புகள் போடுகிறார்கள்! இதை ஏன் அரசாங்கம் தடைபடுத்தக் கூடாது?" என்றான் நாராயணசாமி.

"இதுதான் கல்வியறிந்தவர்கள் செய்கிற தொண்டு!" என்றாள் நளினி கசப்பாக.

"சை, இத்தனைக்கும் தடை எதற்கு? அவளைச் சுட்டுவிட்டால் போதும். அந்தத் தைரியம் ஒருவருக்குக் கூட இல்லை."

ரங்கசாமிக்கு காரில் போகிறபோது, உலக விவகாரங்கள் எவையும் காதில்விழுவதில்லை; நடந்து போகிறபோது மக்கள்பேசும் பகிரங்கப் பேச்சுக்களை அவன் கேட்டதில்லை. கீதா கோபித்துக்கொண்டு வெளியேறும்படி, லதா அப்படியென்ன தீங்கிழைக்க முடியும்? தன்னை ஏமாற்றி வஞ்சனை செய்வதுபோலவே, மோகனரங்கனை வஞ்சித்துவிட்டாளா? மோகனரங்கம் தன்னிடம் ஏன் மிருதுலதாவின் பெயரையே உச்சரிக்கவில்லை? இதில் ஏதோ மர்மம் இருக்க வேண்டும். வெளியான அந்தப் பத்திரிகையைப் பார்க்க வேண்டும். தன்னருகே உள்ளவர்கள் தவறாகவோ கண்ணியக் குறைவோ நினைப்பார்கள். அதனால் அவர்களை விட்டுப் பிரிந்து தனியே ஏகவேண்டும். தனியே சென்று அந்தப் பத்திரிகையைப் பார்க்க வேண்டும்.

ரங்கசாமி தன் சிந்தனைப்படி விலக முடியவில்லை நளினியுடன் வந்து தொத்திக்கொண்ட கீதாவை அவள் தகப்பனார் வீட்டில் கொண்டுவிடவும், ரங்கசாமியின் நட்பை விரோதமின்றி கழற்றிக் கொள்ளவும் நாராயணசாமி திட்டமிட்டான்.

எல்லோரும் மணலில் வந்து உட்கார்ந்தார்கள். முன்னம் ஒருநாள் தானும் வேலய்யாவும் அமர்ந்து பேசிய பேச்சுக்கள் கீதா

வின் காதில் ஒலித்தன. வேலய்யா நினைவு ஏற்பட்டதும், 'உங்கள் தம்பி பங்களூரிலிருந்து வந்துவிட்டாரா?'' என்றாள், கீதா. ரங்க சாமிக்குத் தம்பியின் பேச்சை யெடுத்ததும் வியர்க்க ஆரம்பித்தது.

"தம்பியா? வந்துவிடலாம்."

"ஏது, திடீரென்று பங்களூர் போனார்?''

"அது வியாபார ரகசியம்'' என்றவன், தொடர்ந்து, "அம்மா நம் வீட்டுக்குக் கீதா வருவதே இல்லை எனச் சொன்னாள்'' என்றான்.

"அப்படியா? என் தகப்பனார் 144 போட்டிருக்கிறார்; நான் எப்படி வருவது?''

"அது என்ன 144?''

நளினி குறுக்கிட்டு, "உங்கள் தம்பியைக் கீதா மணக்கக் கூடாதாம். அவர் வீட்டுக்கும் இவள் வரக்கூடாதாம். அதனால் தான் எங்கள் வீடு பாக்கியம் பெற்றது!'' என்று விளக்கம் செய்தாள்.

"ஓகோ, இதற்குக் காரணம்?''

"உங்கள் வீட்டு அஞ்சலையை இவள் அண்ணனுக்குக் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டதால், இவளுடைய அப்பாவுக்குக் கோபம் வந்துவிட்டது.''

"அப்படியா?'' என்றான் ரங்கசாமி.

நாராயணசாமி, "ஒரு பெண்ணுக்கும் ஒரு ஆணுக்கும் கல்யாணம் ஆகாவிட்டால் எத்தனையெத்தனை மாப்பிள்ளைகள், பெண்கள் வந்து தொல்லை தருகிறார்கள்! நளினி கூட எனக்குக் கிடைப்பாளோ இல்லையோ. இது பெரிய சோதனைப் பருவம்'' என்றான் குறும்பாக.

"போதுமே'' என்றாள் நளினி.

"கிணறு என்று தெரிந்திருந்தும் கண்ணிருப்பவர்கள் விழுகிறார்களே அதுதான் உலகத்தில் ஆச்சரியம்'' என்று முறைப் பாக ரங்கசாமியைப் பார்த்தாள் கீதா. தன்னைக் குத்திக் காட்டி நையாண்டி செய்வதை உணர்ந்து அவன், "பெண்கள் உலகம் வேறு; ஆண்கள் உலகம் வேறு'' என்றான்.

"உங்களைப் போன்ற அப்பாவிகள் இருக்கும் வரை மிருதுல்தா போன்ற பெண்கள் - பெண்ணினத்திற்கே இழுக்குத்

தேடுவார்கள். ஆண்களையும் அடிமைப் படுத்திப் பெண்களுக்கும் இழுக்குத் தேடுவார்கள்.''

சண்டையில் வந்து முடிந்துவிடக் கூடாதேயென நளினி பயந்தாள். ''ஊர் எப்படிப் போனால் நமக்கென்ன, கீதா? விட்டுத் தள்ளு'' என்று உபதேசம் செய்யவே, ''என்ன நளினி மிருதுலதாவாம், பெயரைப் பார், பட்டுக் குஞ்சம் கட்டிய மாதிரி. எனக்கு இரு பக்கமும் கொள்ளிக் கட்டையாக இருக்கிறாளே, நான் எப்படி அவளை மறப்பது? எனக்குக் கல்யாணம் வேண்டாமென வீட்டில் இருக்கும் வரை எப்படி அவள் முகத்தில் விழிப்பது......?'' என்று ஆத்திரமாகப் பேசினாள்.

நாராயணசாமி, ''இந்தப் பேச்சை என்னால் கேட்க முடியாது. நான் வீடு திரும்புகிறேன். தோழியும் தோழியும் பேசுங்கள் என்று கடுமையாகப் பேசுவதாகப் பாசாங்கு செய்தான்.

''உங்களுக்காகச் சொல்லவில்லை. உங்கள் நண்பருக்காகச் சொன்னேன்.''

''நான் யார், என்னிடம் சொல்லிப் பயனென்ன?'' என்றான் ரங்கசாமி.

''நீங்கள் ரொம்ப ரொம்ப வேண்டியவர்கள். உங்கள் பெயர் கூட அந்தப் பத்திரிகையில் வந்திருந்தது!''

ரங்கசாமி திடுக்கிட்டான். கீதாகூடவா இந்த மட்டரகப் பத்திரிகைகள் படிக்கிறாள்! ''ஏன் இது படித்தவர்கள் செய்கின்ற காரியமா?'' என்று முணு முணுத்தான்.

''படித்தவர்கள் தாம் இப்போது அதிகமான போக்கிரித்தனங்கள் செய்கிறார்கள். சிந்தனை செய்யவும் சிந்தித்ததைச் செயலாக்கவும் படிக்காதவர்களுக்குத் தெரியாது. அவர்கள் செய்கிற தவறு அற்ப நேரத்தில் நடக்கும், அற்ப நேரத்தில் மறைந்துவிடும். நாகரிகத் தூண்கள் செய்கிற பழிகள் சிரஞ்சீவியாக வளர்ந்து தழைக்கும். படிப்பாம், நாகரிகமாம்; இதற்குக் கலைப்போர்வை ஒரு வேஷம்.''

''ஆமாம், இவ்வளவு பெரிய கருத்துக்களை நேரடியாக மிருதுலதாவிடம் சொல்லுவதுதானே'' என்றான் ரங்கசாமி.

''அவளிடம் பேசப் பிசாசுகள், முக்கியமாக என் அப்பா போன்றவர்களால் தான் முடியும், நான் அவள் முன் நிற்கவும் முடியாது, பேசவும் முடியாது.''

" ரங்கசாமியிடம் இத்தனையும் பேசிப் பயன் என்ன?'' என்று குறுக்கே கேட்டான் நாராயணசாமி.

"இவர்கள் மிருதுலதாவை மணக்காமல் போனால்—அப்படி மணஞ் செய்யக் கூடாது என்பதே என் ஆசை.'' பெருமூச்சு வந்தது ஆசையின் அறிகுறியாக.

"யார் சொன்னார்கள் நான் மணக்கப் போவதாக?''

"என் அப்பா சொன்னார்கள். என் அப்பாவின் முயற்சி அது. தாங்கள் மிருதுலதாவை மணந்தால், உங்கள் தம்பி பிரம்மச் சாரியாக இருப்பார்; நான் உங்கள் வீட்டில் காலெடுத்தும் வைக்கப் போவதில்லை.''

"என் தம்பியின் வாழ்வைப்பற்றி நான் கவலைப்பட வேண்டு மென்பது எந்தச் சட்டத்தில் இருக்கிறது?''

"உடன் பிறப்பு என்பதற்காகச் சொன்னேன்.''

"குரோதம் ஒருவர் மீது ஏற்பட்டுவிட்டால் அதற்காக எதை யும் செய்வார்கள். அதுபோல உன் வாழ்வைப் பாழ்பண்ணிக் கொள்ளாதே, கீதா.''

"என் வாழ்வு எப்படியானாலும் சரி. மிருதுலதா ஒழிந்தால் எனக்கு நிம்மதி.''

"உன் காதலைக்கூடத் தியாகம் செய்வாயா?'' என்று குறுக் கிட்டாள் நளினி.

"எனக்கு காதல் பெரிதல்ல, நளினி.''

"அவ்வளவு பச்சையாகச் சொல்லி விட்டாயே, கீதா. இதை உனது வேலய்யா கேட்டால் உயிர் துறந்துவிடுவார்.''

"காதலைப் பணயம் வைத்து என்னைச் சூதாடும்படி தூண்டி னாலும் சரி; ஆண் மக்கள் செய்யப் பயந்து அஞ்சிச் சாகும் அந்தக் காரியத்தை நானே செய்கிறேன். வீடு புகுந்து மிருதுலதாவைக் கத்தியால் குத்திவிட்டால் சரி'' என்று சொல்லி வெறி பிடித்த வேங்கைப் புலி போல இருந்தாள்.

"என்ன கொலையா? சை, சை! புத்திப் போகிற போக்கைப் பார்'' என்று நளினி தடுத்தாள். ரங்கசாமியின் அழுத்தமான போக்கில் கீதாவுக்கு நம்பிக்கை பிறந்தது. விரோத மனப்பான் மையில் இன்னும் பேச ஆரம்பித்தாள்: தன்னையும் மறந்து அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு, "தாங்கள் எனக்காக அந்தக் காரி

யத்தைச் சாதித்தே தீரவேண்டும். மிருதுலதா ஒழிந்தால் நம் குடும்பம் உருப்படும்'' என்றாள். நாகுக்காக, உடல் கிளு கிளுக்க ''நம்ம குடும்பமா?'' என்ற ரங்கசாமியின் குரல் 'நீ யாரோ, நான் யாரோ' என்ற பொருளை உணர்த்திற்று. ''ஆமாம் நம்முடைய குடும்ப நன்மைக்காகவே சொன்னேன். அவள் ஒழிய வேண்டும். அதுவே எனது ஆசை'' என்று சொன்னாள்.

ரங்கசாமிக்கு விழிப்பு ஏற்பட்டது. ஓரே கல்லில் இரு மாங் கனிகள்! தம்பி மேலுள்ள குரோதம் சுலபமாகப் போய்விடும். தன்னுடைய ரகஸ்யங்கள் தம்பிக்குத் தெரியுமுன்பாகக் கீதாவைத் தன்வயப்படுத்த வேண்டும். அவளுக்குள்ள ஆத்திரத்தில் அவள் எதுவும் செய்யக் கூடியவள். ஊரிலே மிருதுலதாவின் பெயர் சீரழிகிறது. அவளைக் கட்டி ஆளுவதும் தன் சக்திக்கு அப்பாற் பட்ட காரியம். லதா கிடைக்காமற்போனாலும் கீதா போன்ற பெண் கிடைப்பதில் இரட்டிப்பு மகிழ்ச்சி. தம்பி ஏமாந்து போனான்! சந்தர்ப்பத்தை பயன்படுத்த வேண்டும்.

''கீதா, இது நம்முடைய குடும்பத்தைப் பற்றிய விவகாரம்.''

''ஆமாம் அதனால்தான் எனக்கு இத்தனை ஆத்திரம்.''

''நாராயணசாமி—நளினி, இருவரும் என் தோழர்கள்—உனது தோழி என்றாலும் குடும்ப ரகஸ்யங்கள் அம்பலமாவது அழகல்ல. அதனால்...''

''நாம் அதைப் பற்றிப் பேசி ஒரு முடிவுக்கு வரலாம். வாருங் கள்'' என்று ஆத்திரத்தோடு இருந்தாள். ரங்கசாமி மெய்மறந் தான். அவன் பக்கம் அதிர்ஷ்ட தேவதை புன்னகை பூக்கின்றாள்.

நாராயணசாமி, நளினி இருவரையும் தனித்திருக்கச் செய்து விட்டு இருவரும் சற்றுத் தள்ளிப்போய் அமர்ந்தார்கள். தனி மையை எதிர்பார்த்திருந்த நாராயணசாமி—நளினி அசட்டுத்தன மாகச் சிரித்துப் பேச ஆரம்பித்தனர். தனிமையை எதிர்பார்த்த ரங்கசாமி—கீதா இருவரும் காரசாரமாகப் பேச ஆரம்பித் தார்கள்.

சற்றுத் தொலைவில் காற்றுட வந்திருந்த அஞ்சலையும் காமாட்சி யம்மாளும் இந்தத் தனிமைச் சந்திப்பைக் கண்டு திடுக்கிட்டார் கள். அவர்கள் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டு திகைத் தனர்.

"பார்த்தீர்களா, அத்தை" என்று அஞ்சலை கீதாவைச் சுட்டிக் காண்பித்தாள்.

"உஷ், சத்தம் போடாதே!"

"உங்கள் பெரிய மகனைக் காணவில்லையென்றீர்களே. இருக்கிற இடத்தில் இருக்கிறார். வாருங்கள், போகலாம் அங்கேயே போகலாம்" என்று இழுத்தாள்.

"வேண்டாம், வேண்டாம். அவர்கள் அருகாக நமக்கென்ன வேலை? சனியன்கள் எக்கேடும் கெடட்டும். நாம் வீட்டுக்குப் போகலாம்."

"உங்கள் சின்ன மகன் வந்ததும் ரிவால்வர் விஷயத்தைச் சொல்லவே போகிறேன்" என்று பழி வாங்கும் தனது எண்ணத்தை தெரிவித்தாள். காமாட்சியம்மாள் "சரியம்மா, வா காருக்கு வீட்டுக்குப் போகலாம்" என்று அமைதியாக அழைத்துச் சென்றாள்.

இவர்கள் பேச்சையோ, வரவையோ அறியாமல் கீதாவும் ரங்கசாமியும் மேலும் மேலும் பேசிக் கொண்டே போனார்கள்.

## 22. வஞ்சம் தீர்த்த அஞ்சலை

பலஹீனமான சமயத்தில் உண்மையைச் சொல்லிவிட்டு பிறகு சமாளிக்க முடியாமல் திண்டாடுவது, இன்று நேற்று மனித ரத்தத்தில் ஊறிய காரியமா? எத்தனையோ யுகங்களாக நடைபெற்ற சம்பவம். ரங்கசாமி இரும்பு இதயத்தோடு பேச ஆரம்பித்தவன், கண்ணீரும் கம்பலையுமாக இருக்கும் கீதாவின் முகத்தைக் கண்டு வாழைத் தண்டெனவே பிழிபடலானான். மிருதுலதா மீது இருந்த அபார நம்பிக்கை போய் அவள் மீது வெறுப்பும், அவளைப் பழிவாங்க வேண்டுமென்ற நினைப்பும் எழலாயின. தன்னிடம் ரிவால்வர் கொடுத்தது, தன் தம்பியைச் சுடச் சொன்னது, தான் நிலைமையைச் சமாளித்ததுவரை சொல்லிவிட்டான். கீதாவுக்குத் தான் சொன்ன விவரங்களைவிடத் தான் அறிந்து கொண்ட விவகாரங்கள் பிரமிப்புத் தந்தன. தன் எதிரே இருக்கும் ரங்கசாமி தம்பியைக் கொல்ல துணிந்து விட்டான். அதை நினைக்கவே குலை நடுக்கமெடுத்தது. ரங்கசாமி செய்து தந்த சத்தியம், "உன்

சார்பாக மிருதுலதாவை ஒழித்துக் கட்டுவேன், இதுவே என் லக்ஷியம். என் குடும்பத்தையும் உன் குடும்பத்தையும் தொலைக்க இருந்தவள் தொலைவாள். இது சத்தியம்!'' இப்படி பேசும்போது கீதாவின் கையில், ரங்கசாமி அடித்துத் தந்த வாக்குறுதி— இவற்றை அவள் மறக்க முடியுமா? ஒருவரை யொருவர் நம்பிப் பல்லாண்டு பழகியவர்கள் போல் பேசினார்கள். தங்கள் வாழ்க்கைப் பாதையை மறந்து, தங்கள் பொது எதிரியை வீழ்த்துவதே லட்சியமாக எண்ணிக் கற்பனை செய்தபோது "ஏது ஏது, கீதா நீ வரமாட்டாய்? நாங்கள் போகிறோம். பிறகு வருகிறீர்களா?'' என்று நளினி நாலாவது முறையாகக் கேட்டாள்.

மீண்டும் எங்கே போவது என்ற பிரச்னை எழுந்தது. "கீதா திருவல்லிக்கேணியில் இருக்கட்டும். அவள் அப்பா வீட்டுக்குத் தற்சமயம் போக வேண்டாம்'' என்று ரங்கசாமி சொல்லவே, "உங்கள் ஏற்பாடு எப்படியோ அப்படியே இருக்கட்டும். நாளைக்கு இவளை நாங்கள் மறைத்து வைத்திருந்தோம் என்ற கேஸ் வந்தால் நீங்களே சாட்சி'' என்று நளினி சிரித்தாள்.

"இவளையும் உங்கள் மனசில் ஒளித்து வைக்க முடியாது. அங்கே நாராயணசாமி இருக்கிறான்'' என்றான் ரங்கசாமி. நாராயணசாமி புரிந்து கொண்டான்; கீதா மனம் மாறிவிட்டாள்; ரங்கசாமியும் கீதாவின் மோகத்தில் வீழ்ந்து விட்டான்; இனி இவர்கள் போக்கு எப்படியெனக் கற்பனை செய்தான். அவர்களுக்குள் என்ன தீர்மானம் நடந்தது? எப்படி அன்யோன்யம் ஏற்பட்டது? தன் வஞ்சம் நிறைவேறக் காதலைத் தியாகம் செய்து விட்டாளா? ஒன்றும் புலனாகவில்லை.

''நான் எங்கள் வீட்டுக்குப் போகிறேன். கீதாவைப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று டாக்ஸியில் ஏறிப் போய்விட்டான் ரங்கசாமி. அங்கே இருந்து ரங்கசாமி மறைந்தது கண்ணுக்குத் தெரிந்தது. தான் அவசரப்பட்டு அவனையே மணக்கச் சித்தமாக இருப்பதாகச் சொன்ன சொல்லும் காதிலே எதிரொலி செய்தது. பித்துக் கொண்டவளாக நிற்பவளைப் பார்த்து, "ஏன் கீதா, என்ன யோசனை, போகலாமே?'' என்றாள் நளினி.

நகத்தைக் கடித்தபடியே கீதா 'சை' என்ன அவசர புத்தி. மிருதுலதாவை வஞ்சிப்பதற்காக என் வாழ்வைப் பாழ்படுத்திக்

கொள்ளவா? ஏன் கூடாது? வாக்குறுதி செய்து கொடுத்த பின்பு எப்படி மறுப்பது? என்று புரியாமல் திதற்றினாள்.

''என்னம்மா'' என்றான் நாராயணசாமி, அவனுக்குப் பதில் சொல்லுமுன் கீதாவுக்கு அழுகை வந்துவிட்டது.

''ஒன்றுமில்லை. வாழ்க்கை இன்ப துன்பம் கொண்டது தான். கொடுத்த வாக்கை மாற்றுவது அழகல்ல. ஆண்டவன் விட்ட வழி.''

''சரி எந்த வழியாக வீட்டுக்குப் போவது?'' என்றான் கிண்டலாக.

மூவரும் பேச்சு மூச்சின்றி ஆரம்பித்தார்கள். தன் இதயமே வெடித்துவிடும் போன்ற வேதனையைத் தாங்கிக் கொண்டு வந்தாள் கீதா. நாராயணசாமியும் நளினியும் தாங்கள் பேசி முடித்த விஷயத்தைச் சொன்னார்கள்.

''நாளைக் காலை விடிந்ததும் முதற் காரியமாக நாங்கள் உன்னை உன் அப்பாவிடம் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுவது என்ற முடிவுக்கு வந்து விட்டோம். ஏனென்றால் நீயோ பெரிய இடத்துப் பெண். நாங்கள் நடுத்தரக் குடும்பஸ்தர்கள். உன் மறைவு காரணமாக வம்பு தும்பு வரக்கூடாது. ரங்கசாமியின் குணம் நல்லது. அது சேரும் நபரைப் பொறுத்துப் பல வடிவம் எடுக்கும். அதனால் விடிந்ததும் உங்கள் வீட்டுக்குப் போக வேண்டும் இது எங்கள் ஏகோபித்த முடிவு, ஏன் நளினி, அப்படித்தானே'' என்றான் நாராயணன்.

''ஆமாம்'' என்று தலையை அசைத்தாள் நளினி.

''நாளை காலைவரை உங்கள் வீட்டில் இருப்பதில் ஒரு ஆக்ஷேபணையும் இல்லையே.''

''அட கோபித்துக் கொள்ளுகிறாயே கீதா! நீ வயது வந்த பெண்ணாக இருக்கிறதால் உன்னிஷ்டப்படி நடக்கும் உரிமை யுள்ளவளாக இருந்தாலும் உன் அப்பா கேட்கிற கேள்விக்கு நாங்கள் கூண்டில் நிற்கும்படி நேரிடுமல்லவா?''

''மிஸ்டர் நாராயணசாமி, உன்னை இவ்வளவு சுலபமாக ஏமாற்றி என்னை விரட்ட வழி செய்து விட்டாரோ நளினி.''

''உஷ் நடுத்தெரு, பேச்சைக் குறையுங்கள்'' என்றான் நாராயணசாமி. தன்னைக் குத்திக் காட்டியதால் ரோஷம் வந்த

நளினி, "ஏன் நீ கூட இப்படி மெய் மறந்து பேசினதை அந்த வேலய்யா பார்த்தால் உடனே தப்பர்த்தம் செய்து கொள்வார்" என்று பேசினாள். திடீரென்று 'என் புருஷனைப் போகிறவரிடம் நான் பேசுவதை யார் தடுக்க முடியும்?' என்று கீதா சீறினாள்.

நாராயணசாமி மேலே நடக்காமல் நின்று விரைத்துப் பார்த்தான். நளினி கையைப் பிடித்து நிமிர்ந்து பார்த்தான். "உனக்கென்ன பயித்தியமா, கீதா? வேலய்யா காதில் விழுந்தால் என்னாகும்?" என்றாள் நளினி.

"அவரைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என் ஒரே நோக்கம் மிருதுலதா அடியோடு ஒழிய வேண்டும்."

"அவளை ஒழித்துக் கட்ட ரங்கசாமியை மணந்து பயன் என்ன?"

"அவளுடைய ரகஸ்யங்கள், செயல் எல்லாம் ரங்கசாமிக்கே தெரியும்."

"உன்னுடைய கீதா கொண்ட காதல் பொய் காதல்தானா? பாவம் வேலய்யா அதிர்ஷ்டம் கெட்டவன்" என்றான் நாராயண சாமி வருத்தம் தோய.

"நான் வேலய்யாவை மணப்பதாக வாக்குறுதி சொல்லவில்லை" என்று கீதா வாதாடினாள்.

"வாக்கில் பிறப்பதுதான் காதலா? ஜாடை போதாது? குறிப்புப் போதாது? நமக்கேன் இந்த வம்பு? எந்த ராஜாவை எந்த ராணி மணந்தாலும் சரி, நாளை உங்கள் தகப்பனார் வீட்டுக்குப் போக வேண்டும்" என்று கூறிவிட்டு நாராயணசாமி தன் வீட்டுக்குள் போய் விட்டான்.

நளினியும் கீதாவும் நாலு வீடு தாண்டி அங்கே போய்ச் சேர்ந்தார்கள். நளினிக்கும் கீதாவுக்கும் முன்னைப்போல் பேச்சும் சிரிப்பும் ஓடவில்லை. கீதாவின் மனமாற்றம் நளினிக்கு எரிச்சலையும் ஆச்சர்யத்தையும் தந்தன. மிருதுலதாமேல் உயிரையே வைத்திருக்கும் ரங்கசாமி மனம் மாறியதும் நளினிக்கும் இன்னும் வியப்பாக இருந்தது. ஒருவருக்கொருவர் சம்பிரதாயமாகப் பேசிக் கொண்டு, சாப்பாட்டை முடித்துப் படுத்து விட்டார்கள்.

இருவருக்கும் தூக்கம் வரவில்லை. மௌனத்தின் துணை கொண்டு இரவைப் போக்கத் துணிந்தார்கள்.

ரங்கசாமி டாக்ஸி காரில் ஏறிப் புறப்பட்டதும் உடனடியாக வீட்டுக்குப் போக விரும்பவில்லை. தனிமையில் எல்லாச் சம்பவங்களையும் யோசித்துக் கொண்டு, ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டியதாயிற்று. அதனால் 'ஜனநெருக்கடியில்லாத இடமாகப் பூந்தமல்லி வழியாகப் போ' என்றான்.

கார் மவுண்ட்ரோடு வழியே போகப் போக, ரங்கசாமி தங்கள் குடும்பத்தில் ஆதி முதல் அன்றைய நிகழ்ச்சி வரை சிந்தித்தான்.

தம்பியின் திறமை, தனது வஞ்சம், மனோரஞ்சிதப் பூப் போன்ற மிருதுலதாவின் சாகஸம், கனகாம்பரக் கீதாவின் ஒய்யாரம், தாழம்பூ அஞ்சலையின் கபடமற்ற இரக்க சித்தம், மாமாவின் ஆத்மீக வளர்ச்சி எல்லாம் மனசிலே ஓடிக் கொண்டிருந்தன.

"சார், மீனம்பாக்கம் வந்துவிட்டது, இன்னும் போகவா?" என்று டிரைவர் கேட்டபோதுதான் ரங்கசாமிக்குத் தான் டாக்ஸியில் இருப்பதே நினைவுக்கு வந்தது. அதற்குள்ளாக அவனும் ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். மிருதுலதாவை மறப்பது, கீதாவை மணப்பது, தம்பியை முன் போல நேசிக்கிறது. குடும்பத்தில் மற்றபடி தனித்து விடுவது. இவ்வளவு தீர்மானங்களோடு தாயிடம் எல்லா ரகசியங்களையும் வாய் விட்டுச் சொல்லித் தனக்கு மன்னிப்புக் கோருவது என்ற முடிவுக்கும் வந்தான்.

ஆனாலும் சாயங்காலம் கடற்கரையில் தான் பார்க்க நினைத்த பத்திரிகை நினைவுக்கு வந்தது. அதைப் பார்ப்பதா, வேண்டாமா யென்ற தயக்கம் வேறு. பார்த்த பின்பு தனது தீர்மானங்கள் தவிடு பொடி ஆகிவிட்டால் எல்லாம் வியர்த்தம் ஆகிவிடும். பசி எடுக்கவே, ஒரு ஓட்டலுக்குள் நுழைந்தான். சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் தன் இலையிலிருந்த பட்சணத்தைத் தொடாமலேயே இன்னொருவர் வைத்திருந்த பத்திரிகையை குனிந்து சிரமப்பட்டுப் படித்தார்.

"என்ன சார் இந்தவாரம் யாருடைய குட்டு வெளிப்பட்டது?"

"வந்திருக்கு" குரலில்தான் எத்தனை உற்சாகம்!

அவ்வளவுதான் நாலாவது மேஜையில் அரைகுறையாக சாப்பிட்டவர் பிட்டுக் கொண்ட வடையை வாயில் போட மறந்து கையோடு எழுந்து வந்துவிட்டார். ஒருவருக்கும் சாப்பாடு இறங்க

வில்லை. யாருடைய சரிதம் என்று அறிய ஆச்சர்யப்பட்டார்கள்; பணம் வாங்கிய காஷியர்கூட "யாரு சார் அகப்பட்டது?" என்று எட்டியிருந்து குரல் கொடுத்தார்.

"எல்லாம் மிருதுலதா, ஸார், அவள் எப்பேர்ப்பட்ட கை! பாருங்கள்" என்று மோனே முத்தமிழில் சொல்ல ஆரம்பித்தார். பிராசங்கள், அடுக்குத் தொடர்கள் எல்லாம் அவ்வாசிரியருக்கு மிடுக்கான சுவாசம் போல இருந்தன. மேனஜ் கிளீனர் முதல் சரக்கு மாஸ்டர் உள்பட அந்தப் பத்திரிகையின் வாசகம் கேட்கக் பக்தி சிரத்தையாகச் செவி சாய்த்தார்கள்.

அதிலுள்ள ஒவ்வொரு சொல்லும் ரங்கசாமியைத் தீவட்டி போல் தகித்தன. "என்ன, என்ன?" எனக் குனிந்த தலை நிமிர ராமல் கேட்டுக் கொண்டிருந்தான். பிறருடைய சரிதங்களை அவனே படித்திருக்கிறுன். இதுநாள் வரை மிருதுலதாவின் பெயர் பிழைத்திருந்தது. இன்று அம்பலமாகி விட்டது.

நீலமேகம் பிள்ளையின் பங்களாவில் இரவைக் கழித்தாள் என்பது எத்தகைய மர்மம் நிறைந்த சம்பவம்! சாப்பிடுகிறவர் களும் பறிமாறுகிறவர்களும் உலகத்தின் தலைகீழ்ப் பாடத்தையும் பணத்தின் திமிரையும் மேல் வகுப்பாரின் அயோக்கியத்தனத் தையும் கண்ணுக்குக் கண் கண்ட மாதிரி, காதும் மூக்கும் வைத்து அளந்தார்கள். விளாசிப் பேசினார்கள்.

பசிக்கு உணவருந்தப் போனவனுக்குப் பசியே மந்தித்து விட்டது. பெயரளவுக்குக் காப்பியை எச்சில் செய்து விட்டு வெளியே வந்தான். எதிரே இருந்த பெட்டிக் கடையில் கொட்டை எழுத்துக்களில் மிருதுலதா பெயர் பல அடைமொழிக்குள் அடை பட்டுக் கிடந்தது. அதில் ஒரு பத்திரிகையை வாங்கிக் கொண்டு கடைக்காரனிடம் ரூபாய்க்கு சில்லரை வாங்காமலே டாக்ஸியில் வந்து ஏறினுன். 'எங்கே ஸார்' என்றுன் டிரைவர்.

"திருப்பு, தேனும்பேட்டைக்குப் போ" என்றுன்.

டிரைவர், ஆசாமிக்குப் பயித்தியமோ என்று சந்தேகித்தான். அவன் மன உளைச்சலை டிரைவர் எங்கே கண்டான்? மோட்டாருக் குள்ளாக இருந்த மங்கிய வெளிச்சத்திலே அத்தனை மர்மங்களையும் படித்தபோது அம்மாவிடமிருந்து ரிவால்வரைப் பிடுங்கிப் போய் மிருதுலதாவைச் சுட்டு வீழ்த்தினுல் என்ன? நாம் கீதாவுக்குக்

கொடுத்த வாக்கையும் காப்பாற்றலாம். கீதா சொன்னவையெல்லாம் உண்மை. தகப்பனார்மேல் கீதாவுக்கு எப்படிப் பற்றும் பாசமும் இருக்கும்? என்ற மனசிலே குழம்பியவன் டிரைவரிடம் கேட்டான்.

"டிரைவர், மிருதுலதா நடியைப்பற்றி உனக்கு ஏதாவது" என்று ஆரம்பித்தான்.

"ஏன் சார், குளிர்ந்த நேரத்திலே அதைப்பற்றிப் பேசறீங்க" என்று அவனது மதராஸ் பாஷையில் ஏதோ ஒரு அபத்தமான சொல் சொன்னான். உலகம் புரிந்து கொண்ட ஒருத்தியைத் தான் புரிந்து கொள்ளவில்லை என்று மனம் நொந்தான் ரங்கசாமி.

"மிருதுலதா ஒழிய வேண்டும்."

"ஒழிப்பேன்."

"சுட்டு வீழ்த்துவீர்களா?"

'அவசியம்."

"அப்படியானால் என் காதல் கூடப் பெரிதன்று கடமையே பெரிது."

"என்னை நம்பு."

இந்தக் கடற்கரைச் சம்பாஷணை அவன் மூளையில் வந்து தாக்கிற்று. தன் வாக்குறுதிக்கு உறுதி ஊட்டுவது போல அவதூறு; அதுவும் எதிர்பாராத கிழட்டுத்தனமான அவதூறு அவன் நெஞ்சிலே தீ மூட்டியது.

சிந்தித்தான். சீற்றம் வந்தது. ஆனால், கொலை செய்த பின்பு பயன்?

சிறைச்சாலை, வாழ்வில் ஒரே இருட்டு. உலகத்துக்கு நன்மை புரிபவன் இருளில் மடியவேண்டும்!

சற்றே சுயநலம்; நமக்கென்ன? என்ற வேதாந்தம்.

"அவள் எக்கேடு கெட்டால் நமக்கென்ன? மறந்து விடுவோம்" என்று பத்திரிகையைக் கசக்கித் தெருவில் எறிந்தவன், "டிரைவர், சிகரட் இருக்கிறதா?" என்றான்.

டிரைவர் வண்டியை நிறுத்தப் போகவே "கடையில் வாங்க வேண்டாம். போ, வலதுபுறமாக" என்றான்.

கார் வந்து அவனது பங்களா வாசல் முன் நின்றது. வீட்டுக்குள் போய் "அம்மா, இருபது ரூபாய் கொடு!" என்றான்.

அவ்வளவு அன்போடு அவன் பேசிக் கேட்டு ஒரு வருஷத்திற்கு மேலாகி விட்டது. தாயாரின் உச்சி குளிர்ந்து விட்டது. எடுத்துக் கொடுத்தாள்.

இரவு மணி 11 அடித்தது.

டாக்ஸி மறைந்தது. இரண்டு நாட்களாகக் கோபித்துக் கொண்டு போய் விட்ட பையன் வந்துவிட்டதில் தாய்க்கு மகிழ்ச்சி. அவனும் கீதாவும் கடற்கரையில் பேசிக் கொண்டிருந்ததைச் சற்று முன் பார்த்திருந்தும் பாராதவள் போல் "எங்கேடா அப்பா உன்னைக் காணோம்?" என்றாள்.

ரங்கசாமி "அம்மா" என்றான்; குரல் தழுதழுத்தது.

"வாடாப்பா, சாப்பிடலாம்" என அன்பாக அழைத்தாள். தாயின் அன்பு மொழிகள் அவன் இதயத்துக்கு இதமாக இருந்தன. இப்படிப்பட்ட தாயின் உள்ளம் தான் தம்பியைச் சுட்டால் எப்படித் துடிக்குமென நினைக்கவே ஒன்றும் பேசாமல் தாயின் காலில் விழுந்து "அம்மா மன்னித்துவிடு! நான் மகாபாவி. உன் புத்திரன் என்று கூடச் சொல்லுவதற்கு அருகதை யற்றவன்" என்று அழ மாட்டாத குறையாகப் புலம்பினான்.

"ஏண்டாப்பா, நீ என்ன குற்றம் செய்து விட்டாய்? எழுந்திரு" என்று கை பிடித்துத் தூக்கி நிறுத்தினாள். ரங்கசாமி உண்மையிலேயே அழுது துடித்து விட்டான். இதையெல்லாம் அடுத்த கட்டில் நின்று சன்னல் வழியாகப் பார்த்த அஞ்சலைக்குச் சிரிப்பு வந்தது. அத்தனையும் வேஷம் என்று நினைத்தாள். அவளுக்குப் பொறுமை யுள்ளம் இருந்ததால் அது வேஷமாகப் பட்டது.

தன்னிடம் அன்பு காட்டியவன் கீதாவோடு இருப்பதைச் சாயங்காலம் பார்த்தவள் எப்படி நினைப்பாள்? பெண் மனம் அப்படித்தானே சிந்தனை செய்யும்? தாயும் மகனும் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டார்கள்.

"அம்மா, இந்த நிமிஷம் முதல் நான் மாறிப்போய் விட்டேன்: ஆனாலும் ஒரே ஒரு வார்த்தை சொன்னால் கோபித்துக் கொள் ளாதே. அம்மா, நான் தம்பியைக் கெடுக்க நினைத்தேன். அவன் சொன்ன நீதிகளை அநீதிகளாக நினைத்தேன். ஆனாலும் நான் அநீதி இழைத்துவிட்டேன். நீ மன்னிப்பதாக இருந்தால் சொல்லு

கிறேன்'' என்று தாயின் கரத்தைப்பற்றி மன்னிப்புக்கு எதிர் பார்த்து நின்றான்.

உலாவ வரும் பெண் புலிபோல் அஞ்சலை வந்தாள். அவளுக்கு ரங்கசாமியின் வேஷம் பொறுக்கவில்லை. ''ரிவால்வரை எப்படியாவது ஏமாற்றி வாங்கத்தான் அத்தனை நடிப்பு'' என்று முடிவு கட்டினாள். அஞ்சலையைக் கண்டதும், 'அஞ்சலை, உன் பெரிய அத்தானுக்கு இலை போடம்மா' என்றாள். இதுநாள் வரை எதையும் விரும்பிய மனசோடு செய்தவள், சொல்லுக்குப் பதில் சொல்லாதவள், ''நான் மாட்டேன். நீங்கள் மட்டும் சாப்பிட வாருங்கள். போடுகிறேன்'' என்று ஜம்பமாகச் சொன்னாள். பெற்ற பிள்ளை ஆயிரம் கெட்டவனாக இருந்தாலும் தாய்க்கு அது தோன்றுமா?

அஞ்சலையின் பதில் அகராதித்தனமாகப் பட்டது. வந்த கோபத்தைக் காமாட்சியம்மாள் அடக்கிக் கொண்டாள். ரங்கசாமியின் கண்ணீர் அவள் கையில் விழுந்தது. அவளுக்குத் தாய்மை உணர்ச்சி வசப்படுத்தி விட்டது.

"ஏன் அஞ்சலை, உனக்கு அத்தான் மீது கோபம் இருக்கலாம். என் சொல்கூட உனக்கு ஒரு பொருட்டாக இல்லையா? சரி, நானே பறிமாறுகிறேன். வாடா, அப்பா'' என்று மகன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள். அத்தையின் மனக் கசப்பை வாங்கிக்கொள்ள இஷ்டமில்லை யென்றாலும் எடுத்து விட்ட பிகுவை விட்டுக்கொடுக்க அஞ்சலை இடம் தரவில்லை. அதனால் அவள் சும்மா நின்றாள்.

பரிவோடும் பக்குவத்தோடும் அன்பு கனியக் கனியச் சோறு ஊட்டினாள் தாய். இதைக் காணச் சகிக்காத அஞ்சலை சாப்பிட வராது அடம் செய்தாள்.

ரங்கசாமி சாப்பாடு முடித்து வரும்போது, ''அஞ்சலைக்கு என்னைப் புரிந்து கொள்ளும் சக்தியில்லை. நான் இன்னும் பழைய கருப்பனாகவே அவள் கண்ணில் படுகிறேன். ஏன் அஞ்சலை?'' என்றான் ரங்கசாமி. அஞ்சலைக்குக் கோபம் வெடித்துக் கொண்டு வந்தது. முகத்தைச் சுளித்து, ''இல்லை, புதிய கருப்பனைத்தான் தோற்றம் தந்தீர்கள்! உங்களுக்கெல்லாம் கொள்கை, மனிதத் தன்மை யேது?'' என்றாள்.

அஞ்சலை தன் மகனைப் பற்றித் துச்சமாகப் பேசுவது காமாட்சியம்மாளுக்கு இது நாள் வரை பிடித்திருந்தது; இப்போது அவன் மனம் மாறிக் கசிந்துருகி மன்னிப்புக் கோரிய சமயம் அஞ்சலை வீம்பு கொள்வது அர்த்தமற்றது, கண்டிக்க வேண்டியது என்ற எண்ணம் பிறந்தது.

''அஞ்சலை, இந்த வீட்டில் அதிகாரம் யாருக்கு உண்டு என்பதைக் கொஞ்சம் நினைத்துப் பேசு.''

அத்தை சொன்னதும் அஞ்சலைக்குத் தன் கழுத்தைத் திருகிய மாதிரி இருந்தது. என்ன இருந்தாலும் தாய்ப் பாசத்தை வெல்ல முடியாது என்பதை உணர்ந்தாள். வெறித்துப் பார்த்தாள் அஞ்சலை. காமாட்சியம்மாளும் கோபமாக நோக்கினாள்.

''அம்மா, நீ அவளைக் கோபிக்காதே. அவள் தான் நம்முடைய தெய்வம்.''

''இல்லை, கீதாதான் உங்களுக்குத் தெய்வம். அவளிடம் போய்...''

''என்ன, என்ன?''

''என்னவா? கடற்கரை எங்கும் சிரிக்கிறது!''

தான் எந்தக் காரியத்தை மறைத்து வைத்தானோ அதை அஞ்சலைச் சொல்லி விட்டாள். ரங்கசாமிக்கு உடல் நடுங்கியது. தான் செய்த வாக்குறுதி நினைவில் வந்தது. எதிரே இதுவரை தன் பேச்சை நம்பிவிட்ட அம்மா நிற்கிறாள்.

''ஆமாம் அம்மா. நான் கீதாவை மணம் செய்யப்போகிறேன். அவளும் சம்மதித்து விட்டாள். இன்று கடற்கரையில் சந்தித்தேன். உனக்குத் தனியாகச் சொல்ல வேண்டுமென்று இருந்தேன்.

''நீ யாரை மணந்துகொண்டாலும் சரி, யோக்கியனைக் காலந் தள்ளினால் போதும்'' என்று நடு நிலைமை வகித்தாள். இதுதான் அஞ்சலைக்கு நஞ்சாக இருந்தது.

''என் அத்தை, இப்படி எத்தனை பேருக்கு இவர் மாலையிட நினைக்கிறார்? இதுதான் முறையோ?''

''அஞ்சலை, உன்னிடம் யோசனை கேட்கும் போது நீ சொல் இது எங்கள் வீட்டு விவகாரம்.''

"ஆ!" எவ்வளவு சுலபமாகப் போய்விட்டது! என்ன இருந்தாலும் அஞ்சலை வேறு, வேறுதான் என்றபடியெல்லாம் காமாட்சியம்மாள் பேசிவிட்டாள்.

இனித் தனக்கு உரிமையில்லை, தனக்கு மதிப்பு இல்லை. அஞ்சலைக்குத் துணை ஏது? அழுகையும் தனிமையும் தவிர வேறு என்ன? விடுவிடெனத் தன் அறைக்குள் போய்க் கதவைத் தாளிட்டுக்கொண்டு மெத்தையில் படுத்துக் கண்ணீர் வடித்தாள். தேம்பித் தேம்பி அழுதாள். ரங்கசாமியின் மனமாற்றங்கள், சாகசச் செயல்களைவிடத் தன் அத்தையின் சொற்களே அவளுக்கு ஈட்டிகளாகப் பாய்ந்தன.

"அம்மா, அஞ்சலையை வீணாக ஏன் கோபித்துக்கொண்டாய்? அவளைச் சமாதானப்படுத்து நீ."

"நீ வாடா. அவள் கிடக்கிறாள். யார் யாருக்கு எவ்வளவு உரிமை உண்டென்பது தெரியவேண்டாமா?"

"அம்மா, இன்னும் ஒரே ஒரு விஷயம். அந்த ரிவால்வர் மிருதுலதாவினுடையது. அதை நான் அவளிடம் கொடுத்துவிட வேண்டும்."

"சரி காலையில் பார்த்துக் கொள்ளலாம்."

காமாட்சியம்மாள் சாப்பிடப் போகும் போது, மரியாதைக் காகக்கூட, அஞ்சலையைக் கூப்பிடவில்லை. அவள் தகப்பனார் கதா காலட்சேபம் (பிரசங்கம்) செய்யப் போனவர் இரவு போஜனத்திற்கு வரமாட்டார். ரங்கசாமி தன்னை உபசரித்து பரிமாறிய தாயின் உள்ளத்தை வெகுவாக ரசித்தான். தம்பி வருமுன்னதாக ரிவால்வரைக் கொண்டுபோய் மிருதுவிடம் சேர்ப்பித்து விடுவது, விடிந்ததும் ரிஜிஸ்தர் கல்யாணம் செய்துகொள்வது, அதன் பின்னர் கீதாவின் இருப்பிடத்தை நீதிபதிக்கு அறிவிப்பது. இப்படித் திட்டங்கள் போட்டு முடித்தான்.

தாய் சாப்பிட்டு வந்ததும் ரங்கன் சொன்னான்; "அம்மா ரிவால்வரை இரவோடு இரவாகக் கொண்டுபோய்க் கொடுத்து விடுகிறேன்."

"இரவு வேண்டாம்; நாளைக் காலை நாம் இரண்டு பேரும் போகலாம். என் கண் முன்னால் நீ கொடுத்துவிடவேண்டும்.

நானும் உடன் வருவேன். இது சம்பந்தமாக உன் தம்பிக்கு ஒரு தகவலும் தெரியாது."

"கீதாவைப்பற்றி?"

"அவள் யாரை மணக்கச் சம்மதித்தாளோ அதுதான் முடிவு. இதற்காக யார் குறுக்கிட முடியும்?"

இந்த வேளையில் வேலைய்யா டாக்ஸியில் வந்து சேர்ந்தான். அவன் உள்ளே வந்ததும் அவன் பின்னால் பங்களூர்ச் சேலைகள், குங்குமங்கள் இன்னும் சில சாமான்கள் அடங்கிய பெட்டியை டாக்ஸி ஆள் தூக்கி வந்தான். வேலைய்யாவைக் கண்டதும் உள்ளே அழுது முகம் வீங்கிக் கிடந்த அஞ்சலைக்கு உற்சாகம் பிறந்தது.

"வாடாப்பா வேலு, காரியங்கள் சௌக்கியமாக முடிந்ததா?"

"இல்லையம்மா, அத்தனையும் ஏமாற்றம்."

"என்னடப்பா, சங்கதி."

"நாகோஜிராவ் பெயரை வைத்து நம் கம்பெனியை விட்டு விலகின மனேஜர் கொடுத்தது பொய்த் தந்தி. உயிருக்கு ஆபத்து விளைவிக்கச் செய்த சதி" என்று சொல்லிக் கொண்டே தன் அறைக்குள் நுழைந்தான்.

தம்பியின் உயிருக்கு இன்னொருவனும் சதி செய்தான் என்ற சொல் விழுந்தபோது ரங்கசாமிக்குக் கஷ்டமாக இருந்தது. காமாட்சியம்மாள் வேலைய்யாவுக்கு வந்த கஷ்டங்களை எண்ணி வேதனை யடைந்தாள்.

"வாடாப்பா, எங்கே சாப்பிட்டாயோ? அவர்கள்தான் செய்த சதியென எப்படிக் கண்டுபிடித்தாய்?"

"எப்படியோ நடந்துவிட்டது. நம்முடைய உயிர் நம் கையிலா இருக்கிறது? கொலைக்காரப் பயல்கள் தீர்த்துக்கட்ட நினைத்தால் தப்பிக்க முடியாது. எப்படியோ தப்பினேன். போனதும் வந்ததும். புடவைகள் எடுத்ததும் லாபம். எங்கே, உன்னுடைய மருமகள் அஞ்சலை?"

"அவளா? அவள் படுத்துக்கொண்டாள். வா, நானே பறிமாறுகிறேன். ஏண்டாப்பா ரங்கா, நீ படுத்துக்கொள்ளப் போ" என்று அங்கிருந்து அப்புறப்படுத்திவிட்டு வேலைய்யாவுக்குச் சாதம் போட அடுக்களைப் பக்கம் வந்தாள்.

இந்த இடைவேளையில் அஞ்சலைக்குத் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. பேப்பரிலே சுருக்கமாக நாலைந்து வரி எழுதி எச்சரிக்கை செய்து அந்தக் கடிதத்தை வேலய்யா கண்ணில் படும்படியாக அவன் அறைக்குள் வீசிவிட்டு வந்துவிட்டாள் அஞ்சலை. பிரயாண அலுப்பாலும் சாப்பாட்டுத் திருப்தியாலும் வேலய்யா தன்னறைக்குள் வந்து படுத்துக் கொள்ள நினைத்தபோது அந்தக் கடிதம் கண்ணில் பட்டது.

அதைப் பிரித்துப் படித்தபோது அவன் அடைந்த ஆச்சரியம் மட்டுக்கு அடங்கவில்லை. எதையுமே நிதானித்துக் காரியமாகச் செயலாற்றும் சுபாவமுள்ளவன், பதட்டமில்லாமல் அறைக்குள் உலாவிக் கொண்டிருந்தான்.

அன்றிரவு அந்த வீட்டில் யாருக்குமே தூக்கம் வரவில்லை.

# 23. அப்பனும் மகளும்

இன்னும் சூரியன் உதிக்கவில்லை. இருள் விலகிவரும் வேளை.

காமாட்சியம்மாள் எதிர்பார்த்து வந்தவள் ஏமாந்தாள். இரும்புப் பெட்டிக்குள் தான் வைத்துள்ள ரிவால்வர் இல்லை. எல்லா ஏற்பாடுகளும் முடிந்து ரிவால்வரைக் காணோம் என்றதும் அவள் தலை சுற்றியது. துஷ்டப்பிள்ளை நல்லவனாக மாறும் சமயம் ரிவால்வரைக் காணோம் என்றதும் இவள் மனம் பதறித் துடித்துவிட்டாள். காமாட்சியம்மாள் விரக்தியுடன் பெரிய இரும்புப் பெட்டியைச் சாத்திப் பூட்டியபோது அஞ்சலை தனிமையில் சிரித்துக்கொண்டாள்.

ரங்கசாமியின் அறைக்குள் வந்தவள், "ரிவால்வரைக் காணவில்லையே, ரங்கா? இப்போது என்ன செய்வது?" என்றாள் அவன் திடுக்கிட்டான். மேலும் களேபரத்தை வளர்த்த விரும்பாமல், "அம்மா நீ என்னுடன் திருவல்லிக்கேணிக்கு வா, அங்கே சீதா இருக்கிறாள். அவளை அங்கிருந்து அழைத்துப் போய்ச் செங்கல்பட்டு ரிஜிஸ்தர் ஆபீஸில் திருமணத்தைப் பதிந்துவிட்டு வந்துவிடலாம். அவள் மனம் மாறவிடக் கூடாது" என்று அவசரப்பட்டான்.

"ஆமாம் ரங்கா, அதைவிடச் சுலபத்தில் உன் மனமும் மாறக்கூடாது. இந்த அஞ்சலே ரிவால்வரை எப்படி எடுத்திருக்க முடியும்? திறவுகோல் என்னிடமல்லவா இருக்கிறது."

"ரிவால்வரை நீ அங்கே வைத்துவிட்டு என்மீது அவநம்பிக்கையால் இல்லை என்கிருயா, அம்மா?" என்று தாயுள்ளத்தை உரைத்துப் பார்த்தான். தாய் திடுக்கிட்டாள்.

"ஐயோ, நல்ல பிள்ளை நீ, இதோ சாவி இருக்கிறது. நீ வேண்டுமானலும் பார்," என்று சாவிக்கொத்தை மகனிடம் நீட்டினுள்.

"சரி அம்மா, நீ என்னேடு வா. மிருதுலதா ஒழிந்தாலும் சரி, இருந்தாலும் சரி. நாம் போவோம். உன்னைக் கண்டதும் உன் பேச்சில் கீதாவுக்கு நம்பிக்கை இருக்கும். நான் சொன்னல் நம்பிக்கை எப்படி எப்படியோ?"

காமாட்சியம்மாள், எப்படியாவது ரங்கசாமி யாரையாவது மணந்தால் சரி என்ற முடிவுக்கு வந்திருந்தாள். ஆனலும் ரிவால்வர் மறைந்த மாயம் அவளுக்குத் தெரியவில்லை. அவள் இருதலைக் கொள்ளிபோல் தவித்துத் தட்ட முடியாமல் ரங்கசாமியோடு காரில் ஏறிக்கொண்டாள். கீதாவை அழைத்து வந்துவிட்டால் அப்புறம் கீதாவின் மனப்படி நடக்கட்டும் என்பது காமாட்சியம்மாள் முடிவு.

கார் திருவல்லிக்கேணிக்கு வந்து நாராயணசாமி வீட்டருகே நின்றது. காமாட்சியம்மாள் காரிலிருந்துகொள்ள ரங்கசாமி நளினி வீட்டுக்குள் நுழைந்தான். நளினியும் நாராயணசாமியும் கீதாவுடன் புறப்படத் தயாராக இருந்தார்கள். ரங்கசாமியைக் கண்டதும், "நம்முடைய பொறுப்பு விட்டது நளினி. இதோ வந்துவிட்டான் ரங்கசாமி" என்ருன் நாராயணசாமி. தனது பாரம் இறங்கிவிட்ட உற்சாகத்தில் தன் பங்களாவிற்குப் போவதைவிட ரங்கசாமியுடன் போவதையே கீதா விரும்பினுள்.

"ஓகோ வந்துவிட்டீர்களா? முடிந்துவிட்டதா?" என்று கேட்டாள் ஆவலோடு.

அதே வேகத்தில் பதில் சொன்ருன் ரங்கசாமி. "முடிந்துவிட்டது. கார் வந்திருக்கிறது போகலாமே." கீதா எழுந்து புறப்பட்டாள்.

"கீதா, உன் சந்தோஷத்தில் நீ எங்களிடம் சொல்லாமல் போய்விட்டாலும் அதற்காக நாங்கள் கோபித்துக் கொள்ளப் போவதில்லை" என்று நளினி எச்சரித்தபோது தனது அவசரத்தால் விளைந்த தவறு தெரிந்தது. முகத்தைத் தாழ்த்திக் கொண்டவள் "வரட்டுமா? இருவருக்கும் நான் தனிப் பாரமாக இருக்க மாட்டேன்" என்று வணக்கஞ் செலுத்தி நகர்ந்தாள். நளினியும் நாராயணசாமியும் வெளியே வந்தபோது யாரோ காரில் இருப்பதை அறிந்தார்கள். யார் எனப் பார்க்கும் நோக்கத்தில் நாராயணசாமி பேச்சுக் கொடுத்தபடியே வந்த சமயம் அது காமாட்சியம்மாளாக இருக்கவே திருப்தியடைந்தான். காமாட்சியம்மாள் வசம் கீதா அடைக்கலம் போவது கர்ணனிடம் பணத்தைக் கொடுப்பது போல என்று மனத் திருப்தி யடைந்தான். கார் பல தெருக்கள் வழியாக ஓடத் தொடங்கியது.

காருக்குள் காமாட்சியம்மாளைக் கண்டபோது கீதாவுக்கு ஒரு பக்கம் பயம், இன்னொரு பக்கம் அவமானம். ஆனாலும் சமாளித்துக் கொண்டாள்.

"ஏனம்மா கீதா, உனக்குக் கோபம் இருந்தால் நம்முடைய வீட்டில் தங்கக்கூடாதா? நீ இங்கே வந்திருக்க, இந்த விபரம் தெரியாத அவர்கள் உன் அண்ணனும் அப்பாவும், எவ்வளவு மன வேதனை அடைகிறார்களோ?"

"அவர்கள் பேச்சை எடுக்காதீர்கள் அத்தை எல்லா விபரமும் அவர்கள் தெரிவித்திருப்பார்கள்" என்று ரங்கசாமியைப் பார்த்தாள் நாணத்தோடு.

கார் சென்னைப் பட்டணத்து எல்லையைத் தாண்டி மவுண்டு ரோடு வழியே பறந்தபோது "எங்கே போகிறீர்கள்?" என்றாள் கீதா.

"செங்கல்பட்டுக்கு."

"ஏன்?" என்றாள் ஆவலோடு.

"அங்கேயும் ரிஜிஸ்தர் ஆபீஸ் இருக்கிறது" என்று புன்னகை புரிந்தான்.

கீதாவுக்கு வாதாட இடமில்லை. தன்னுடைய வாக்குறுதி நினைவிற்கு வந்தது. "சரி போங்கள்" என்றாள். கார் குரோம்பேட்டை தாண்டிப் போய்க்கொண்டிருந்தது.

"ஏனம்மா நீ மனம் ஒத்துத் தானே கல்யாணம் செய்து கொள்ளப் போகிருய்?" என்று காமாட்சியம்மாள் பேச்சுக் கொடுத்தாள்.

"ஆமாம், அத்தை."

"எனக்கு நீ மருமகளாக வந்ததில் வெகு திருப்தி," என்றவள் மருமகளின் கரத்தைத் தன்னிரு கைக்குள்ளும் பிடித்து வைத்துக் கொண்டாள்.

"மிருதுலதா ஒழிந்தாளே, அதுதான் எனக்குத் திருப்தி. செத்துப் பிணமாகக் கிடந்தாளா?" என்று சந்தோஷமும் ஆங்காரமுமாகக் கேட்டாள்.

ரங்கசாமிக்குக் கற்பனை தலைதூக்கிற்று

"ஆமாம் கீதா, நேற்றிரவே அவளைத் தீர்த்தாயிற்று. நேற்று நடிகை; இன்று பிணம்."

"சந்தோஷம். நீங்கள் பார்த்தீர்களா?" என்ருள் முன் பக்க ஸீட்டில் கொஞ்சுதலாகச் சாய்ந்தவள், காமாட்சியம்மாள் உடன் இருப்பதை அறிந்து வெட்கத்தால் நாணிப் பின்வாங்கினுள்.

"ஆள் வைத்து முடித்துவிட்டேன். ஆனல் இந்த விபரத்தை நீ யாருக்கும் தெரிவிக்க வேண்டாம்."

"முதன் முதலில் என் தகப்பனுருக்குச் சொல்லவேண்டும்"

"இரண்டு ஆச்சரியங்களையும் ஒன்ருகச் சொல், கீதா."

"இரண்டா? இன்னொரு ஆச்சரியம் என்ன?"

"ஒன்று உன் திருமணம், மற்ருென்று மிருதுலதா திருமணம்."

எல்லோரும் சிரித்தார்கள். மோட்டார் தாம்பரத்துத் தார் ரோட்டிலிருந்து ரயில்வே லைனைத் தாண்டி சிமெண்ட் ரோட்டில் செங்கல்பட்டை நோக்கிப் பறந்தது.

காலை நேரத்தில் எழுந்தபோது தான் எதிர்பார்த்த காரியம் ஒன்றும் நடக்கவில்லை; தன் அத்தையைச் சமாதானம் செய்து விட்டுப் பெரிய மகனுடன் தனியாய் எங்கே போகிருள் என்பதை அறிய முயன்றும் எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை. அதிகாலையில் காரில் எங்கே போகிருர்கள் என்று சிந்தித்தாள் அஞ்சலை.

கார் போய்விட்ட பின்பு அவளுக்கு நிலைகொள்ளவில்லை. அவசர அவசரமாக "அத்தான், சின்னத்தான். நீங்கள் ரிவால்

வரை எடுத்துவிட்டீர்களா?'' என்று படபடப்புடன் கதவைத் தட்டினாள். கதவைத் தட்டும் ஓசை கேட்டு எழுந்து கதவைத் திறந்த படியே "வேலய்யா என்ன கூச்சல்?'' என்றான். அஞ்சலையைக் கதவைத் தட்டினாள். கதவைத் தட்டும் ஓசை கேட்டு எழுந்து கதவைத் திறந்தபடியே வேலய்யா "என்ன கூச்சல்? என்றான். அஞ்சலையைக் கண்டதும். ஓகோ நீயா? உன் கடிதம் கிடைத்தது'' என்றான்.

"கடிதம் இருக்கட்டும், ரிவால்வர் எங்கே?''

"இடம் மாறிவிட்டது. அஞ்சலாதேவி யவர்களே, தங்களுக்கு என் நன்றி'' என்றான் பரிகாசக் குரலில்.

"ஏமாந்துவிட்டார்கள். நீங்கள் எப்படி எடுத்தீர்கள்? அத்தையிடம் அல்லவா சாவி இருந்தது'' என்று வெற்றியைக் கேட்டுக் குழந்தை போன்று குதித்தாள்.

"இரும்புப் பெட்டிக்கு மறு சாவி என்னிடம் இருக்கிறதை அம்மா மறந்துவிட்டாள். ஆமாம், நீ எல்லா விபரங்களையும் சொல்'' என்றவன் சோபாவில் வந்து உட்கார்ந்தான். வாசல் படியில் நின்று யாராவது வருகிறார்களாவென விழி வைத்தவாறே "முன்பொரு நாள் கருப்புப் பூனையைக் கண்டு பயந்ததாக ஒரு சம்பவம் சொன்னேனே'' என ஆரம்பித்தாள்.

"நினைவிருக்கிறது.''

"உண்மையில் அன்று தங்களைச் சுட வந்திருக்கிறார், பெரிய அத்தான்.''

"அப்படியா?'' திடுக்கிட்டான் வேலய்யா. அண்ணன் எதற்காக என்னைச் சுடவேண்டும்? மோட்டு வளையில் அவன் பார்வை கவிழ்ந்தது.

"ஆனால் என்னை ஏமாற்றிவிட்டார். திருடன் வந்ததாகப் பொய் சொன்னார். நான் நம்பிவிட்டேன். ஆனால் அவர் கை படத் தந்த ஒரு துண்டுக் கடிதம்......''

உடனே அக் கடிதம் நினைப்பு வந்து தன் அறைக்குள் போய் அதைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதை வாங்கிய வேலய்யா அவசரமாகப் பிரித்தான்.

"நீ கண்ட காட்சியை யாருக்கும் சொல்லாதே. நீயும் பயப்படாதே. என்மீது அன்பிருக்குமானால் நான் கொலை

யாளி யல்ல என்பதை நீ உணர்வாய். மற்றவை நேரில்.
உன் அன்புள்ள ரங்கசாமி."

வேலெய்யா படித்துப் பார்த்து "உன்னை அண்ணச்சி மணப்ப தாகச் சொன்னதும் இதை மறைத்துவிட்டாய், ஏன் அஞ்சலை" என்றபோது அவளுக்கு அழுகை வந்தது. பிறகு இக் கடிதம் பொய்யெனச் சந்தேகப்பட்ட விபரமும், அதன் பின்னதாகப் பாம்பைச் சிருஷ்டித்தது முதல் எல்லா விபரங்களும் சாங்கோபாங்கமாகச் சொன்னாள்.

"இதுதான் உனது கடிதத்தில் குறிப்பிட்ட குழப்பமா?"

"கடிதம் எழுதிய பின்னர் வந்த குழப்பம் இது."

"அப்படியானால் கடிதத்தில் இருந்த குழப்பம் என்ன?" என்று கேட்டான்.

"அது உங்களுக்குத் தெரிந்தால் கோபம் வரும்" என்று தயங்கிய சமயம், வேலெய்யா எல்லா விபரங்களையும் தன்னிடம் சொல்லும்படி கேட்டுக் கொண்டான்.

"கோபப்பட மாட்டீர்களே."

"சொல் அஞ்சலை, யார் மீது நான் கோபம் கொள்ளுகிறது? இந்த ரிவால்வர் சமாச்சாரம் தானே?" என்று நிறுத்தினான். "இல்லை அத்தான், இன்னும் ஒரு அதிசயம், அதைக் கடிதத்தில் எழுதவேண்டாம். உங்களிடம் சொல்லவே கூடாது என்று தீர்மானம் செய்தேன். ஆனால் நேற்றுக் கடற்கரையில் பார்த்தபோது என் மனம் கட்டுப்பாட்டை மீறிவிட்டது."

"கடற்கரையில் என்ன கண்டாய்?"

"கீதா காணமற்போன விஷயம் உங்களுக்குத் தெரியாது. அதைத்தான் குழப்பம் என்று எழுதினேன்."

சோபாவில் இருந்தவன் திடுக்கிட்டு எழுந்து நின்றான். அவன் தலை சுற்றியது.

"கீதாவைக் காணவில்லையா? எங்கே கீதா?" என்று ஆவலோடு கேட்டான்.

"அவளைக் காணவில்லை என்று அவள் அப்பாவும் அண்ணனும் நினைக்கிறார்கள்."

"அப்படியானால் உண்மையில் என்ன நடந்தது?"

"உங்கள் அண்ணச்சிக்குத்தான் வெளிச்சம்."

மேலே ஒன்றும் தோன்றாமல் அழுதுவிட்டாள் அஞ்சலை. அவளது அப்பாவிக் கண்களிலே தாரை தாரையாக கண்ணீர்த் துளிகள்.

"எதற்காக அழவேண்டும்? பைத்தியக்காரி நீ."

"உங்கள் அண்ணாச்சி இருக்கிறார்களே, வஞ்சனையின் உருவம். உங்களைக் கொல்லச் சதி செய்தார்கள். என்னை மணப்பதாகச் சொல்லியவர், கீதாவிடம் பேசிக்கொண்டிருந்தார்.'

"பேசினால் என்ன?"

"பேசியதால் மட்டும் சந்தேகப்படவில்லை. ஐயோ, சின்னத் தான் உங்களுக்கு நான் எப்படிச் சொல்வது?"

"கீதா மீது உனக்குப் பொறாமை பிறந்துவிட்டது."

"என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். என்னையும் அப்பாவையும் ஊருக்கு அனுப்பிவிடுங்கள். இந்தப் பட்டணத்துத் தில்லுமல்லுகள் எனக்குப் பிடிக்கவில்லை. இவர்தான் இப்படி யென்றால் கீதாவும் இப்படியா?"

"கீதாவைப்பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாது."

"உங்களுக்கும் தெரியாது. எனக்குத் தெரிந்த விஷயம் கூட உங்களுக்குத் தெரியாது."

"கீதா வீட்டைவிட்டுப் போய் எத்தனை நாள் ஆகிறது? அம்மா எங்கே காணோம்?" என்று வீட்டுக்குள் பார்வையைச் செலுத்தினான்.

"உங்கள் அம்மா நேற்றிரவு ஏழு மணி முதல் மூத்த மகனுக் குப் பரிந்துவிட்டார்கள். உங்கள் அண்ணாச்சி அவர்கள் பேசுகிற வஞ்சனையையும் வேஷத்தையும் புரியாமல் உண்மையாக நம்பி விட்டார்கள் உங்கள் அம்மா. என்னைக்கூட அலட்சியம் செய்தார்கள். திட்டினார்கள். நான் மூன்றாவது மனுஷி. தாங்கள் கூட அப்படித்தான்."

துடிதுடித்தவன், "அம்மா எங்கே?" என்றான்.

"தாயும் மகனும் சற்று முன் மோட்டாரில் போய் விட்டார்கள்."

"அப்படியா? அதிகாலையில் எங்கே போனார்கள்?"

"கடவுளுக்கே தெரியும். என்னையும் அப்பாவையும் அடுத்த ரயிலுக்கு அனுப்பிவிட்டுத் தாங்களும் உயிருக்கு ஆபத்தில்லாத

இடத்திற்குப் போய்ச் சேருங்கள்.'' என்றவள் முந்தானையில் முகத்தைத் துடைத்தாள்.

"நேற்று நீ எச்சரிக்கை செய்யாவிட்டால் என்ன நடக்குமோ? விதிக்கு எதிராக நம்முடைய புத்திசாலித்தனம் போட்டியிட முடியுமா? இந்த ரிவால்வர் யாருடையது?''

"நான் எதைக் கண்டேன்? அந்த மிருதுலதா பேச்சில் மயங்கிய உங்கள் அண்ணாச்சி.....''

"ஆமாம் அவள் கொடுத்தனுப்பியிருக்கலாம். கீதாவை நீ எப்போது பார்த்தாய்?''

"நேற்று ஆறு மணி சமயம் பீச்சில் உங்கள் தமையனாருடன் சரஸமாடிக் கொண்டிருக்கப் பார்த்தென்.''

'சரஸம்' என்றவன் உதட்டைக் கடித்துக்கொண்டு "அவள் எங்கே இருக்கிருள்?'' என்று கேட்டான்.

"தெரியாது.''

"நான் அவள் அப்பாவைப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன். நான் வரும் வரை நீ இங்கே இருக்கவேண்டும். மாமா இன்னும் வரவில்லையோ?''

"வரவில்லை. அப்பா வந்ததும் புறப்பட்டுப் போய்விடுவோம்.''

"நானே வந்து ஊருக்கு அனுப்பிவைக்கிறேன். பங்களூரில் இருந்து நான் கல்யாணப் புடவை எடுத்து வந்திருக்கிறேன். இங்கே கொலைக்களம் நடக்கவிருக்கிறது. நான்.........''

"நீங்கள் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். காப்பி பலகாரம் சாப்பிடவில்லையா?''

"சாப்பிட்டுவிட்டே கிளம்பவேண்டும்'' என்றவன் தனக்குள் "அம்மாகூடவா எனக்கு எதிரியாகப் போய்விட்டாள்? எல்லாம் என் தலைவிதி'' என்று கண்ணை மூடிக்கொண்டான். அவன் மனம் சிந்தனைக் கடலில் மூழ்கிற்று.

அஞ்சலை சமையல் கட்டுக்குள் போய்ச் சமையல் மேற்பார்வைக்குப் புகுந்த சமயம், மிருதுலதாவின் கார் வந்து நின்றது. அவள் தடதடவென அறைக்குள் வந்தாள்.

"யாரது, வரலாம்'' என்றதும் யாரைப் பார்க்க வேண்டுமென நினைத்தானே அந்த நபர் வந்தாள்.

"நமஸ்காரம். தாங்கள் பங்களூர் போயிருப்பதாகக் கேள்விப்பட்டேன்" என்று சோபாவில் அமர்ந்தாள் ராணிபோல.

"வந்துவிட்டேன். உங்களிடம் ஒரே ஒரு வார்த்தையைக் கேட்கவே நானே வரவேணுமென்று நினைத்தேன்."

"அடடா, எவ்வளவு நல்லதாகப் போய் விட்டது! நீங்கள் வர வேண்டிய சிரமம் மிச்சம். தாராளமாக என்னைக் கேளுங்கள்." தனக்கே உரித்தான இளமையும் இன்பொலிவும் நிறைந்த சிரிப்பைச் சிரித்தாள். "என்னைக் கேளுங்கள்" என்றொரு சிலேடையையும் உதிர்த்து வைத்தாள்.

"முன்பொரு சமயம் உங்களுக்கு நினைவு இருக்கிறதா? நான் வீட்டுக்குள் வந்த சமயம் ரிவால்வரைக் காட்டிப் பயமுறுத்தியதும், என் ஷீல்க்கு சட்டை தொப்பல் தொப்பலாய் நனைந்ததும் நினைவிருக்கிறதா?"

"அடடே, நல்ல ஞாபக சக்தி உங்களுக்கு. அது விளையாட்டு."

"அந்த ரிவால்வர், விளையாட்டு ரிவால்வர் என்பது பின்னரே அறிந்தேன். ஆனால் இப்போது."

பேச்சு வாக்கில் மேஜை டிராவைத் திறந்து அவள் முகத்துக்கு நேராகக் குறி வைத்தான், சிரித்து நிலவின் ஒளி பிரகாசித்த முகத்திலே இருள் சூழ்ந்தது. மரணம் பிடித்த அவள் உடம்பிலே வியர்வை ஆறாகக் கொட்டிற்று. ஆனாலும் நடிகை, சமாளிப்பதற்கு யூகம் உள்ளவள்.

"என்னையும் பயமுறுத்தி விட்டீர்கள். இதுவும் இது...... விளையாட்டு ரிவால்வரா?"

"வாயை மூடு. இது யாருடைய ரிவால்வர்?"

அவள் திடுக்கிட்டாள். கூண்டுக்குள் வந்து சிக்கிய பிறகு குயுக்தியைத் தவிர வழியில்லை.

"மிஸ்டர் வேலய்யா! சொன்னால் நம்ப மாட்டீர்கள். உங்கள் தமையன் திருடி வந்து விட்டார். உங்களை ஒழிக்கவும் திட்டமிட்டார்."

"சீ நாயே, அவர் பெயரை எடுக்காதே. அவரைத் தூண்டிய பதர் நீ. உன்னைச் சுட்டு வீழ்த்தினால் தான் உலகம் உருப்படும். பெண் அபலை என்பதற்காக உயிரோடு விட்டு வைக்கிறேன். இனி

இங்கே வராதே. போ, எழுந்துபோ'' என்று சிம்ம கர்ஜனை செய்தான்.

''என் வார்த்தையில் நம்பிக்கையில்லையா? நான் இதை எச்சரிக்கை செய்யவே வந்தேன். மேலும்...''

"மேலே, பேச்சே வேண்டாம்! சனியனே, போய்த் தொலை! போ, எழுந்துபோ!" கண்கள் சிவக்க உதடுகள் துடிதுடிக்கக்

''என் கௌரவத்தைக் குலைத்துவிட வேண்டாம். உன் சாகசங்கள் என்னிடம் பலிக்கா. ரிவால்வரை உன்னிடமிருந்து பறிமுதல் செய்யவே போலீசுக்கு ரிப்போர்ட் கொடுக்கப் போகிறேன்.''

"வேண்டாம், வேண்டாம்'' என்று எழுந்து கையைத் தொட்டாள். அடுத்தகணம், அவள் தனது அழகு, ஆணவம் எல்லாம் மறந்து அவன் காலடியில் வீழ்ந்து கட்டிக் கொண்டாள். பெண் என்ற இரக்கச் சித்தம் பிறந்து வேலைய்யா "எழுந்து போய்விடுங்கள் உங்கள் புகழுக்கோ, பெயருக்கோ நான் தீமை செய்யவில்லை. போலீஸில் உங்கள் சூழ்ச்சி பற்றித் தெரிவிக்கவும் இல்லை'' என்று சொன்னான்.

அவள் நகரவில்லை.

''என் வார்த்தையில் சந்தேகமா?''

"சந்தேகம் இல்லை."

''அப்படியானால் உண்மையைச் சொல்லுங்கள்.''

அவள் "கீதாவின் சக்தியைவிட விரக்திக்குத்தான் வேகம் அதிகம்'' என்றாள். அவன் புரிந்து கொண்டான். ''எனக்கு என்றுமே உங்கள் மீது அன்பு தவிர காதல் இல்லை. அதைப் பய முறுத்திப் பெறவும் முடியாது. என் மனசிலே இடம் கொண்டவள் கீதா'' என்றான்.

"என் தங்கைக்குள்ள அதிர்ஷ்டம் எனக்கு இல்லையா?'' என்று ஊசியேற்றினாள்.

''தங்கை முறை, தங்கை முறை? எத்தனை நாளாக?'' என்று சொடுக்குக் கொடுத்தான்.

"உங்களுக்குந் தெரியாதா? கீதாவும் நானும் சகோதரிகள்! நீலமேகம் எனது தந்தையார்."

"சிவ சிவா, என்ன சொன்னீர்கள்?"

"உண்மை. அவரே எனது தந்தை?"

"நிஜமாகவா?"

"ஆமாம்..."

"இதைச் சொல்லவா வந்தீர்கள்?"

"கீதாவைக் காணோம். இங்கே இருக்கிருளா எனப் பார்க்கவே வந்தேன். வந்த இடத்திலே எனது உயிர்போக இருந்தது தப்பிப் பிழைத்தேன்."

"கீதாவைக் காணவில்லையென்பது உண்மையா?"

"எனது சகோதரியைத் தேடியே வந்தேன்."

"மீண்டும் சகோதரி என்ற வார்த்தை வேண்டாம்."

"எனக்கு உயிர்ப் பிச்சை தந்தவர்களிடம் பொய் எதற்கு? நான் சொன்னதில் தவறு இருந்தால் அதே துப்பாக்கியால் சுட்டு விடுங்கள்" என்று ஆத்திரமாகப் பேசினுள். வேலேய்யா தலை சுற்றியது. எந்த முறையில் இந்த உறவு வார்த்தை? அவள் சொல்லிய உறவுமுறை அவன் நெஞ்சைக் குத்திற்று.

"நீலமேகம் உங்கள் தந்தையார் என்று அறிந்தால், நான் உங்கள் உண்மையைப் பாராட்டி ரிவால்வரைப் பற்றிய விபரம் போலீசுக்கு ரிப்போர்ட்டு செய்யாமல் மன்னிப்புத் தந்து விடுகிறேன்."

"ஆஹா. இப்போதே போகலாமா? நீதிபதியைப் பார்க்கப் போகலாம் வாருங்கள்."

"இல்லே. நான் தனியாகப் போய் விசாரித்துக் கொள்ளுகிறேன்."

வேலேய்யா, அந்த ரிவால்வரை எடுத்துப் பத்திரமாகப் பூட்டினன். அவனுக்கு மிருதுலதாவின் தந்தை நீலமேகம் யென்ற விபரம் கேட்டதும் தலே சுற்றத் தொடங்கியது.

"அப்படியானல்?"

"போய் வாருங்கள்! உங்கள் பேச்சில் உண்மையிருந்தால் நானே உங்கள் பங்களாவில் கொண்டு வந்து விடுவேன்."

"உங்கள் நேர்மையில் என்றைக்கும் எனக்கு நம்பிக்கை உண்டு. உங்கள் தமையனரை நான் பார்க்கலாமா?"

"அவர் இல்லே; வெளியே போய்விட்டார்."

''சந்தோஷம்'' என்று நழுவினாள்.

இத்தனை சம்பாஷணைகளையும் செவிமடுத்துக் கேட்ட அஞ்சலை மிருதுலதா போனதும் வேலையா முன்னால் வந்தாள்.

''அவளை ஏன் விட்டுவிட்டீர்கள்.''

''பிறகு என்ன செய்ய?''

''சுட்டுவிடக் கூடாதா?''

''இன்னொருவர் உயிரை எடுக்க நாம் யார்? அவளைப் பயங் காட்டி வைத்தேன். எல்லாம் அவள் ஏற்படுத்திய சூழ்ச்சிகள்.''

''அவளுடைய ரிவால்வர்தானா?''

''ஆமாம்.''

''கீதா தன் தங்கை என்று பொய் சொல்லி உங்களை ஏமாற்றி விட்டாள்.''

''அவள் புளுகை இப்போதே கண்டு பிடிக்கப்போகிறேன். பொய்யாக இருந்தால், கொலை செய்யத் தூண்டிய தண்டனைக் காக, அவள் ஜெயில் வாசம் செய்யப்போய் விடுவாள்.''

''இல்லை, அவள் எமனிடமிருந்து கூடத் தப்பிவிடுவாள்.''

''பார்க்கலாம்! வேலையாவின் திறமையை இன்றுமுதல் பார்க்க வேண்டும். நான் வரும்வரை மாமாவும் நீயும் எங்கும் போகக்கூடாது. அம்மா வந்ததும் நான் அவசரமாகப் பார்க்க விரும்பினதாகச் சொல்லி வீட்டில் இருக்கச் சொல்.''

ஏதோ காபி பலகாரம் சாப்பிட்டவன் மோட்டார் சைக்கிளில் படபடவென அழுத்தினான், மாம்பலத்தை நோக்கிச் சைக்கிள் புறப்பட்டது. வழியிலே ஒரு வெற்றிலை பாக்குக் கடையில் தொங்கிய மஞ்சள் பத்திரிகையின் போஸ்டர் அவன் கவனத்தைக் கவர்ந்தது

அதில் நீலமேகத்தின் பெயர் இருந்தது, நடிகை மிருதுலதா பெயர் இருந்தது. வண்டவாளங்கள் வெளியாகி இருந்தன. 'அப்பனும் மகளும்—அந்தரங்கங்கள்' என்று மகுடமிட்டிருந் தார்கள்.

## 24. புயல்

''கீதா என் தங்கை!''

''கீதா என் தங்கை!!''

இந்தச் சொற்களே வேலையா காதில் ரீங்காரம் இட்டுக் கொண்டிருந்தது. அதிசயத்திற்கு மேல் அதிசயமாக நடந்தன. மிருதுலதா சொன்னபடி கீதா அவளுடைய தங்கையாக இருக்க லாம் என்ற நினைப்பும் இடையிடையே தோன்றியது. போதாக் குறைக்குக் காணாமற்போன கீதா தன் அண்ணனுடன் பேச்சில் இருந்தாள். இப்போது தாயும் மகனும் வெளியே போய் விட்டார் கள். எல்லோருமே ஒன்றாகக் கூடித் தனக்கு எதிராகச் சதி செய்வதாக எண்ணினான் வேலைய்யா.

மாம்பலம் திருப்பத்தில் அவன் கண்ட சுவரொட்டி அவனுக்கு இன்னும் ஆச்சர்யத்தைக் கொடுத்தது. அதிலே போட்டிருந்த விபரங்களை அவன் எதிர்பார்க்கவேயில்லை. மாமனாராக வர விருந்தவரைப் பற்றியும் நடிகை மிருதுலாவைப் பற்றியும் கன்னா பின்னாவென எழுதியிருந்தது. படிக்கப் படிக்க அவனுக்குத் தலைசுற்றியது.

தந்தையும் மகளும், இப்படியா சந்தி சிரிக்கிறார்கள்? எதை நம்புவது? பத்திரிகையைக் கசக்கிப் போட்டுவிட்டு மாம்பலம் நோக்கிப் போனான். அவன் வரவை எதிர்பார்த்துக் கொண் டிருந்தவர் போல நீலமேகம் உட்கார்ந்திருந்தார். அவனைக் கண்டதும் அவர் கேட்ட முதற் கேள்வி "கீதா எங்கே?" என்பதே

வேலைய்யா, "யாரைக் கேட்கிறீர்கள்?" என்றான்.

"நீங்கள் பெங்களூர் போன மறு நாளோ, அதற்கு மூன்றும் நாளோ கீதாவைக் காணவில்லை. உங்களுக்குத் தெரியாமல் எதுவும் நடக்க முடியாது."

"நான் எதையும் அறியாதவன்."

"இங்கே வந்ததன் நோக்கம்."

கோபத்தை அடக்கிக் குணத்தோடு நுழைந்தவனிடம், கொலைக் கேசில் வக்கீல் குறுக்கு விசாரணை செய்வதுபோல் உரத்துக் கேட்டதும் தன் அமைதியை இழந்தான் வேலைய்யா.

மீண்டும், "கீதா எங்கே?" என்று கேட்டார் மாஜி நீதிபதி.

"யாரைப் பார்த்துக் கேட்கிறீர்கள்?"

"யாரிடம் பேசுகிறாய் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளவும்."

சொல்லி விடலாமா? "நடிகையின் கிழட்டுக் காதலன் அவர்களே, ஜாக்கிரதையாகப் பேசுங்கள்" என்ற நினைப்பு உதட்டுவரை வந்து உள்ளடங்கிற்று.

"என்ன விழிக்கிறாய்? எங்கே கீதா."

"நான் கேட்க வேண்டிய கேள்வியைத்தான் தாங்கள் கேட்கிறீர்கள். கீதா எங்கே?" என்று திரும்பிக் கேட்டான்.

"உங்களுக்குத் தெரியாமல் எதுவும் நடக்க முடியாது."

"அப்பால் என்ன?"

"அப்பால் என்ன? கீதாவை இங்கே கொண்டு வந்துவிட வேண்டும்."

"இவ்வளவுதானா?" என்றான் அமைதியாக.

நீதிபதி தாம் கோபமாகப் பேசியதை உணர்ந்து கொஞ்சம் பதறினார். விஷயங்கள் விபரீதமாக மாறுதிருக்க எண்ணங் கொண்டு சிறிது சட்ட ஞானத்தை விட்டு உலக ஞானத்திற்கு வந்தார்.

"வேலையா, என் மகளைக் காணாத ஆத்திரத்தில் பேசி விட்டேன், உட்காருங்கள்."

"உங்களோடு சமமாக உட்காரும் யோக்கியதை எனக்கு இல்லை."

"உண்டு. உனக்குக் கீதாவைப் பற்றி ஒரு விபரமும் தெரியாதா?"

"நான் எதையும் அறியாதவன்" என்று முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு அவன் சொல்லவே, தம்முடைய முகத்தை அதைவிடக் கடுமையாக வைத்துக் கொண்டு "இங்கே வந்ததன் நோக்கம்" என்று சிடுசிடுத்தார், நீதிபதி.

"என் நோக்கங்களை நான் சொல்வதாக இருந்தால் இங்கே உங்கள் பிரேதத்துடன் நான் பேச வேண்டி இருக்கும்."

"அப்படியா, என்னைக் கொல்லும்படி கீதாவே சொல்லிவிட்டாளா? பிறரைக் கொன்றால் சட்டப்படி..."

"சட்டம் கிடக்கட்டும்; ஒரு கழுதை அது! தங்களிடமுள்ள நியாயம், ஒழுங்கு, கௌரவம் என்பனவெல்லாம் செத்துச் சாம்பல் ஆகிவிட்டனவா?"

அவன் பேச்சு அவருக்குப் புரியவில்லை. கீதாவைக் காணாத ஆத்திரத்தால் எழுந்த பேச்சென எண்ணி, "கீதாவைப் பற்றி எதுவுமே தெரியாதா?" என்றார்.

"நான் என்ன, எல்லாம்வல்ல இறைவனா?"

"கடவுளைப் பற்றி என்னைவிடத் தாங்கள் தெரிந்திருக்க முடியாது. வேதாந்தம் பேசியது போதும். யோக்கியர்களை நம்பு வதைவிட அயோக்கியர்களை நம்பலாம்."

"தங்கள் பேச்சை முற்றும் ஆதரிக்கிறேன். என் மனதி லுள்ளதை அப்படியே சொல்லிவிட்டீர்கள். நான் சொல்ல நினைத்த வரிகளும் அதேதான். யோக்கியர்களைப்போல் நடிப்ப வர்களைவிட அயோக்கியர்களை நம்பலாம்."

"போதும், மைசூரிலிருந்து கீதாவுக்கு எழுதிய கடிதம் கிடைத்தது."

"கிடைத்தால் நன்றி."

தன்னை நையாண்டி செய்யவே மகளை ஒளித்து வைத்துவிட்டு வந்திருப்பதாக அவர் நினைத்தார். அதனால் காரசாரமாகப் பேசிக் கொண்டே போனார். அவர் பற்றிய குறிப்புக்களைப் பார்த்து ஆத்திரத்தில் வேலய்யா கோபங் கொண்டான்.

"கீதாவைப் பற்றி எனக்குக் கவலையில்லை."

"எப்படி இருக்க முடியும்? அவளை அழைத்துக் கொண்டு போன அயோக்கியன் யாராக இருந்தாலும் சரி."

"நான் கடத்திச் சென்றதாகக் குற்றம் சாட்டுகிறீர்களா?"

"உன் கடிதமே சாட்சி. அவள் கடிதம் பார்ப்பதற்கு முன் இங்கிருந்து புறப்பட்டு விட்டாள். உனக்குப் பெண் கொடுக்க முடியாது என்றதும், இந்தத் திருட்டு வேலை செய்தாய். அந்தக் களிமண்ணும் உன் பின்னால் ஓடிவந்து விட்டது."

"தவறாகப் பேசாதீர்கள். உங்கள் கீதாவைப் பற்றி நான் எந்தத் தகவலும் அறியாதவன்."

"பொய்!"

"சரி, அறிந்தவன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். நான் வந்ததன் நோக்கம்..."

நீலமேகத்திற்குக் கோபத்தை வளரவிடாமல் சாந்தமாகக் காரியத்தைக் கொண்டு செல்ல மறுபடியும் மனம் வந்தது. கோபத்

தை மாற்றிக் கொண்டு "உண்மையில் உனக்குக் கீதாவின் மறை வைப் பற்றித் தெரியாதா?" என்றார்.

"தெரியாது".

"அப்படியானல் கீதா எங்கே?"

"அவளைப் பற்றி இனி என்னிடம் கேளாதீர்கள். போலீசுக் குச் சொல்லுங்கள். என் கடிதத்தை வேண்டுமானாலும் பிரித்துப் பாருங்கள்.

அவர் பிரித்துப் பார்த்தார். அதிலே மோசடியான கருத் தில்லை. மோகம் ததும்பும் மொழிகள் இருந்தன. நீலமேகம், "தம்பி என்னை மன்னித்து விடு, உன்னேடு அவள் வந்து விட்ட தாக நினைத்தேன்." "உனக்கு கீதா இருக்குமிடம் தெரியும் சொல்ல மறுக்கிறாய் அவள் எங்கே?" என்றார்.

"நான் வந்த விஷயம் இதுதான். நடிகை மிருதுலதாவுக்கும் தங்களுக்கும் என்ன உறவு?"

கேள்வியின் போக்கைவிட அதிலுள்ள தொனி அவருக்குப் பிடிக்கவில்லை.

"ஏன் பத்திரிகைகள் படித்தாயோ?"

"என்ன உறவு? தங்கள் குமாரியா?"

"குமாரியாக இருக்கக் கூடாதா?"

மீண்டும் கேட்டான். அவர் பதில் சொல்லவில்லை.

"நடிகை மிருதுலதா தங்கள் குமாரியா?"

"ஆமாம், யார் சொன்னது?"

"யார் சொன்னால் என்ன? அவள் உங்கள் குமாரியா?"

"ஆமாம், எனது மகள்."

"இருவரும் சகோதரிகளா? கீதாவும் லதாவும்?"

"இல்லை."

"அப்படியானல்?"

"மிருதுலதாவின் தாய் என்னுடைய......"

அவர் முழுவதும் சொல்லவில்லை. வேலைய்யா புரிந்து கொண்டான்.

"பேஷ் ஐயா, பேஷ். ரொம்ப ரொம்ப கண்யமான குடும்பம். போயும் போயும் உம்முடைய மகளைக் கட்ட இருந்தேனே!"

"யார் உனக்குப் பெண் தர இருந்தார்கள்?"

"வேஷதாரிகள் தான் அதிக பக்திமான்களாகவும் யோக்கியர்களாகவும் நடமாடுகிறார்கள். அத்தனையும் அயோக்கியத்தனம்."

"தம்பி. இது என் வீடு. அவமரியாதையாகப் பேச நான் வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கவில்லை. என் மகள் கீதாவின் புத்தியைப் பேதலிக்கச் செய்து நீ அழைத்துச் சென்றிருக்க வேண்டும்."

"எல்லோருக்கும் உங்கள் புத்தி இருக்காது. கீதாவை யார் கண்டது? யாருக்கு வேண்டும்; நீயும் உன் மகளும்?"

"மிஸ்டர் இனி இங்கே வேலையில்லை."

"பேசாதே, கிழட்டுப் பிணமே! நீயும் மிருதுலதாவும் ஆடுகின்ற நாடகங்கள் அங்கம் அங்கமாக வந்து சந்தி சிரிக்கின்றன."

"ஓகோ, அதனால் தான் தர்மிக்குக் கோபமோ?"

"இந்த நாடகமாட அப்பன்—மகள் உறவு என்று விளம்பரமா? கீதா உங்கள் நாடகத்தைக் காணச் சகிக்காமல் போயிருக்க வேண்டும்."

"அத்தனையும் பொய். தம்பி அபாண்டமான அச்சு வார்த்தைகளை நம்பி ஏமாந்து போகாதே! கீதா எப்படி எனக்கு மகளோ, அப்படியே என் அன்புக்கு உரியவள் மிருதுலதா. அது ஒரு கதை."

"உங்கள் குடும்பத்திற்கே ஒரு கும்பிடு. மகராஜர்களாக இருங்கள்" என்று மாடிப்படி இறங்கி வந்துவிட்டான். அவன் மாடிப்படி இறங்குவதும் மோகனரங்கன் மாடிக்கு ஏறுவதும் ஒரே சமயமாக இருந்தன.

"யார் வேலய்யாவா? வணக்கம்! வாருங்கள் கீழே." வேலய்யாவுக்குப் பேசவே பிடிக்கவில்லை. மோகனரங்கம் வேடிக்கையாக முதுகில் தட்டி, "நளினி வீட்டில் கீதாவைப் பார்த்ததாக இப்போது தான் தகவல் கிடைத்தது. திருவல்லிக்கேணி போய் விசாரித்தேன். அங்கேயே இரண்டொரு நாள் கீதா இருந்தாளாம் இன்று அதிகாலையில் தங்கள் தமையனும் தாயாரும் காரில் வந்து அழைத்துப் போனார்கள். எனக்கு இது கேட்ட பிறகு நிம்மதி ஆயிற்று. அப்பாவிடம் கீதா பத்திரமாக இருக்கும் விபரம் சொல்லிவிட்டு வருகிறேன். இங்கேயே நில்லுங்கள்" என்றபோது வேலய்யாவுக்கு இன்னும் ஆச்சர்யம் அதிகமாயிற்று.

அம்மா கூடத் தனக்கு எதிரி! அப்லே அஞ்சலேதான் தனக்கு உற்றவளாக இருக்கிருள். வேலேய்யாவுக்கு அந்த வீட்டில் நிற்கப் பிடிக்கவில்லே யென்ருலும் மேலும் விபரங்கள் கிரகிக்க ஆத்தி ரத்தை அடக்கிக் கொண்டு நின்றுன். ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருந்தது. தடதடவென மாடிக்குப் போனவன் ரத்தினச் சுருக்கமாக விஷயத்தைச் சொல்லி விட்டு தடதடவென்று இறங்கி வந்தான். "அப்பா தங்களேக் கோபித்துக் கொண்டதற்கு வருந் திஞர்கள்" என்று பேச்சை ஆரம்பித்தான்.

"அது சரி. வரும்போது எங்கள் பங்களாவில் போய் பார்த் தீர்களா?"

"அங்கே அஞ்சலே மட்டும் இருந்தாள். வேறு யாரும் இல்லே."

"அப்படியா? ஒரு விஷயம் கேள்விப்பட்டிருக்கலாம்."

"என்ன?"

"பத்திரிகைகள் தாறுமாருக எழுதியதைப் பார்த்தீர்களா?"

"நீங்கள் நினேத்ததில் அதிசயமில்லே. கீதாகூட அப்படி நினேத்து விட்டாள்; அப்பாவுக்கு அந்தப் பெயர் வரவும். வேண் டுமா?"

"அப்படியாஞல், உங்கள் பேச்சை நம்பலாமா?"

"நம்புங்கள். மிருதுலதா என் தங்கை! மிருதுலதா என் தங்கை! அப்பாவின் அன்புக் காதலியாக இருந்தாள் மிருது லதாவின் தாய். கீதாவும் நானும் மனேவியின் மக்கள். அவள் காதலியின் மகள்."

"நிஜமாகவா? கோவலனுக்கு வாய்த்த மணிமேகலே போன்ற வள் லதா?"

"ஆமாம்?"

"நானும் தவருக எண்ணி விட்டேன். தங்கள் தகப்பஞரின் நடத்தைகூட இப்படி இருந்திருக்கும், என்பதை யார் கற்பனே செய்ய முடியும்?"

"இதெல்லாம் இப்போது எதற்கு? இனி ஆக வேண்டியது என்ன? பங்களூர் விஜயம் எப்படி? முகூர்த்தப் புடவைகள் எடுக்கப் போயிருப்பதாகத் தங்கள் தாயார் சொன்ஞர்கள்."

"மன்னிக்கவும். என் மனம் மாறிவிட்டது. கீதா என்னவள் இல்லே."

"நின்று பேசக் கூடாதா."

"என் மனம் சரியில்லை, நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்." மோகனரங்கம் பின்னால் ஓடிவந்தும் மோட்டார் சைக்கிளில் புறப்பட்டு விட்டான். தான் வாக்குறுதி செய்தபடி ரிவால்வரை மிருதுலதாவிடம் சேர்ப்பிக்க வேண்டும். இந்த எண்ணத்தோடு, தனது பங்களாவிற்கு வந்து கொண்டிருந்தான் வேலைய்யா.

தன் பங்களாவிற்குள் வந்து கொண்டிருந்த சமயம், அவன் இதுகாறும் நடந்திராத விசேஷ அதிசயங்கள் நடந்து கொண்டிருந்தன.

## 25. எங்கும் அமைதி

கூண்டுக் கிளி போன்று அடைபட்டுக் கிடந்த அஞ்சலையை அவள் தந்தை பட்டணம் கூட்டி வந்து மருமகனுக்கு வாழ்க்கைப் படுத்த எண்ணினார். ஆனால் அவள் வந்த காலத்திற்குள் எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்தன. சென்றுபோன சம்பவங்களை அவள் எண்ணமிட்டுக் கொண்டிருந்த சமயம், மோகனரங்கம் "கீதா இருக்கிறாளா" என்று தேடி வந்தான்.

விபரம் அறிவித்தாள் அஞ்சலை. "கீதாவும் எங்கள் அத்தை காமாட்சியம்மாளும் ரங்கசாமியும் திருவல்லிக்கேணியிலிருந்து புறப்பட்டுக் காரில் வந்தார்களாம்" என்று சொன்னதைக் கேட்டதும் அஞ்சலைக்கு நிச்சயமாகிவிட்டது. தன் தாயை அழைத்துப் போய்க் கீதாவைக் கூட்டிக்கொண்டு எங்கோ மறைந்து விட்டார் பெரிய அத்தான்

அஞ்சலை சிந்தனை செய்தாள். மோகனரங்கம் விடைபெற்றுச் சென்ற பின்னர் அவள் சுவரில் சாய்ந்தபடியே சிந்தனையில் ஆழ்ந்தாள். அவள் சிந்தனையைக் கலைப்பது போல, மோட்டார் ஹார்ன் கேட்டது. வேலைய்யாவை எதிர்பார்த்திருந்தவள் மோட்டார் வரவே எட்டிப் பார்த்தாள். கீதா, காமாட்சியம்மாள், ரங்கசாமி மூவரும் வந்தார்கள். அவர்கள் முகத்தில் விழிக்கப் பிரியமின்றி வீட்டிற்குள் போய்விட்டாள். காமாட்சியம்மாள் காரிலிருந்து இறங்கினாள். கீதா இறங்கி நடக்க ஆரம்பித்ததும், "நில் கீதா, இப்படி வாடாப்பா ரங்கசாமி" என்று ஜோடியாக வாசல் முன் நிற்க வைத்து, "அம்மா அஞ்சலை சீக்கிரம் ஆலத்தி

எடுத்துவா!'' என்று உத்தரவிட்டாள். மனசில்லாவிட்டாலும் யந்திரம் போல மஞ்சள் பொடியைச் சுண்ணாம்பு நீரில் கலக்கிக் குங்குமச் சிமிழ் எடுத்து வைத்துவிட்டு வெளியே வந்தாள். அவள் நடையில் உற்சாகமில்லை. பொம்மை மாதிரி வந்து "ஆலத்தியா?'' என்று கேட்டாள்.

"சீக்கிரம் கொண்டுவா, இதோ பார் பெண்ணும் மாப்பிள்ளையும்'' என்று ஆவல் கொந்தளிக்கச் சொன்னாள் காமாட்சியம்மாள்.

அஞ்சலைக்கு மனம் வேதனைப்பட்டாலும் காமாட்சியம்மாள் சொல்லுக்குப் பணிந்து ஓடோடி ஆலத்தித் தட்டைக் கொண்டு வந்து திலகத்தை எடுத்துக் கீதாவுக்கு இட்டாள். இடும்போது அவளுக்கு உடம்பு நடுங்கிற்று. உடல் வெடவெடக்கப் "பொட்டுப் போட்டுக் கொள்ளுங்கள், அத்தான்" என்று விஷமமாகச் சிரித்தாள்.

ஆலத்தி நடந்துகொண்டிருந்த சமயத்தில் வேலைய்யா நுழையவே அவனுக்கு மூளையே கலங்குவது போலிருந்தது. அவன் முகத்தில் விழிக்க அஞ்சியவளாய்க் கீதா புது நாணமும் புத்தழகும் பொங்க, மெதுவாக வீட்டிற்குள் நழுவிவிட்டாள்.

"ஒரு வகையாக உன் அண்ணன் கல்யாணம் முடிந்தது. உனக்கு இதிலே மனக் கஷ்டமில்லையே?'' என்று வேலைய்யாவை நெருங்கிக் கேட்டாள் தாய். வேலைய்யாவுக்கு வானமே பெயர்ந்து தலையில் விழுந்து மூடிவிட்டது போலிருந்தது. பல்லைக் கடித்தான், பதறினான், மனதை அடக்கிக்கொண்டு விக்கினான்.

"அண்ணா, நீங்கள் அன்றிரவு என்னைச் சுட்டிருந்தால் இதை விடச் சந்தோஷமுள்ளவனாக இருப்பேனே'' என்று கண்ணீர் மல்கப் பேசினான். "இனியாவது கீதாவுக்கு வஞ்சனை செய்யாது வாழ்ந்தால் சரி, அண்ணா'' என்று முடித்தான்.

அதற்குமேல் பேசாமல் கண்ணீர் உகுத்தபடியே தன் அறைக்குள் போய் விழுந்தான். அவனுக்கு உலகம் இருண்டது. தன் வாழ்வில் பாலைவனம் சூழ்ந்து மணல்வாரி பெய்வதாக எண்ணினான். எண்ணினாலும் ஏக்கமிட்டாலும் இனிக் கீதா அன்னியன் மனைவி. அதிலும் அண்ணனுடைய தர்ம பத்தினி' மதனி. மரியாதைக்குரிய தெய்வமாகிவிட்டாள்.

வீட்டுக்குள் இருக்கப் பிடிக்காமல் வேலையா வெளியே புறப்பட நினைத்த சமயம் அஞ்சலை "இன்றைக்கு வீட்டில் விருந்தாம்; உங்கள் அம்மா சொல்லச் சொன்னார்கள். இனிமேல்தான் கீதா அக்கா வீட்டுக்குக் கலியாணம் முடிந்த தகவலையும் சொல்லி விடப் போகிறார்களாம்'' என்று வந்து குழறிச் சொன்னாள்.

''எக்கேடோ கெடட்டும், நீ போய்த்தொலை!'' என்று புறப்பட்ட வேலையா மேஜையைத் திறந்து ரிவால்வரை எடுத்தான்.

''அத்தான்.''

அந்தக் குரலின் இனிமையும் ஏக்கமும் வேலையாவின் நெஞ்சைத் தீய்த்தது. இதுவரை கேளாத குரலில் பாச ஒலி கேட்கிறது புறப்பட இருந்தவன் தயங்கினான்.

''என்ன அஞ்சலை?'' அவனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. சோகமே உருவமாக எதிரே நின்ற அஞ்சலையின் முகம் அவனுக்கு வேதனை தந்தது.

''ஒன்றுமில்லை'' என்று கூறி முந்தானையால் முகத்தைத் துடைத்துக்கொண்டாள்.

வீட்டுக்குள்ளிருந்து காமாட்சியம்மாள், ''பார்த்தாயா கீதா எவ்வளவு அழகான பட்டுப் புடைவை'' என்று பாராட்டுவதும், கீதா அதைக் கேட்டு மகிழ்வதும் காதில் வந்து விழுந்தன.

வேலையாவுக்கு ஜில்லிட்டது. அவன் கனவுகள் கலங்கித்தெறித்து விட்டன. கைப்பிடிக்கவேண்டிய கீதா தெய்வமாகிவிட்டாள். இனி அவள் தொழப்படவேண்டிய மதனி. அவன் சித்தம் கலங்கிற்று.

அஞ்சலையின் மனம் புரிந்தாலும், வேலையாவுக்கு இரக்கம் பிறக்கவில்லை. தலை கவிழ்ந்து நின்ற அஞ்சலையை "போம்மா; அஞ்சலை! உனக்குக் கொடுத்துவைக்கவில்லை. அவ்வளவுதான்" என்றான். அவன் பேச்சுக்குப் புறம்பாகத் தன்னைச் சாடை காட்டிப் பேசிய பேச்சு அந்த அபலைக்குப் புரியவில்லை.

''நான் அதை நினைத்து அழவில்லை, சின்னத்தான்.''

ஒருவரை ஒருவர் அர்த்தமின்றிப் பார்க்கவே கண்கள் சந்தித்தன. நாணிக் கவிழ்ந்தனர்.

''அஞ்சலை, அண்ணாவின் வாழ்வு சந்தோஷமாயிருந்தால் சரி, இனியாவது இக் குடும்பத்தைப் பற்றிய என்னுடைய பாரம் பொறுப்.........''

''அதை ஏற்றுக்கொள்ளும் பெருமையை எனக்குக் கொடுக்கலாம்!''

பச்சையாகத் தன்னுள்ளத்தைச் சொல்லிவிட்டாள் அஞ்சலை.

''என்ன அஞ்சலை?''

''ஆமாம், அத்தான்! ரிவால்வரை எடுத்து அத்தையவர்களிடம் கொடுத்த விநாடி முதல், என்னுள்ளம்......''

வேலய்யா புரிந்துகொண்டான். ஆனாலும் எதிர்பார்த்த அளவுக்கு மேல் ஏமாற்றம் ஏற்பட்ட காரணத்தால், அன்புப் பிச்சை கேட்கும் அந்தக் களங்கமற்ற பெண்ணுக்கு அவன் பதில் சொல்லத் திகைத்தான்.

''தங்களுக்கு மனமில்லையென்றால், நான் வந்த சுவடு தெரியாமல் ஊருக்குப் போய்விடுகிறேன்.''

சொல்லுவதற்குள் அவள் விக்கினாள். அவள் கேட்ட மாங்கல்யப் பிச்சையை அளிக்க அவன் தயங்கினான். அவள் நெஞ்சம் உடைவதைக் காணச் சகிக்காமல் ''அஞ்சலை, என் மனம் சரியாக இல்லை. இன்னும் இரண்டு மூன்று தினங்கள் சென்ற பிறகு நீ ஊருக்குப் போகலாம். எனக்கு இந்த வீட்டுக்குள் இருப்பது நெருப்பாக இருக்கிறது'' என்றான்.

வீட்டுக்குள்ளே கீதாவின் சிரிப்பொலி கலகலவெனக் கேட்டது.

அந்தக் கேளிக்கையோடு கலந்து; ரங்கசாமியின் பயங்கரச் சிரிப்பும் வந்தது. புது மணத் தம்பதிகளின் இன்பமும் இனிமையும் வீட்டுக்குள்ளே கும்மாளமிட்டது.

''உங்கள் இஷ்டம், அத்தான்!'' என்று கூறி அஞ்சலை முகத்தைத் துடைத்துக்கொண்டு சமையல் கட்டுக்குள் போய்விட்டாள். தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற ரிவால்வரை எடுத்துக்கொண்டு மிருதுலதா வீட்டில் சேர்ப்பித்து விடுவது; பங்களூர் போய் நாகோஜி ராவ் வீட்டில் ஒரு மாதம் தங்கியிருப்பது; குடும்பம், காதல், ஏமாற்றம் யாவற்றையும் மறந்தே விடுவது'' என்று முடிவு செய்தான் வேலய்யா.

இந்தச் சிந்தனையில் மாம்பலத்திலிருந்து மைலாப்பூர் நோக்கிப் போனான் அவன். கலைக் கோவில் நெருங்கிக் கொண்டிருந்தது.

புது மருமகள் வந்த குஷியில் காமாட்சியம்மாள் பொங்கிப் போனாள். ஆடம்பரமாகக் கல்யாணம் செய்ய நினைத்தவளுக்குக் காதும் காதும் வைத்தமாதிரி ரங்கசாமி—கீதா திருமணம் முடிந்ததில் மனக் கசப்பு இருந்தாலும், கல்யாணம் முடிந்ததே என்று வெகு திருப்தி. இளைய மகன் திருமணத்தைச் சிறப்பாக நடத்தவும் கற்பனை செய்துகொண்டு வேலய்யா எடுத்து வந்த பட்டுப் புடைவைகளில் ஒன்றைக் கீதாவுக்குக் கட்டி அழகு பார்த்தாள்.

"அஞ்சலைக்கு என்னைப் பிடிக்காது" என்று ஆரம்பித்தாள் கீதா.

"ஏனம்மா உன்மீது எனக்கென்ன?" என்று அசட்டுத்தனமாகச் சிரித்தாள் அஞ்சலை.

"நீ இருக்கவேண்டிய ஸ்தானமல்லவா?"

"நான் பட்டிக்காட்டில் இருக்கப் போகிறேன். நாளை இரவு வண்டியில் பிரயாணம். அப்பாவை எதிர்பார்க்கிறேன். வந்ததும் புறப்படவேண்டும்."

"நான் வந்ததும் நீ ஓட வேண்டுமா?"

"அவள் விளையாட்டுக்குச் சொல்கிறாள், கீதா!" என்று காமாட்சியம்மாள் சமாதானம் செய்தாள்.

"காலையில் உங்கள் அண்ணன் தேடி வந்தார்கள், இரண்டு மணி நேரத்திற்கு முன்னதாக."

"நீ என்ன சொன்னாய்?"

"இங்கே இல்லை என்றேன்."

"நாங்கள் ரிஜிஸ்தர் ஆபீஸில் கையெழுத்திட்டுக் கொண்டிருந்தோம்" என்று ஜம்பமாகச் சொன்னான் ரங்கசாமி, வெற்றியின் பெருமிதம் கெக்கொலி கொட்டிற்று.

"அந்த ஞான திருஷ்டி எனக்கேது? உங்கள் கல்யாணம் பற்றி மைத்துனிக்குச் சொல்ல வேண்டாமோ" என்றாள் அஞ்சலை

"அது யார் மைத்துனி?" என்றாள் கீதா.

"கீதாவின் அக்காவான மிருதுலதா அம்மா இருக்கிறார்களே, அவள்தான் மைத்துனி."

"அவள்தான் செத்துச் சாம்பலாகி விட்டாளே!" என்றாள் கீதா.

"காலையிலே இங்கே வந்தாளே!"

"வந்தாளா?" என்று திடுக்கிட்டாள் கீதா.

"அதை கேட்டு நீ கூட பயப்படுகிறாயா?" என்று கூறிவிட்டு ரங்கசாமியைப் பார்த்தாள் அஞ்சலை.

"அப்படியானால்?" கணவனை முறைத்துப் பார்த்தாள் கீதா. ரங்கசாமியின் குரல் கம்மிற்று.

"கீதா, பெண் பாவம் பொல்லாது. அவளை எப்படிக் கொல்வது?"

"என்னை மணம் செய்ய ஒரு பொய் சொன்னீர்கள்."

"இதுதான் கடைசிப் பொய், கீதா" என்றான் அசட்டுத்தனமாக.

காமாட்சியம்மாள் குறுக்கிட்டு ஒருவர் சாவினால் பிறருக்கு ஏற்படும் தண்டனைகளைக் கீதாவுக்கு விளக்கிச் சொன்னாள். கழுத்தைக் கொடுத்து அசட்டுப் பட்டம் வாங்கிவிட்ட பின்பு கீதாவுக்கு வீரம் வரவில்லை. ரோஷமே வந்தது.

"உன்னைப் போலவே நானும், அவள் இருக்கிறாளோ, செத்தாளோ என்று நினைப்பதில்லை, கீதா!" என்றான் ரங்கசாமி.

"என்ன இருந்தாலும் நீங்கள் கோழை! இப்படிப் பொய் சொல்லி இருக்கக் கூடாது," என்று கடுமை குரலில் இழையச் சொன்னாள் கீதா.

"தவறுதான் மன்னித்துக் கொள்."

"ஏது ஏது? பெரிய அத்தான், கீதா அக்காவுக்குத் தோப்புக் கரணம் போட ஆரம்பித்துவிட்டீர்களா, அதற்குள்? அப்படியே போடுங்கள்! ஒன்று இரண்டு எண்ணுகிறோம் நாங்கள்."

எல்லோரும் வீடு குலுங்கச் சிரித்தார்கள். அஞ்சலை வேடிக்கையாகச் சொன்னாலும் சிரிக்கவில்லை. சிரிப்பு வருமா நெருப்புள்ள இடத்தில்?

## 26. சாந்தி

கலைக் கோயில் பங்களாவின் ஓர் அறை.

அங்கே பிரேத மௌனம் குடிகொண்டிருந்தது. எல்லோரும் வாய்மூடி மௌனிகளாக இருந்தார்கள். வேலைய்யா, மிருதுலதா இருவருக்கும் நடுவே உள்ள சோபாவில் ஜட்ஜு நீலமேகம் இருந்

தார். மிருதுவின் மேஜையில் ரிவால்வர் அநாதைக் குழந்தை போலக் கிடந்தது.

"இதோ இருக்கிறது என் உயிரை வாங்க என் அண்ணனிடம் தாங்கள் அனுப்பிய எமன்! இனி அவன் உங்கள் பேச்சுக்கு வர மாட்டான்."

"அது என்ன நம்பிக்கை?"

"ஏன் அதிகம் பேசுகிறாய், மிருதுலதா? பேச்சை விடு" என்றார் நீலமேகம்.

"என் அண்ணனும் கீதாவும் கல்யாணம் செய்துகொண்டார்கள். அவர்கள் வாழ்வில் நீ குறுக்கிடாதே. உன் தங்கையாவது இனிதாக வாழட்டும்" என்றான் வேலய்யா.

"கல்யாணமா? கீதாவும் ரங்கசாமியும்?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள்.

"ஆமாம், ஆலத்தி எடுத்தவள் அஞ்சலை!" என்று பேசிக் கொண்டே வெளியே நகர்ந்தான்.

நீலமேகம் உணர்ச்சி தாங்காது விழித்தார். வெறியனைப் போல உரக்கப் பேசினான் வேலய்யா. உணர்ச்சித் துடிப்பு அதிகமாக இருந்தது. அவன் நடையைத் தாண்டப் போனான். வழியில் வந்து நின்று மறித்தாள்.

"அன்பரே, முடிவாக என் வேண்டுகோள். இப்போதாவது என்னை ஏற்றுக்கொள்ளக் கூடாதா?" என்று கரத்தைப் பிடித்தாள். அவன், "சீ தூர விலகு" என்று தள்ளினான். நீலமேகம், "மிஸ்டர், இவள் என் மகள். தமயனும் தம்பியும் என் மக்களை மணப்பது கண்டு ஆனந்தமே கொள்ளுவேன். இவள் பற்றிய பிரசுரங்கள் பொய்" என்று கையைப் பிடித்துச் சொன்னார்.

"போ தூர" என்று நகர்ந்தான்.

"என்னை உதாசீனம் செய்துவிட்டீர்கள்?" கடுமை தொனித்தது அவள் குரலில்.

"ஏன் கத்துகிறாய், பிசாசே?"

"பிசாசு செத்த பிறகு வந்து உயிரை வதைப்பது."

"நீ உயிரோடு பல நபர்களைக் குடித்த பிசாசு."

"என் வார்த்தைக்கு உங்கள் இதயத்தில் இடமில்லை; கெஞ்சிக் கேட்கிறேன். நான் வாழ்ந்தது, வாழ்வது தங்கள் அன்புக்காக."

"அதோ இருக்கிறதே கற் சுவர், அதனிடம் போய் முட்டி அழு."

"அப்படியானால்......" என்றாள்...... அடுத்த விநாடி அவள் குரலும் கொதிப்புப் மாறின. "இந்தத் துப்பாக்கிக்கு இரையாகப் போகிறீர்கள்?" என்று கையில் பிடித்துப் பயங் காட்டினாள். நீலமேகம் பயந்துவிட்டார் "லதா, லதா, அபாயம்" என்றார்......

"இருப்பதை விட இறப்பது மேல். சுட்டு விடுவாய் என்று பயப்படவில்லை. சுடு. நான் செத்த பிணம். கீதா என்னவள் இல்லை என்றதுமே நடைப்பிணம் ஆனேன். நீ சுடப் போவது என் பிணத்தையே."

"பிணமா? இல்லை மனமோகன சுந்தர புருஷர்!"

"சை......" என அவளைத் தள்ளினான்.

"அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்களை மன்னியுங்கள்; நீங்கள் தெய்வம்!"

"நான் மனிதன். ரோஷமுள்ளவன். கல் போன்ற தெய்வமன்று!"

அவள் கண்கள் சுழன்றன; பெண்மைக்குரிய சாகஸம், மிருகத் தன்மை போய் வெறியும் வீண் தாபமும் ஏற்பட்டன.

"நான் விளையாடவில்லை, சாவு பயங்கரமானது" என்று எச்சரித்தாள்.

"சாவு ஒன்றும் உலகத்திற்குப் புதிதல்லவே!"

"பிணத்துக்கு உயிர் ஊட்டத்தான் நான் கேட்கிறேன். யோசித்துப் பாருங்கள். என்னைப் பற்றிய பேச்சுக்கள் அவதூறானவை."

மீண்டும் அவள் குரலில் ஏக்கமும் கெஞ்சலும் இருந்தது ஓடியே வந்து எதிரே நின்றாள். வேலய்யா லட்சியம் செய்யாமல் தள்ளிவிட்டு நடந்தான். கோபங்கொண்டவள் "இன்றோடு என் ஆயுள் முடிந்தது" என்றாள்.

"உலகத்திற்குச் சுபிட்சம் பிறந்தது" என்று கசப்பிலும் சிரித்தான்.

"அத்தனை பரிகசமா? என்னோடு இரு உயிர்களாகப் போவது நலம்."

அவள் குறி பார்த்தபோது நீலமேகம் திடுக்கிட்டு 'வேண்டாம், வேண்டாம்' எனக் கத்தினார். தன் வாழ்வில் ஏற்பட்ட கசப்பு, தன் லட்சியம் சிதைந்த கோபம், தன்னை அலட்சியம் செய்த வேதனை எல்லாம் சேர்ந்து 'பழி வாங்கு' என்றது அவள் மனசு.

ரிவால்வரை எடுத்துச் சுட்டாள். மிருகம் மனிதனைக் கொன்றது. வேலையா தடாலென்று பூமியில் வீழ்ந்தான். அடுத்த விநாடி தன்னையும் சுட்டுக் கொண்டாள் மிருதுலதா. இரு ஆவிகளும் பிரிந்தன. கண் மூடி இமைக்கு முன் நடந்த இந்த வேதனை தாங்க முடியாமல் நீலமேகம் வீழ்ந்தார்.

மனோரஞ்சிதம் மடிந்தது!

குண்டப்பா ஓடோடிப் போய் டாக்டர் ஒத்தாசைக்குப் பாடு பட்டான். டாக்டர் வந்தார். "குண்டு பட்டு வேலையாவும் மிருதுலதாவும் போய் விட்டார்கள்! அந்த அதிர்ச்சியில் மூர்ச்சையாகி விட்டார் நீலமேகம். பிழைப்பது கடினம்" என்றார் டாக்டர். இந்த வேளையில் அங்கே காலடி ஓசைகள் பல கேட்டன.

மோகனரங்கம் வந்தான்; புது மணத் தம்பதிகள் வந்தார்கள் எல்லோரும் அழுதார்கள், துடித்தார்கள். போன உயிர் போனதே. வேலையா, நீலமேகம், மிருதுலதா மூவரும் விழிக்காத தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்கள்.

ஒரு வாரத்திற்குப் பின் தன்னுடைய மகளைக் கூட்டிக்கொண்டு பெருமாள் பிள்ளை சென்னையை விட்டுப் புறப்பட்டார். காமாட்சியம்மாள் "அந்த வக்கீல் பையனுக்கு யார் இருக்கிறார்கள்? உங்களைப் போல் குடும்பத்தில் ஒரு பெரிய மனிதர் இருந்தால் அல்லவா நல்லது? அஞ்சலையை அவனுக்குக் கொடுத்து விடுங்கள். வேலையா நமக்குக் கொடுத்து வைக்கவில்லை என்று வாதாடினாள்.

கீதா, "ஆமாம், நாம் ஒன்று நினைக்கக் கடவுள் வேறொன்று நினைத்தார். என் அண்ணாவுக்கு லதாவின் சொத்துக்கள் வேறு வரப் போகின்றன. தயவு செய்து நடந்ததை மறந்து விடுங்கள்" என்று காலில் விழுந்து பெரியவரைக் கெஞ்சினாள்.

பெருமாள் பிள்ளை திகைத்தார். அறிவும் சாதுர்யமும் அன்பும் கனிந்த வேலையாவின் பிரிவு அவரைப் பித்தனாக்கி விட்டது. குடும்ப நலத்துக்காகவே அவன் செத்துப்போன மாதிரி அனுதாபப் பட்டார்.

"நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. அஞ்சலை, நீ என்ன சொல்லுகிறாய்" என்று மகளை பார்த்தார்.

"நான் பட்டணத்தை விட்டு எவ்வளவு சீக்கிரம் புறப்பட முடியுமோ அவ்வளவு சீக்கிரம் புறப்படவே எண்ணுகிறேன் எனக்குத் திருமணம் வேண்டாம்!"

ரங்கசாமி அவளுடைய கடின சித்தத்தைக் கண்டு கண்ணீர் விட்டான். மோகனரங்கத்தின் குணம், கல்வி, பணம் எல்லாம் பற்றிச் சொற்பொழிவு செய்தான். விழலுக்கு இறைத்த நீர் ஆயிற்று.

கீதா, "அஞ்சலை, நீ கலியாணமின்றி இருந்தால் என் அண்ணாவும் அப்படி இருக்கப் போகிறார்!" என்றாள்.

"எனக்கு இந்த உலகத்தில் யாரைப் பற்றியும் கவலை இல்லை. இறந்து போன சின்ன அத்தானை எவ்வளவு சீக்கிரம் போய் அடையப் போகிறேனோ நான்?"

அவள் உணர்ச்சி மேலீட்டால் தகப்பனாரை வந்து பிடித்துக் கொண்டாள். அவள் பார்த்த பார்வையைக் கண்டு, "உன் இஷ்டம், அம்மா! நான் கட்டுப்பாடு செய்யவில்லை" என்றார் தந்தை.

எழும்பூர் ரெயில்வே ஸ்டேஷன். இரண்டாம் வகுப்பு வண்டியில் தகப்பனாரும் மகளும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஊர் நோக்கிப் புறப்பட்டார்கள். அந்த நிமிஷம் வரை நம்பிக்கை வைத்திருந்த கீதா, ரங்கசாமி, மோகனரங்கம், காமாட்சியம்மாள் எல்லோரும்வண்டி நகர்ந்த பிறகு வெறுங்கையோடு திரும்பினார்கள். யாரையும் மணக்காது தாழம்பூ இரயிலுக்குள் அடைபட்டுவிட்டது.

மறுநாள் காலையில், "ரெயிலில் நான் தூங்கி விட்டேன். என்னோடு வந்த அஞ்சலையைக் காணோம். நான் சென்னைக்கே வருகிறேன்" என்று திருச்சி ஜங்ஷனிலிருந்து தந்தி கொடுத்தார். பெருமாள் பிள்ளை.

அதே தினம் பத்திரிகையில் ஒரு செய்தி வந்தது. "விழுப்புரத்திற்கும் திருச்சிக்குமிடையில் இரயிலிலிருந்து விழுந்த பெண்ணின் பிரேதம் ஒன்று கிடக்கின்றது. இதைப் பற்றிப் போலீசார் புலன் விசாரிக்கிறார்கள்" என்று பத்திரிகைகள் எழுதியிருந்தன.

விழுந்த தாழம்பூ உலர்ந்து விட்டது.

முற்றும்